ஶ்ரீ:

अस्मद्गुरुभ्यो नमः

"பக்தி தாரை" என்ற இந்த புஸ்தகம், ஸ்ரீ பரமாசாரியரின் ஆக்ஞைபடி, அடியேனுக்கு எழுதும் பாக்யம் கிடைத்தது. இந்த புஸ்தகத்தை அடியேனுடைய ஆசார்யன் திருவடிகளுக்கு சமர்ப்பிக்கிறேன். லோகத்தில் நான் என்ற மமதையைவிட்டு லோக ரக்ஷகனை ஸ்ரீமத் லக்ஷ்மீ நாராயணனுடைய கமலத் திருவடியை சரணம் அடைய வேண்டும்.

ஸ்ரீ:

# "பக்திதாரை" பிறப்பு

எல்லோரும் தங்களால் எப்படி எதைக்கொண்டு தங்கள் வ்யாஸங்கள் எழுதப்பட்டிருக்கிறதென்று முன்னுரையில் பேசுவார்கள். அதேமாதிரி அடியேனுடைய "பக்தி தாரை" எப்படி ஆரம்பிக்கப்பட்டு எழுதப்பட்டது என்பதைப்பற்றி கீழே கொஞ்சம் சொல்லப்பட்டிருக்கிறது அடியேனால். அது அடியேனுடைய சுய சரிதத்தில் அடங்கியுள்ளதனால், சுய சரிதம் சுருக்கமாக கீழே சொல்லப்பட்டிருக்கிறது:—

அடியேனுடைய ஜனனம் கோயம்பத்தூரில் 8-11-1890, இரவு 12-15 மணிக்கு, ஏகாதசி திதி, உத்தர நக்ஷத்திரம். என் பெற்றோர்கள் ஸ்ரீமான் எஸ். கஸ்தூரி ரங்கய்யங்காரும், கனகம்மாளும். அடியேனுடைய தாயார் கும்பகோணத்தில் வஸித்து வந்த சுத்த வைதிக (வேத நெறிபட்ட ஆசார அனுஷ்டான முள்ள) மாக இல்லாமல், பெரிய பணக்காரர்களாக இல்லாமலிருந்த குலத்தில் பிறந்தவள். அதனால் அவள் தெய்வ பக்தியோடு ஆசார சீலையாயிருந்தாள் அவள் ஆயுஸ் முழுமையும். அடியேனுடைய தகப்பனாரோ, கும்பகோணத்திற்கு அருகிலுள்ள இன்னம்பூரைச் சேர்ந்த, மிகவும் சாதாரண பணக்காரராயும், கேவல வைதிகத்தை அனுசரிக்காமல் லௌகிகத்தையும் அதிகமாக அனுசரிக்காமல் நடுத்தரமாயிருந்த குலத்தில் பிறந்தவர். அவருடைய தகப்பனார் கலெக்டர் ஆபீஸில்

உத்யோகஸ்தராயிருந்து, பிறகு ஒரு எஸ்டேட் மானேஜராக விருந்து கொண்டு தன்னுடைய மூன்று புத்ரர்களுக்கு (வரிசையாக திவான் பஹதூர் எஸ். ஸ்ரீநிவாஸராகவய்யங்கார், எஸ். சௌந்திரராஜய்யங்கார், எஸ். கஸ்தூரிரெங்கய்யங்கார்) ஆங்கில பாஷை படிப்பு கற்றுக் கொடுத்தார். அவர்கள் படிப்பில் தேர்ச்சி அடைந்து, எஸ், ஸ்ரீநிவாஸராகவய்யங்கார் பரோடா திவானுகவும். எஸ். ஸௌந்திர ராஜய்யங்கார், டிபுடி கலெக்டராகவும், கஸ்தூரிரங்க அய்யங்கார் வக்கீலாகவும் உத்யோகம் வஹித்தார்கள். அடியேனுடைய தகப்பனர் அடியேன் பிறக்கும்பொழுது கோயம்பத்தூரில் கொஞ்சம் பிரபல வக்கிலாக இருந்தார். அடியேனுக்கு 7 அல்லது 8 வயதிருக்கும் பொழுது அவர் கோயம்பத்தூரை விட்டு மதராஸுக்கு வந்து அங்கே வக்கீல் உத்யோகம் பண்ணினர். பிறகு 1905ம் வருஷத்தில் இப்பொழுதிருக்கிற "ஹிந்து" பத்திரிகையை வாங்கி, அதற்கு பத்திரிகாதிபராகயிருந்து அதை நடத்திக் கொண்டு வந்தார் தன் ஆயுஸ் முழுவதும். அடியேனும் தகப்பனருடன் மதராஸுக்கு வந்தேன். அடியேனுக்கு பன்னிரண்டாவது (1902) வயதில் உபநயநம் செய்யப்பட்டது. அப்பொழுது அடியேனுடைய தமயனுக்கும் (அவர் ஒருவர்தான் அடியேனுக்கு ஸஹோதரர்), அடியேனுடன் உபநயநம் நடத்தப்பட்டதால், அடியேனுக்கு என் தகப்பனர் ப்ரம்மோபதேசம் செய்ய முடியாமற் போய்விட்டது அதற்கு பாக்யம் அடியேனுக்கில்லாததனல். அடியேனுடைய சித்தியா-தாயாருடைய தங்கையின் புருஷன்-ப்ரம்மோபதேசம் பண்ணினர்.

அடியேனுடைய படிப்பு விஷயத்தைப்பற்றி இங்கே பேசுவோம். அது பின்வருமாறு :—

அடியேன் சென்னை மைலாபூரில் நேடிவ் மிடில் ஸ்கூல் என்ற பள்ளிக்கூடத்தில் மூன்ருவது பாரத் (7-வது வகுப்பு) தில் படித்துக் கொண்டிருக்கும் பொழுது "லோயர் ஸெகெண்டரி" என்ற பரீக்ஷை (இந்தப் பரீக்ஷையில் தேரினவர்களுக்கு அரசாங்கத்தார் அரசாங்க ஆபீஸ்களில் சேவக வேலை கொடுத்தார்கள்) யில் தேர்ச்சி அடைந்தேன். பிறகு 1907 வருஷத்தில் நடந்த பழைய மெட்ரிகுலேஷன் (இப்பொழுது அந்த பரீக்ஷைக்குப் போகாமல், எஸ். எஸ். எல். ஸி என்ற பரீக்ஷைக்குத்தான் போகிருர்கள் அநேகமாக மாணுக்கர்கள்), பரீக்ஷையில் தேர்ச்சி அடைந்து பிறகு 1908 இல் அரசாங்க பிரஸிடென்ஸி கலாசாலையில் எப். ஏ. வகுப்பில் சேர்ந்து படித்தேன். அடுத்த வருஷம் 1909-இல், எப்.ஏ. இரண்டாவது வகுப்பில் வாசிக்கும்பொழுது அடியேனுக்கு கல்யாணம் நடந்த அடுத்த வாரத்தில் டைபாய்டு (அப்பொழுது இது மிகவும் கடுமையான வ்யாதி என்று கருதப்பட்டிருந்தது. வைத்யர்களால்) ஜுரம் வந்து அதிலிருந்து தப்பிப் பிழைத்தேன். அது அடியேனை கலாசாலைக்கு படிப்பதற்குப் போகமுடியாமல் பண்ணி விட்டது. உடம்பு தேரின பிறகு மேலே சொன்ன கலாசாலையில் எப். ஏ. வகுப்பிற்கு பதிலாக ஏற்படுத்தப்பட்ட இண்டர்மீடியெட் வகுப்பில் சேர்ந்து வாசித்தும் அந்த இண்டர்மீடியெட் பரீக்ஷையில் தேர்ச்சி அடைய முடியவில்லை. இதற்குக்

காரணம் மேலே சொன்ன அடியேனை பிடித்த வ்யாதிதான் என்று அடியேனுடைய பந்துக்கள் சொன்னார்கள். அடியேனுக்கு இதுவரையில்தான் படிப்பு நடக்குமென்று பெருமாளுடைய ஸங்கல்பம் (அடியேனுடைய கர்மா) இருந்தது, அந்தப்ர காரம் நடந்திருக்கிறது. ஆகையால் இந்த ஸம்ப வத்திற்கு வேறு ஒன்றும் காரணமாகாது.

கலாசாலையில் படிப்பில் வெற்றி அடையாமல் போனாலும், வேறு விதத்தில் அடியேனுக்குவெற்றி வந்திருக்கிறது. அதென்னவென்றால்: கலாசாலைக் காக ஹாக்கி என்ற விளையாட்டுப்பந்தயத்தில் பங்கு எடுத்துக் கொண்டு மெடல்கள் (பதக்கங்கள்) அடைந்திருக்கிறேன். மேலே சொன்ன விஷயங் கள் நடந்த பிறகு, அடியேனுடைய படிப்பு நிருத் தப்பட்டு, அடியேனை அடியேனுடைய தகப்பனார் தன்னுடைய "ஹிந்து" பேப்பர் ஆபீஸில் அழைத் துக் கொண்டார். இது 1913-ம் வருஷம் ஜுலை மாதம் 1-ம் தேதியன்று நடந்தது. இன்றும் அதே ஆபிஸில் இருக்கும்படி அடியேனை பெரு மாள் செய்துகொண்டிருக்கிறார். இத்தனை வருஷங் கள் "ஹிந்து" பேப்பர் ஆபீஸில் வேலைசெய்து அடியேன் அந்த பேபருக்கு எப்படிப் பிரயோ ஜனப் பட்டிருக்கிறேனென்றால்: செய்திகள் பிரிக் கப்பட்டு தனித்தனி பக்கங்களில் பிரசுரிக்கப்படும் பேபரில். அந்த மாதிரி விளையாட்டைப் பற்றின செய்திகள் ஒரு பக்கத்தில் பிரசுரிக்கப்படுகிறது. இதற்கு அடியேன் தான் மூலகர்த்தாவென்று சொல்லவேண்டும். ஒருவரும் அடியேனை மேலே

சொன்ன வேலையைப் பார்க்கச் சொல்லாமல் தானாகவே (பெருமாளால் தூண்டப்பட்டு) அந்த வேலையை ஏற்றுக்கொண்டு ஆரம்பித்து நடத்தி வந்தேன். கொஞ்சகாலத்திற்குமுன் வரையில். இது விசேஷமான சமாசாரம் அல்லவா?

அடியேனுக்கு உபநயனம் ஆகி ஏழு வருஷங்களான பிறகு 1909 ல் கல்யாணம் ஆயிற்று. அடியேனுடைய பார்யை மதுரை வக்கீலாயிருந்த ஸ்ரீமான் கே. ஸி. தேசிகாச்சாரியரின் ஜ்யேஷ்ட புத்ரி. எங்களுடைய தாம்பத்யம் ஒன்பது வர்ஷங்கள் நடந்தபொழுது, அடியேனுக்கு இன்புளுவென்சா ஜ்வரம் வந்து பிழைத்தேன். அப்பொழுது அடியேனுடைய பார்யைக்கும் அந்த ஜ்வரம் வந்து அது அவளுக்கு ம்ருத்யுவாகி அவள் காலமாயினள். இந்த ஸம்பவதிற்கு பின் அடியேனுடைய அம்மான் பள்ளிக்கூடத்து சிநேகிதரான ஸ்ரீமான் கொரத்தூர் ஸி. என். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் அடியேனுடைய அகத்திற்கு வந்து அடியேனுக்கு [illegible] புரிந்து வந்தார். [மேலே சொன்ன ஸம்பவம் (அடியேனுக்கு ஜ்வரம் வந்தது) நடக்கும்பொழுது அடியேனுடைய தகப்பனார் ஊரிலில்லாமல் அரசாங்கத்தாரால் அழைக்கப்பட்டு ஐரோப்பாவில் நடந்த யுத்தகளத்திற்குப் போயிருந்தார்]. இந்த மாதிரியாக ஒருவருஷம் கடந்த பிறகு, அதாவது 1919 நவம்பர் மாதம் முதல் தேதியன்று, மேலே சொன்ன ஸ்வாமி (ஸ்ரீமான் க்ருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமி) அடியேனுக்கு ஸ்ரீ மஹாலக்ஷ்மி மந்த்ரபோதேசம் செய்தார். அதாவது அவர் அடியேனுக்கு ஆசார்யரா

னார். ஆசார்யர் கடாக்ஷத்தினால் அந்த ஜபம் இன்னமும் அடியேனால் நடத்தப்பட்டு வருகின்றது. இந்த ஜபம் செய்வதற்கு முன்னால் அடியேன் ஸந்தியா வந்தனம் கூட செய்யாமலிருந்தேன். அதாவது அடியேனுக்கு இப்பொழுதுதான் வைதிகத்தில் ப்ரவேசம் ஏற்பட்டது என்று சொல்லவேண்டும். அடியேனுடைய ஜபம் செய்யும் காலம் முப்பத்தாறு வருஷங்கள் கழிந்த பிறகு அடியேன் சுத்த வைதிகனாக ஆனேன். அதாவது ஒரு ப்ராம்மணன் செய்ய வேண்டிய கர்மம் (அனுஷ்டானம்) செய்யப்பட்டு வருவது. இப்பொழுது அக்னி ஹோத்ரம் தவிர மற்ற ஔபாஸனங்கள் முதலிய நித்ய கர்மாக்கள் (அனுஷ்டானங்கள்) செய்யப்பட்டு வருகின்றன. இத்துடன் தினம் மத்யாஹ்னத்தில் வேத (யஜுர்) பாராயணமும் நடந்து கொண்டு வருகிறது. அது எப்படியென்றால் 'டேப் ரிகார்டர்' என்ற யந்திரத்தில் அதை ரிகார்ட் செய்து, ரிகார்டிலிருந்து ஒரு ப்ரச்னமும், பஞ்ச (புருஷ, நாராயண, விஷ்ணு, லக்ஷ்மி, பூ, நீளா) ஸூக்தங்களையும் மேல் சொன்ன யந்திரத்தைப் பாடச்செய்து, அடியேனாலும் பாடப்படுகிற வேத பாகத்தை ஒரு வேத புஸ்தகத்தில் பார்த்து வாசித்துக்கொண்டு வரப்படுகிறது. இதனால் அடியேன் வைதிகத்திலேயேயிருந்து லௌகிகத்தைப்பற்றி ஒன்றும் கவனிக்காமல் இருந்துவிடப் போகிறேனென்று சந்தேகித்து சில பேர்கள் அடியேனை சீர்திருத்த ப்ரயத்னப்பட்டும் பிரயோஜனப்படாமல் போயிற்று. அடியேனுடைய கர்மா மேலே சொல்லியிருக்கிற மாதிரி (அடியேன் முழுவதும் வைதிகத்திலேயே ஈடுபட்டிருப்பது) இருக்கவேண்டியிருந்தால்,

அதை ஒருவராலும் தடுக்கமுடியாது. ஆனால் பெருமாள் அடியேனுடைய கர்மா மூலமாக அப்படிச் செய்யாமல் அடியேனை லௌகிகத்தையும் வைதிகத்தையும் தழுவிக் கொண்டிருக்கும்படி செய்து கொண்டிருக்கிறார்.

அடியேனுடைய ஆசார்யர் ஸ்ரீ ஸி. என். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் இரண்டு வருஷங்களுக்கு முன் பரம பதத்தை அடைந்தார். இந்த ஸம்பவம் நடப்பதற்கு கொஞ்சம் முன்னால் சொல்லியிருக்கிறார், " நீ இருக்கிற இடத்தில் (அது முழுமையும் பெருமாள் படங்களால் அலங்கரிக்கப் பட்டிருக்கிறது) பெருமாளும தாயாரும் ஸாந்நித்யமாயிருக்கிறார்கள். அந்த இடம் பெரிய க்ஷேத்ரமாகி விட்டது இப்பொழுது. இத்துடன் பெருமாள் உனக்கு 'மஹா பக்தன்' என்ற பிருதையும் அளித்திருக்கிறார்.''

மேலும் அவர் அடியேனுடைய குடும்ப விஷயத்தைப்பற்றியும் சொன்னார்:—''உனக்கு நடந்த இரண்டாம் கல்யாணம் [இது அடியேனுடைய மூத்த பார்யை போய் மூன்று வருஷங்களுக்கு பிறகு அடியேன் இனிமேல் கல்யாணம பண்ணிக்கொள்ள போவதில்லை என்று சொல்லிக் கொண்டிருந்த போதிலும்] நடந்தது. ஏன் நடந்திருக்கிறது தெரியுமா? உன்னுடைய மூத்த பார்யைக்கு ஒரு பிள்ளையும் இரண்டு புத்ரிகளும் தான் பிறந்திருக்கிறார்கள். உன்னுடைய ஸந்ததி வ்ருத்தி அடைவதற்கு இன்னமொரு பிள்ளை யாவது வேண்டுமென்று

உன்னுடைய தாயார் ஸ்ரீ லக்ஷ்மியை வேண்டிக் கொண்டதன் பேரில் உனக்கு திரும்பவும் கல்யாணம் நடந்தது. உன்னுடைய சரீரம் பிறந்ததுமுதல் உன்னுடைய மூத்த பார்யை காலமாகும் வரையில் ஒருவரால் வஹிக்கப்பட்டிருந்தது. பிறகு இன்னொருவரால் வஹிக்கப்பட்டு இப்பொழுது தனியாக ஒரு கார்யார்த்தமாக பூமியில் ஜீவித்திருக்கும்.'' அடியேனுடைய இளைய பார்யைக்கு ஒரு புத்ரனும் ஒரு புத்ரியும் பிறந்தார்கள். இந்த புத்ரிக்கு அவளுடைய 7வது வயதில் ஜீவதசை முடிந்துவிட்டது.]

அடியேனை இப்போது பெருமாள் லௌகிகத்திலும் வைதிகத்திலும் கலந்து ப்ரவேசிக்கும்படி செய்ததின் காரணம் என்னவென்றால்: அடியேன் நடந்து கொள்ளுகிற மாதிரி மற்ற ப்ராம்மணர்கள் நடந்து கொண்டு தங்கள் ஜீவதசையைக் கடந்து கொளளலாம் லோகத்தில் என்பதை அடியேனை வழி காட்டியாக வைத்து கொண்டு நடத்துகிறார் போலும்.

[ஆகையால் இந்த புஸ்தக்கத்தை வாசிக்கிறவர்கள் தங்களுடைய ஆசார்யர்களிடத்தில் இதைப் பற்றித் தெரிவித்து, அடியேனை பெருமாள் நடத்துகிற மாதிரி தாங்களையும் பெருமாள் நடத்தும்படி அனுக்ரஹிக்க வேண்டுமென்று அவர்களை ப்ரார்த்தித்து அனுக்ரஹம் பெற்று நடந்து கொள்ள வேண்டுமென்று அடியேனுடைய ப்ரார்த்தனை பெருமாளிடத்தில்.]

உன்னுடைய தாயார் ஸ்ரீ லக்ஷ்மியை வேண்டிக் கொண்டதன் பேரில் உனக்கு திரும்பவும் கல்யாணம் நடந்தது. உன்னுடைய சரீரம் பிறந்ததுமுதல் உன்னுடைய மூத்த பார்யை காலமாகும் வரையில் ஒருவரால் வஹிக்கப்பட்டிருந்தது. பிறகு இன்னொருவரால் வஹிக்கப்பட்டு இப்பொழுது தனியாக ஒரு கார்யார்த்தமாக பூமியில் ஜீவித்திருக்கும்.'' அடியேனுடைய இளைய பார்யைக்கு ஒரு புத்ரனும் ஒரு புத்ரியும் பிறந்தார்கள். இந்த புத்ரிக்கு அவளுடைய 7வது வயதில் ஜீவதசை முடிந்துவிட்டது.]

அடியேனை இப்போது பெருமாள் லௌகிகத்திலும் வைதிகத்திலும் கலந்து ப்ரவேசிக்கும்படி செய்ததின் காரணம் என்னவென்றால்: அடியேன் நடந்து கொள்ளுகிற மாதிரி மற்ற ப்ராம்மணர்கள் நடந்து கொண்டு தங்கள் ஜீவதசையைக் கடந்து கொளளலாம் லோகத்தில் என்பதை அடியேனை வழி காட்டியாக வைத்து கொண்டு நடத்துகிறார் போலும்.

[ஆகையால் இந்த புஸ்தக்கத்தை வாசிக்கிறவர்கள் தங்களுடைய ஆசார்யர்களிடத்தில் இதைப் பற்றித் தெரிவித்து, அடியேனை பெருமாள் நடத்துகிற மாதிரி தாங்களையும் பெருமாள் நடத்தும்படி அனுக்ரஹிக்க வேண்டுமென்று அவர்களை ப்rார்த்து அனுக்ரஹம் பெற்று நடந்து கொள்ள வேண்டுமென்று அடியேனுடைய ப்ரார்த்தனை பெருமாளிடத்தில்.]

ஸ்ரீ

# உள்ளுரை



நித்ய விபூதி வைபவம்

---

ஸ்ரீ

## சித்ரங்கள்

பக்கம்

ஸ்ரீ:

# பரவாஸுதேவன்



நம் போன்றவர்கள் (அதாவது லோகத்தில் நடமாடிக் கொண்டிருப்பவர்கள்) லோகம் என்ன வகையானது, எல்லாம் தானுக நடக்கிறதா அல்லது ஏதாவது ஒரு காரணத்தால் தூண்டப்பட்டு நடக்கிறதா? என்ற விசாரணை பண்ணவேண்டும். மனிதர்கள்தான் மற்றவைகளுக்கு இல்லாத அறியும் சக்தி உடைத்தாயிருக்கிருர்கள் என்று நம் பெரியோர்கள் சொல்லியிருக்கிறது நிஜமாகும்.

நம் பெரியோர்கள் சொல்லியிருக்கிருர்கள்:— "ஏதோ ஒரு காரணத்தால் லோகம் நடக்கிறது, தானுக நடந்து கொள்ளவில்லை. அந்தக் காரணம் ஒரு சக்தி, அதனுல் தூண்டப்பட்டு எல்லாம் நடக்கிறது". அந்தச் சக்தி என்னவென்றும் அவர்கள் சொல்லியிருக்கிருர்கள். அவர்கள் அநேகவிதமாக அபிப்ராயமுள்ளவர்களாக விருந்தார்கள். அதே மாதிரி மேலே சொன்ன சக்தியை வெவ்வேறு விதமாகச் சொல்லியிருக்கிருர்கள். ஆதலால் அதைப் பற்றி இப்பொழுது விசாரணை பண்ணவேண்டாம். ஏனென்ருல் அது ஒரு முடிவுக்கும் வராத விஷயம், அந்த விஷயமும் அவரவர்கள் கர்மப் (கர்மம் எல்லாம் வெவ்வேருக இருக்கும்) படிக்கு நடக்கிறபடியால். மேலும் கலியுகத்தில் எல்லாம் விபரீதமாகத்தானிருக்கும்.

அடியேனுக்கு இந்த விஷயத்தைப்பற்றி தெரிந்தது கீழே எழுதப்பட்டிருக்கிறது. அடியே னுடைய ஆசாரியர் எனக்கு வேதம் (அதாவது பெருமாள்) புரியுமென்று அனுக்ரஹித்திருக்கிறார். ஆகையால் என்னால் பெருமாளைப்பற்றிச் சொல்ல முடியும் என்று எடுத்துக்கொள்ள வேண்டும்.

ஸ்ரீமத் கீதையில் சொன்னபடி (வாஸுதேவ : ஸர்வமிதி—7வது அத்யாயம்) வாஸுதேவ : (அதா வது பரவாஸுதேவன்) தான் ஸர்வமாயிருக்க முடி யும். அதாவது மேலே சொல்லியிருக்கிற சக்தி பரவாஸுதேவன் தான்—அவன் தான் யஜமானன். ஆகையால் இந்த லோகத்தை ஆண்டுக்கொண்டு வருகிறான். அவன் எப்படி அந்த ஸ்தானத்தில் வைக்கப்பட்டிருக்கிறான் என்ற கேள்விக்குப் பதில் சொல்ல முடியாது. அந்தக் கேள்வியையும் கேட்கக் கூடாது. ஏனென்றால் அந்தமாதிரி அதிகாரம் இருக்கிறதோடு அவனாலும் அது செலுத்தப்படு கிறதென்று நமக்குத் தெரிகிறது.

அவனால் தான் லோகத்தில் எல்லாம் நடக்கிறது. இதற்கு ஒரு வாக்கியமுமிருக்கிறது : தேனவினா த்ருணமபி நசலதி [அவனாலே (அவன் உத்தரவு) யல்லாமல் புல்லும்கூட அசைகிறதில்லை].

லோகத்தில் உத்யோகஸ்தர்கள் மூலமாக ராஜ் யம் நடக்கிறதுபோல் அவனும் உத்யோகஸ்தர்களை வைத்துக் கொண்டு காரியங்களை நடத்திக்கொண்டு வருகிறான். அவன் அரசு எல்லாக்காரியமும் அதில் சரியாக நடக்குமாதலால் அழிகிற தசையை

அடையாது. அப்படி நடந்தால் அவன் இஷ்டப்பட்ட படிதான் ஆகிருக்கும்.

காலம் நான்கு யுகங்களாகப் (கிருதம், த்ரேதா, த்வாபரம், கலி) பிரிக்கப்பட்டு, வரிசையாக நடந்த பிறகு, இரும்பவும் அதே மாதிரி நடக்கிறது. அப்படி நடந்து கொண்டு வந்து இப்பொழுது 27-வது கலியுகம் நடக்கிறது. அது முடிந்த பிறகு இரும்பவும் க்ருதயுகம் ஆரம்பமாகலாம். ஏனென்ருல் அதைப்பற்றி பெருமாள் சொல்லியிருப்பதாகத் தெரியவில்லை. அவர் சொல்லியிருப்பதாவது: "இந்தக்கலியுகத்தின் முடிவில்தான் கல்கி அவதாரம் எடுத்து எல்லாவற்றையும் (அப்பொழுது எல்லாவற்றிலும் நல்லவைகளைத் (சொரூபம் மாறுபடாதது) தவிர) நாசம் செய்யப்போகிறேன். எல்லாவற்றிலும் நல்லதாக விருப்பதை மூலமாக வைத்துக்கொண்டு அவைகள் மாதிரி ச்ருஷ்டிக்கப் போகிறேன்." மேலே சொன்ன உத்யோகஸ்தர்களெல்லாம் பெருமாள் தாயாருடைய அவதாரங்கள் (அம்சமுடையவர்கள்). பெருமாளுடைய முக்யமான அவதாரங்கள் வ்யூஹங்கள் (வாஸுதேவன், ஸங்கர்ஷணன், ப்ரத்யும்னன், அநிருத்தன்), அவர்கள் (அநிருத்தனைத் தவிர) பூமிக்கே வராதவர்கள். அப்புறம் விபவங்கள் (ராம, க்ருஷ்ணாதியர்கள்), அவர்கள் யுகந்தோறும் லோகத்தில் தர்மத்தை ஸ்தாபனம் பண்ணுவதற்கும், ஸாதுக்களை ரக்ஷிப்பதற்கும், லோகத்திற்கு வந்து தங்கள் காரியத்தை முடித்துக் கொண்டு லோகத்தை விட்டுப்போய் விடுவார்கள். அந்தர்யாமி அடுத்த அவதாரம். ஒவ்வொருவருடைய

ஹ்ருதய கமலத்திலிருப்பது. பிறகு அர்ச்சாவதாரம் கோவில்களில் பிம்பமாயிருப்பது.

மேலே சொன்ன அவதாரங்களைத் தவிர, வெகு முக்யமானது (முக்யமான வேலைகளை செய்பவர்கள்) திரு மூர்த்திகள் என்று சொல்வது. அவர்களின் பெயர்கள் :— பிரம்மா, விஷ்ணு, ருத்ரன். அவர்களுடைய வேலை, வரிசையாக ; படைப்பு (எல்லாவற்றையும் உற்பத்தி பண்ணுவது) காப்பு, (எல்லாவற்றையும் காப்பது), நசிப்பு (எல்லாவற்றையும் நாசம் பண்ணுவது). இன்னம் அநேக வேறு உத்யோகஸ்தர்களையும் வேலைக்காரர்களையும் வைத்துக் கொண்டு ராஜ்யத்தை ஆண்டு கொண்டு வருகிறார் பெருமாள். நமக்காக பெருமாள் எவ்வளவோ கருணையுடன் செய்கிறார். அதற்கு நாம் நன்றிகாட்ட வேண்டும். அது எப்படி செய்வதென்றால் அவரை பூஜை செய்ய வேண்டும். அவர் யாராவது அப்படிச் செய்வார்களா, அவர்களுக்கு ஒத்தாசை செய்யலாம் என்று காத்துக்கொண்டிருக்கிறார். ஆகையால் அவரைப் பூஜிக்க வேண்டும். எப்படி பூஜிக்கிறதென்ற விஷயங்களைப்பற்றி ஒரு ஆசாரியரை சரணம் அடைந்து அவரைச்சொல்லிக் கொடுக்கச் சொல்ல வேண்டும். ஆசாரியர் யார் என்றால் பள்ளிக்கூடத்திலிருக்கிற உபாத்யாயர் மாதிரி. அவர் ஒவ்வொருவருக்கும் பிறக்கும்போதே ஏற்படுத்தப்பட்டிருப்பார். அவர் அவரவர் ஜாதியையே சேர்ந்தவராயிருக்க வேண்டும். இதற்காகத் தான் ஒவ்வொருவரையும் ஒவ்வொரு ஜாதியில் பிறக்க பெருமாள் வைத்திருக்கிறார் போலும்.

---

# லோக மாதா ஸ்ரீ மஹாலக்ஷ்மீ

லோகத்தில் ஜனங்கள் ஒருவன் நல்ல ஸ்திதி (அதாவது அவன் பெரிய பணக்காரனாக இருப்பது என்று ஜனங்களால் இப்பொழுது நினைப்பது) யிலிருந்தால் அவனைக் கண்டு பொருமைப்பட்டு தங்களுக்கும் அந்த மாதிரி (அதாவது பணம்உள்ள வர்களாக) அனுக்ரஹிக்கும்படி பெருமாளை ப்ரார்த் திக்கிறார்கள். இந்த மாதிரி செய்து கொள்வதின் தாத்பர்யம் என்னவென்றால் பணமிருந்தால் எல் லாவற்றையும் ஸாதித்துக் கொள்ளலாமென்ற எண்ணம் அவர்களுக்கு. இது சரியான காரியமல்ல. பணமிருந்தால் மாத்திரம் போதாது எல்லாவற் றையும் ஸாதித்துக் கொள்வதற்கு. **மஹாலக்ஷ்மீ கடாக்ஷம்** வேண்டும். ஏனென்றால் அப்பொழுது தான் நல்ல ஸ்திதியிலிருக்க முடியும் குறை ஒன்று மில்லாமல். அந்த மஹாலக்ஷ்மீ யார் என்று கீழே சொல்லப்பட்டிருக்கிறது.

பெருமாள் தனக்கு ஒரு சக்தியை ஏற்படுத்திக் கொண்டு அந்தச் சக்தியை ஸ்த்ரீ ரூபமாக தன் புருஷ ரூபம்போல் ஆக்கி அதற்கு மஹாலக்ஷ்மீ என்ற பெயருடன், பக்கத்திலேயே வைத்துக் கொண்டிருக்கிறார். அதாவது அவர்களிரண்டு பேர்களும் எப்பொழுதும் சேர்ந்து இருப்பார்கள். இது மாத்திரமல்ல, ஸ்ரீ மஹாலக்ஷ்மிக்கு தனது மார்புப் பிரதேசத்தில் (அதாவது தன் உடம்பில் உயிரிருக்கிற இடத்தில்) இருக்கிறதற்கு இடம் கொடுத்திருக்கிறார். மேலும், அவள் பெயரை (ஸ்ரீ)

தன் பெயரின் முன்னால் வைத்துக்கொண்டிருக்கிறார் (இதனால் பெருமாள் அவளை எவ்வளவு கௌரவித்து வைத்திருக்கிறாரென்று தெரிந்து கொள்ளலாம்.) ஸ்ரீ மஹாலக்ஷ்மியும் பெருமாளுடைய மார்புப் பிரதேசத்திலேயே எப்பொழுதும் இருப்பாள். ஆதலால் ஸ்ரீ வைஷ்ணவ வடகலையார்களான எங்களுடையவர்கள் பெருமாளும் தாயாரும் (ஸ்ரீ மஹாலக்ஷ்மி) ஒன்று சேர்ந்துதான் எல்லாவற்றையும் (எல்லா கார்யங்களையும்) செய்கிறார்கள் என்று சொல்லுவதற்கு இடம் கொடுக்கிறது. அப்படியேதான் அவர்கள் உடன் படிக்கையும் வைத்துக்கொண்டிருக்கிறார்கள் என்று சொல்லலாம். ஆனால் நடக்கிறது அந்த மாதிரி இல்லாமல் பெருமாள் தான் எல்லாவற்றையும் செய்கிறார். ஏனென்றால், ஸ்ரீ மஹாலக்ஷ்மி எல்லாவற்றையும் பெருமாளிடத்திலேயே ஒப்புவித்தபடியால்.

லோகத்தில் பெருமாளை எல்லாருக்கும் தகப்பனாரென்று சொல்லுவது போல், ஸ்ரீ மஹாலக்ஷ்மி தாயாரெனறு அழைக்கப்படுகிறாள். அவளும் தாயார் மாதிரிதான் எல்லோரையும் தன்னுடைய குழந்தைகளென்று பாவித்து நடந்து கொள்ளுகிறாள். இத்துடன் அவள் பெருமாளைத் தன் பர்த்தா என்று நினைத்து நடந்து கொள்ளுகிறாள். அதாவது லோகத்தில் ஸ்த்ரீகள் தங்கள் பர்த்தாக்களுடன் எப்படி எப்படி பழகவேண்டுமென்று சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கிறதோ அம்மாதிரியாக அவளும் பெருமாளுடன் நடந்துகொள்ளுகிறாள். பெருமாளும் லோகத்தில் ஒருவன் தன்



லோகமாதா ஸ்ரீ மஹாலக்ஷ்மி

தன் பெயரின் முன்னுல் வைத்துக்கொண்டிருக் கிருர் (இதனுல் பெருமாள் அவளை எவ்வளவு கௌரவித்து வைத்திருக்கிருரென்று தெரிந்து கொள்ளலாம்.) ஸ்ரீ மஹாலக்ஷ்மியும் பெருமா ளுடைய மார்புப் பிரதேசத்திலேயே எப்பொழுதும் இருப்பாள். ஆதலால் ஸ்ரீ வைஷ்ணவ வடகலையார் களான எங்களுடையவர்கள் பெருமாளும் தாயா ரும் (ஸ்ரீ மஹாலக்ஷ்மி) ஒன்று சேர்ந்துதான் எல்லா வற்றையும் (எல்லா கார்யங்களையும்) செய்கிருர்கள் என்று சொல்லுவதற்கு இடம் கொடுக்கிறது. அப் படியேதான் அவர்கள் உடன் படிக்கையும் வைத் துக்கொண்டிருக்கிருர்கள் என்று சொல்லலாம். ஆனுல் நடக்கிறது அந்த மாதிரி இல்லாமல் பெரு மாள் தான் எல்லாவற்றையும் செய்கிருர். ஏனென் ருல், ஸ்ரீ மஹாலக்ஷ்மி எல்லாவற்றையும் பெருமா ளிடத்திலேயே ஒப்புவித்தபடியால்.

லோகத்தில் பெருமாளை எல்லாருக்கும் தகப் பனுரென்று சொல்லுவது போல், ஸ்ரீ மஹாலக்ஷ்மி தாயாரென்று அழைக்கப்படுகிருள். அவளும் தாயார் மாதிரிதான் எல்லோரையும் தன்னுடைய குழந்தைகளென்று பாவித்து நடந்து கொள்ளு கிருள். இத்துடன் அவள் பெருமாளைத் தன் பர்த்தா என்று நினைத்து நடந்து கொள்ளுகிருள். அதாவது லோகத்தில் ஸ்த்ரீகள் தங்கள் பர்த் தாக்களுடன் எப்படி எப்படி பழகவேண்டுமென்று சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கிறதோ அம் மாதிரியாக அவளும் பெருமாளுடன் நடந்துகொள் ளுகிருள். பெருமாளும் லோகத்தில் ஒருவன் தன்

பார்யையை எப்படி எப்படி வைத்துக்கொள்ள வேண்டும் என்று சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கிறதோ அப்படி அவளுடன் பழகுகிறார். இதைப்பற்றிமொத்தமாக என்ன சொல்லலாமென்றால் பெருமாளும் தாயாரும் இருவரும் சேர்ந்து எப்படி தம்பதிகள் லோகத்தில் பழகவேண்டு என்பதைத் தாங்கள் நடித்துக் காட்டுகிறார்கள். ஆனால் ஜனங்கள் அதைத் தெரிந்து கொள்ளாமல் தங்களைப்போல் நடந்து கொள்வார்கள் என்று நினைத்து அந்த திவ்ய தம்பதிகள் (பெருமாளும் தாயாரும்) மேல் குற்றமும் சாட்டி விடுகிறார்கள். இதற்கு ஜனங்களுடைய மூடத்தனந்தான் காரணமென்று சொல்ல வேண்டும்.

சக்ரவர்த்தி திருமகனான ஸ்ரீராமருடைய தர்மபத்னியான ஸீதாதேவியானவள் ராவணனுடைய லங்காதேசத்திலிருக்கிற அசோகவனத்தில் கட்டுண்டிருக்கும்போது ஹநுமான் "தேவரீர் உத்தரவு கொடுத்தால் உங்களை இப்பொழுதே தூக்கிக்கொண்டுபோய் ஸ்ரீராமரிடம் சேர்த்து விடுகிறேன்" என்று அவளிடம் சொன்னபோது, அவள் பதிலளித்தாள் :— "நான் உத்திரவு கொடுக்கமாட்டேன், ஏனென்றால் அப்படிச் செய்தால் என் பர்த்தாவான ஸ்ரீராமருக்கு "அவராலே இந்தக் காரியம் செய்ய முடியாததால் நீர் சொன்னமாதிரி செய்து கொண்டேன்" என்ற அபகீர்த்தி வரும்". இதே மாதிரிதான் ஸ்ரீ மஹாலக்ஷ்மியும், தன் பர்த்தாவான பெருமாளுக்கு ஒன்றும் ஸ்வதந்திரமில்லை (சுதந்திரம்) எல்லாவற்றையும் செய்வதற்கு என்ற

அபகீர்த்திவரும் என்றும் மேலும் ஒரு ஸ்திரீ தன் பர்த்தாவுக்குக் கீழ் படிந்துதான் நடக்க வேண்டு மென்ற நியமமுமிருக்கிறபடியால், தனக்கு பெரு மாள் கொடுத்திருக்கிற சக்திகளை ஒன்றும் உபயோ கப்படுத்தாமல் எல்லாவற்றையும் பெருமாளையே செய்யச் சொல்லியிருக்கிறுள். உதாகரணமாக ஒரு சக்தி என்னவென்ருல், ஒருவருக்கு மோக்ஷம் போவதை அனுக்ரஹிப்பது. அந்தக் கார்யத்தைத் தான் செய்யாமல் பெருமாளே அதைச் செய்யும்படி பேருமாளுக்கு சிபார்சு பண்ணுகிருள், அப்படிப் பண்ணுவது பெருமாளை கௌரவிக்குமாதலால்.

மேலே சொல்லியிருக்கிற "நல்ல ஸ்திரீ" என் பதற்கு அர்த்தம் என்னவென்ருல் எல்லா (எட்டு) ஐச்வர்யங்களையும் உடைத்தாயிருப்பது. ஸ்ரீ மஹா லக்ஷ்மி கடாக்ஷம் பெற்றவர்கள் எல்லா ஐச்வர்யங் களையும் உடைத்தாயிருப்பார்கள். ஏனென்ருல் ஸ்ரீ மகாலக்ஷ்மியை மெருமாள் எல்லா ஐச்வர்யங் களுக்கும் அதிபதி (எஜமானி)யாக ஏற்படுத்தியிருக் கிருர். இதற்காக ஸ்ரீ மஹாலக்ஷ்மி தான் எட்டு ரூபங்கள் எடுத்துக்கொண்டு ஒவ்வொரு ரூபத்தை ஒவ்வொரு ஐச்வர்யத்திற்கு அதிபதியாகச் செய் திருக்கிருள். அதாவது அந்த எட்டு ரூபங்கள் எவர்களென்ருல் :—ராஜ்யலக்ஷ்மி (ராஜ்ய பாரம் செய்வது); **தான்யலக்ஷ்மி** (போஜனம); **வீரலக்ஷ்மி** (சண்டையில் வீரன்மாதிரி இருப்பது); **காருண்ய லக்ஷ்மி** (எல்லோர் மேலும் கருணையோடிருப்பது); **தனலக்ஷ்மி** (பணம்கொடுப்பது); **வித்யாலக்ஷ்மி** (வித்தை யைக் கொடுப்பது); **சந்தானலக்ஷ்மி** (பிள்ளை பெண்

களைக் கொடுப்பது); சௌபாக்யலக்ஷ்மி (சுபத்துடன் இருப்பது). யார் யார், மேலே சொல்லியிருக்கிற எந்த ரூபமுள்ள லக்ஷ்மியை பூஜை செய்கிறார்களோ அவள், தான் கொடுக்கக்கூடிய பலனைக் கொடுப்பாள், அவர்களுக்கு. விஷயம் இந்த மாதிரி இருக்கும்போது ஜனங்கள் என்ன செய்கிறார்கள் என்றால் :—ஸ்ரீலக்ஷ்மி பணம் தான் கொடுப்பாள். ஆகையால் தனலக்ஷ்மியை தனத்தைக் (பணம்) கொடுக்கும்படிப் பிரார்த்திக்கிறார்கள். அவள் என்ன செய்கிறாளென்றால், தன்னுடைய பேர் (செல்(வம்)போகிறது) மாதிரி பணத்தைக் கொடுத்து கொஞ்ச நாட்கள் கழிந்த பிறகு பணத்தை எடுத்துக்கொண்டு ஒரு இடத்திலும் ஸ்திரமாக இல்லாமல் ஓடிக்கொண்டிருக்கிறாள். ஆனால் எல்லா இடத்திற்கும் (நல்ல இடம் கெட்ட இடம்) போவாள். அவளைப் பெருமாள் அந்த மாதிரி போகும்படி கட்டளை இட்டிருக்கிறார்.

பெருமாள், கார்யங்களுக்கு அநேக அவதாரங்கள் எடுத்திருக்கிறார். ஸ்ரீ மஹாலக்ஷ்மியும் அவருடன் தானும் அவதாரங்களெடுத்து பெருமாளுக்கு ஒத்தாசைப் பண்ணுகிறாள். அது ஏனென்றால், தான் அவருக்கு தர்ம பத்னியாக இருக்கிறாள் அல்லவா.

பெருமாள் ஸ்ரீராமாவதாரம் எடுத்தபோது ஸ்ரீ மஹாலக்ஷ்மி என்ன பண்ணினாள்தெரியுமா? அவள் ராஜரிஷியான ஜனகருடைய புத்ரியாகப் பிறந்து, சுயம்வரத்தில் ஸ்ரீராமர் சிவதனுசை உடைத்தபிறகு அவருடைய தர்மபத்னியாகி, அவருடன் வனவாசம்

செய்து, அப்போது பராக்ரம சாலியான ராவணனால் தூக்கிக்கொண்டு போகப்பட்டு, ராவணனுடைய லங்கா தேசத்திலிருக்கிற அசோக வனத்தில் கட்டுண்டு, திரும்பவும் ஸ்ரீ ராமருடன் சேர்க்கப்பட்டு, அயோத்திக்குப் போய் ஸ்ரீ ராமருடன் ராஜ்ய பட்டாபிஷேகம் செய்யப்பட்டு, பிறகு அவள் பேரில் ஒரு புகார் கிளப்பப்பட்டு, அதற்குப் பரிகாரமாக ஸ்ரீ ராமருடைய உத்தரவின் பேரில் லக்ஷ்மணனால் அவள் "காடுகாண" வான்மீகி ஆச்ரமத்தில் விடப்பட்டு, அங்கே குசலவர்களைப் பெற்று, அவர்களை முன்னிட்டு ஸ்ரீ ராமரிடம் சென்று, தன் கற்பு நிலை தெரிவித்து, தான் தன் பர்த்தாவை தெய்வமாகக்கொண்டது உண்மையாயின் தன் தாய் தனக்கு இடங்கொடுக்க என, பூமிதேவியால் தழுவப்பெற்றாள். மேலே சொன்ன மாதிரிதான் தன் பர்த்தாவான பெருமாள் அவதாரம் எடுத்தபொழுது தானும் கூட அவதாரம் எடுத்து, பெருமாளுக்கு ஒத்தாசை புறிகிறாள் ஸ்ரீ மஹாலக்ஷ்மி. இந்த அவதாரத்தில் வெகு கஷ்டங்களை அனுபவித்தாளாம். அதைப் பற்றி தான் (ஸ்ரீ சீதையாக இருந்தபொழுது) லங்கா அசோகவனத்தில் கட்டுண்டிருந்தபொழுது ஹநுமானுச்குச் சொன்னாள். "லோகத்தில் ஒருவனும் (அவன மிகவும் பாபியாயிருந்தாலும் கூட) அவன் ஜீவதசை முழுவதும் துக்கத்தையே அடையமாட்டான். எப்பொழுதாவது ஒருதரம் சுகம் காண்பானென்று லோக வசனமொன்றிருக்கிறது. அது என் விஷயத்தில் இப்போது பிரகாசித்திருக்கிறது. நான் என் ஜீவதசையில் எவ்வளவோ படர்தனவைகளை யெல்லாம் பட்டிருக்கிறேன். அந்த மாதிரியே

முழுமையுமில்லாமல் இப்பொழுது சுகம் கண்டேன். அது என்னவென்ருல், நீர் இப்பொழுது எனக்கு தெரிவித்த காதுக்கு மிகவும் இனிமையான, நல்ல, என் "ப்ராண பந்துக்களான" ஸ்ரீ ராமருடையவும், லக்ஷ்மணருடையவும் யோக க்ஷேம சமாசாரங்கள் எனக்கு ஆனந்தத்தை உண்டாக்கின."

மேலே சொல்லியிருக்கிறது யார் தெரியுமா? எல்லா ஐச்வர்யங்களுக்கும் அதிபதியான ஸ்ரீ மஹாலக்ஷ்மியின் அம்சத்தையுடைய ஸ்ரீ சீதை. அவள் கஷ்டப்பட்டாள் என்பது பெரிய விந்தையாயிருக்கும். ஆம். விந்தைதான். ஏனென்ருல், அது நிஜமானதில்லை. அப்படி நடித்துக் காட்டுகிருள் ஜனங்களுக்கு. பெருமாளும் அவளை அப்படி கஷ்டப்படும்படி விடமாட்டார்.

ஸ்ரீ மஹாலக்ஷ்மியை எல்லாரும் புருஷாகாரம் பண்ணுகிறவள் (சிபார்சு செய்கிறது) என்று அவளைப் பெருமாளிடத்தில் புருஷாகாரம் பண்ணச் சொல்லுகிருர்கள். அவளும் தன்னை அதை மாத்திரம் செய்யச் சொல்லுகிருர் என்று வருத்தப்பட்டுக்கொண்டு யாராறுலும் அவன் எப்படியிருந்தாலும் தன்னை சரணமடைந்தவர்களை பெருமாளிடத்தில் புருஷாகாரம் பண்ணி விடுவாள். பெருமாளும் அதற்கு தட்டு (தடை) பண்ணமாட்டார், அவள் புருஷாகாரம் பண்ணுவதால்.

மஹா பக்தனுடைய பாக்யமே பாக்யம். தான் ஆசார்யரிடத்திற்குப் போகாமல் அவரே அவனிடம்

வந்து உபதேசித்தார் என்று, அவர் உபதேசித்து, மேலே சொல்லியிருக்கிற அஷ்ட ஐச்வர்யத்திற்கு அதிபதியான ஸ்ரீ மஹாலக்ஷ்மி கடாக்ஷம் பெறும் படிக்குச் செய்து விட்டார். இது சுமார் 42 வருஷங் களுக்கு முன்னால் நடந்தது.

இரண்டு வருஷங்களுக்கு முன் தன் ஆசார்யன் திருவடியை அடைந்த மஹா பக்தனுடைய ஆசார்யர் அவனுக்கு கீழ்வருமாறு உபதேசித் திருக்கிறார் :—

" என்னை 1919-ம் வருஷக் கடைசியில் ஸ்ரீ மஹாலக்ஷ்மி தன்னுடைய மந்த்ரத்தை உனக்கு உபதேசிக்கச் சொன்னபடி நான் செய்தேன். நீயும் அப்பொழுதிலிருந்து எவ்வளவோ விக்னங்கள் (தடைகள்) வந்தபோதிலும் தவராமல் ஜபம் பண்ணிவந்து விட்டாய். அது அபூர்வமான காரியம். அதனால் ஸ்ரீ மஹாலக்ஷ்மி சந்தோஷம் அடைந்தாள். பிறகு இப்பொழுது அவள் ஒரு இடத்தை புண்ய க்ஷேத்ரமாக்கிக்கொண்டு, அதற்கு 'பதரிகாச்ரமம்' (இது சென்னை ஆழ்வார்பேட்டையில் இருக்கிறது) என்ற பெயரை வைத்துக்கொண்டு, அந்த இடத்திலேயே கோயில் கொண்டிருக்கிறாள். பெருமாள் கூட அங்கே வந்து ஸாந்நித்யமாயிருக்கிறார். அவர்கள் எவ்வளவு காலம் அங்கே இருக்கிறதற்கு அவர்களுக்கு இஷ்டம் இருக்குமோ, அவ்வளவு காலம் இருந்துவிட்டு உன்னையும் கூட அழைத்துக் கொண்டு போய் விடுவார்கள். அப்புறம் எல்லாம் கலந்து விடும்" அதாவது மஹா பக்தன் இருக்

இறவரையில்தான் எல்லாம் அங்கே சரியாக நடக்கும் என்று அர்த்தம்.

மஹா பக்தன் மிகவும் அசக்தன். அவன் தன் ஆசார்யரை சரணம் அடைந்ததனால் ஸ்ரீ மஹா லக்ஷ்மி அவனை வைத்துக்கொண்டு அவனுக்கு எல்லாவற்றையும் நடத்திக்கொண்டு வருகிறாள். அவள் மிகவும் ஸத்வ (சாந்தம்) குணமுள்ளவள். அதனால் தான் மஹா பக்தனுக்கு ஜபம் செய்வதற்கு விக்னங்கள் வந்தபோதும் ஒன்றும் அவைகளைச் சட்டை செய்யாமல் தன் காரியத்தை முடித்துக்கொண்டு விட்டாள். அவளால்தான் மஹா பக்தனும் அவனுடைய ஆசார்யரும் அவர்கள் தூஷிக்கப்பட்டபோதிலும் ஒன்றும் செய்யாமல் பொருத்துக்கொண்டிருந்து விட்டார்கள்.

மஹாபக்தனை அவள் எல்லாவற்றையும், (அதாவது ஒரு ஸ்ரீவைஷ்ணவ ப்ராமணன் லோகத்தில் எப்படி நடந்து கொள்ள வேண்டுமோ அப்படி) செய்யும்படிச்செய்து, அதை ஒரு உதாகரணம்போல் காட்டி வருகிறாள். மேலும் அவனுக்காகத்தான் அவள் இப்போது லோகத்தில் பிரசித்தி பெற்றிருக்கிற "ஹிந்து" பேபரை நடத்திக்கொண்டு வருகிறாள். "ஹிந்து" ஆபீஸ் ப்ரசாரம் மட்டும் பண்ணாமல் நூற்றுக்கணக்கான வேலைக்காரர்களுக்கு சாப்பாடு போட்டுக் காப்பாற்றுகிறது. அது மிகவும் விசேஷமான கார்யமல்லவா? இந்த மாதிரியான கார்யங்கள் அவளால்தான் செய்யமுடியும்.

ஸ்ரீமத் பகவத்கீதையில் ஸ்ரீக்ருஷ்ணன் அர்ஜு-னனுக்கு உபதேசித்தார். "என்னை மூடாத்மாக்கள் சாதாரண மனிதனென்று (பெருமாளென்று தெரிந்து கொள்ளாமல்) நினைக்கிறார்கள்". அதே மாதிரி அந்த பதரிகாச்ரமத்தில் என்ன விசேஷம் என்று தெரிந்து கொள்ளாமல் எல்லாரும் சாதாரண வீடு என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். அதற்கு அவர்களுக்கு பாக்யமில்லை என்று தான் சொல்லவேண்டும்.

லோக மாதாவான ஸ்ரீ மஹாலக்ஷ்மியை மேலே சொல்லியிருக்கிறபடி தெரிந்து கொண்ட பிறகு மஹா பக்தன் என்னதான் சொல்வான் என்றால் ஸ்ரீ மஹாலக்ஷ்மியை சரணம் அடைந்து அவளுடைய கடாக்ஷத்தை எல்லாரும் பெற வேண்டும். அதற்கு முதலில் ஒரு ஆசார்யரை சரணம் அடைந்து அவரை அந்த காரியத்திற்கு ஒத்தாசை புரியச் சொல்லி ப்ரார்த்திக்க வேண்டும். அவர் எப்படி எப்படிச் செய்ய வேண்டுமோ அப்படிச் செய்வார்.

---

15

# திவ்ய தம்பதிகள்

மஹாபக்தன் திவ்ய தம்பதிகளென்று அழைக்கப்பட்ட பெருமாள்-தாயாரைப் பற்றி கொஞ்சம் அவன் முன் எழுதின வ்யாஸங்களில் பேசியிருக்கிறன். அவர்களைப் பற்றி ஸ்ரீ வேதவ்யாஸர் விஷ்ணு புராணத்தில் பரக்கப் பேசியிருக்கிறர். அந்தப் பேச்சை அந்தப் புராணத்திலிருந்து எடுத்து கீழே ப்ரசுரிக்கப்பட்டிருக்கிறது:

"லோக மாதாவான பிராட்டி (தாயார்) யானவள் என்றைக்கும் ஸ்ரீவிஷ்ணு பகவானேடு பிரிவற்றவளாய் நித்தியையாயிருக்கிறவளேயன்றி ஜனனதிகளுள்ளவளன்று; எம்பெருமானைப் போல் அவளும் அவதரிப்பதும் மறைவதுமாயிருப்பாள். அன்றியும் எம்பெருமான், விபுவாய் (எங்கும் நிறைந்து) தன் சுபாவத்தைவிடாமல் "சத்தியஞானநந்தாதி" சகல கல்யாண குணங்களோடு விளங்குவது போல் பிராட்டியும் எங்கும் நிறைந்து சகல கல்யாண குணங்களோடு விளங்குவாள்; இப்படி சர்வ பூதங்களுக்கும் தாயும் தந்தையுமான அந்ததிவ்ய தம்பதிகளுடைய மகாவிபூதிவைபவம்சொல்லுகிறேன் கேளும் :—

"பதத்திற்குப் பொருள் அந்தப் பெருமாள், அந்தப் பொருளைத் தெரிவிக்கும் பதம் இந்தப் பிராட்டி; நீதி இவள், அந்நீதியின் உபாயமான நயம் அவன்; இவள் புத்தி, அப்புத்தியாலாகும் போதம் அவன்; தருமம் அந்த ஸ்ரீமன் நாராயணன், அந்த தருமத்திற்கு சாதகமான

சத்கிரியை இந்த பத்மாலயை; சிருஷ்டிக்கிறவன் ஸ்ரீவிஷ்ணு தேவன், அந்த சிருஷ்டி சக்தி ஸ்ரீதேவி; இவள் பூமி, இந்த பூமியை தரிப்பவன் அவ்வெம் பெருமான்; அந்த பகவான் சந்தோஷம், அந்த சந்தோஷத்தை யுண்டாக்கும் சந்துஷ்டி இப்பி ராட்டி; இச்சையென்பது ஸ்ரீ தேவி, காமமென்பது பகவான்; யஞ்யமானது மாதவன். தக்ஷிணையானது ஜகன்மாதா; புரோடச மானது ஜநார்தனன், ஆச் யாகுதியானது கமலை; பிராக்வம்சம் என்பது மது ஸூதனன், பத்னிசாலையென்பது ஸ்ரீ தேவி; யுபஸ் தம்பம் ஸ்ரீ ஹரி, யாக சயனம் ஸ்ரீலக்ஷ்மி; எம்பெரு மானே தருப்பை, பிராட்டியே சமித்து; சாம வேத மானது பகவான், அதிற்சேர்ந்த உத்கீதியென்பது லக்ஷ்மீ; ஜகத்பதியான வாஸுதேவன் அக்னி பகவான், இந்திரையானவள் சுவாஹா தேவி; ஸ்ரீ விஷ்ணு பகவானே சங்கரன், ஸ்ரீ மகாலக்ஷ்மி யானவள் கௌரீ தேவி; கேசவனே சூரியன், அந்தச்சூரியனுடைய ப்ரபை கமலை; ஸ்ரீவிஷ்ணு தேவன் பித்ரு தேவதா ஸ்வரூபி, ஸ்ரீ தேவி ஸ்வாதா ஸ்வரூபி; ஜகன் மாதாவே ஆகாசம், அதி விஸ்தாரமான அதன் பரப்பே ஸ்ரீ விஷ்ணு; அந்த ஸ்ரீயப்பதியே சந்தரன், அந்த சந்த்ரனுடைய காந்தியாகிய நிலவு தேவி; சர்வகதனான ஸ்ரீ ஹரியே வாயு, மேகாதிகளை தரிக்கத் தக்க அக்காற்றின் செய்கை திருமகள்; சமுத்ரம் கோவிந்தன், ஸ்ரீ தேவி அச்சமுத்திரத்தின் அலை முதலான விகிருதி; மதுஸூதனன் தேவேந்த்ரன், இந்த ரையே இந்த்ராணி; சக்ரதரனே பகவானே யமன். கமலாலயையே யம பத்னியான தூமரோணை;

ஸ்ரீதரனான தேவனே குபேரன், ஸ்ரீ தேவியே குபேரனுடைய செல்வம்; கேசவனே வருணன், லக்ஷ்மீயே வருணபத்னியான கௌரீ; கோவிந்தனே தேவஸேனாபதியான ஸ்கந்தன், இந்திரையே தேவஸேனை; கதாதரனே பிடிப்பு, அதற்கு காரணமான சக்தியானது ஸ்ரீ தேவி; நிமிஷ சொரூபம் நாராயணன், காஷ்டையின் சொரூபம் லக்ஷ்மீ; முகூர்த்தம் வாமனதேவன், அம்முகூர்த்தத்தின் அவயவமான கலை ஸ்ரீ லோகமாதா; திரு விளக்கு ஸர்வேச்வரன், அதின் காந்தி லோக நாயகி; ஸ்ரீ மஹாவிஷ்ணு விருக்ஷம், ஸ்ரீ தேவி கொடி; சக்ரதரன் பகல், ஸ்ரீ காந்தை ராத்ரி; வரப்ரதனான விஷ்ணுவே மணமகன், தாமரைக்காட்டில் வாஸம் செய்பவளே மணமகள்; பகவான் நதிசொரூபன், ஸ்ரீதேவி நதிசொரூபை; புண்டரீகாக்ஷன் அரசருடையக் கொடி, புண்டரீகத்தில் வாஸம் செய்பவள் கொடிச்சீலை; லோகஸ்வாமியான நாராயணன் லோபம், ஜகதீஸ்வரியான லக்ஷ்மீயே ஆசை; கோவிந்தன் இராகம், ஸ்ரீ தேவி அதன் காரணமாகிய காதல்; அநேக வாக்யங்களாலே சொல்வதில் பிரயோஜனமென்ன? அந்த திவ்ய தம்பதிகளின் விபூதியைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன்:—தேவதைகளுக்குள்ளும், மனிதர்களுக்குள்ளும், திரியக்குகளுக்குள்ளும் மற்றும் உண்டாகிய வஸ்துக்களுக்குள்ளும் புல்லிங்க மான பேருடைய பதார்த்தங்கள் எல்லாம் ஷட்குண ஐச்வர்ய ஸம்பன்னனான ஸ்ரீ ஹரியே, ஸ்திரீ லிங்கமான பதார்த்தங்களெல்லாம் ஸ்ரீ மஹாலக்ஷ்மீயே என்று நினைக்கவும். இவ்விருவரைக் காட்டிலும் வேறான வஸ்து ஒன்றுமில்லை, எல்லாம் அவர்க

ஸ்ரீதரனான தேவனே குபேரன், ஸ்ரீ தேவியே குபேர னுடைய செல்வம்; கேசவனே வருணன், லக்ஷ்மீயே வருணபத்னியான கௌரீ; கோவிந்தனே தேவ ஸேனாபதியான ஸ்கந்தன், இந்திரையே தேவஸேனை; கதாதரனே பிடிப்பு, அதற்கு காரணமான சக்தி யானது ஸ்ரீ தேவி; நிமிஷ சொரூபம் நாராயணன், காஷ்டையின் சொரூபம் லக்ஷ்மீ; முகூர்த்தம் மாலை-தேவன், அம்முகூர்த்தத்தின் அவயவமான கலை ஸ்ரீ லோகமாதா; திரு விளக்கு ஸர்வேச்வரன், அதின் காந்தி லோக நாயகி; ஸ்ரீ மஹாவிஷ்ணு விருக்ஷம், ஸ்ரீ தேவி கொடி; சக்ரதரன் பகல், ஸ்ரீ காந்தை ராத்ரி; வரப்ரதனான விஷ்ணுவே மணமகன், தாமரைக்காட்டில் வாஸம் செய்பவளே மணமகள்; பகவான் நதிஸொரூபன், ஸ்ரீதேவி நதி ஸொரூபை; புண்டரீகாக்ஷன் அரசருடையக் கொடி, புண்டரீகத்தில் வாஸம் செய்பவள் கொடிச்சீலை; லோகஸ்வாமியான நாராயணன் லோபம், ஜகதீஸ் வரியான லக்ஷ்மீயே ஆசை; கோவிந்தன் இராகம், ஸ்ரீ தேவி அதன் காரணமாகிய காதல்; அனேக வாக்யங்களாலே சொல்வதில் பிரயோஜனமென்ன? அந்த இவ்ய தம்பதிகளின் விபூதியைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன்:—தேவதைகளுக்குள்ளும, மனிதர் களுக்குள்ளும், திரியக்களுக்குள்ளும் மற்றும் உண்டாகிய வஸ்துக்களுக்குள்ளும் புல்லிங்க மான பேருடைய பதார்த்தங்கள் எல்லாம் ஷட்குண ஐச்வர்ய ஸம்பன்னனான ஸ்ரீ ஹரியே, ஸ்திரீ லிங்க மான பதார்த்தங்களெல்லாம் ஸ்ரீ மஹாலக்ஷ்மீயே என்று நினைக்கவும். இவ்விருவரைக் காட்டிலும் வேறான வஸ்து ஒன்றுமில்லை, எல்லாம் அவர்க

2

னால் வியாபிக்கப்பட்டு அவர்களுடைய விபூதி யாகவே இருக்கின்றன".

மேலே சொல்லியிருக்கிற விஷயத்திற்குத் தாத்பர்யம் என்ன வென்றால் பெருமாளும் தாயாரும் ஒன்றாகவேயிருந்து லோகத்தில் எல்லா கார்யங்களையும் நடத்துகிறார்கள். அது எப்படி நடத்துகிறார்கள் என்றால்: தாயார் தான் ஒரு சக்தி. அந்தச் சக்தியைத் தூண்டச் செய்வது பெருமாள். சக்தி தூண்டப்படாமலிருந்தால் சக்தியில்லாதது போலிருக்க வேண்டியிருக்கும், சக்தியில்லாமல் தூண்டுதல் பண்ணினால் பிரயோஜனப்படாது. ஆகையால் சக்தியும் தூண்டுதலும் வேண்டும். ஒரு கார்யம் செய்வதற்குத் தாயாரை ஒரு சக்தியாக வைத்துக் கொண்டு தான் அந்த சக்தியைத் தூண்டிக் கொண்டு லோகத்தில் எல்லா கார்யங்களையும் செய்கிறார் பெருமாள். ஆகையால் பெருமாளையும் தாயாரையும் தனியாக ஸேவிக்காமல் இரண்டு பேர்களும் ஒன்றாயிருக்கும் அவஸரத்தில் நாமெல்லோரும் அவர்களை ஸேவிக்க வேண்டும், இதற்காகத்தான் பெருமாள் தாயாரை தன்னுடைய வக்ஷஸ்தலத்தில் வைத்துக் கொண்டிருக்கிறார் போலும்.

---

# பெருமாளுடைய குணங்கள்

பெருமாள் லோகத்தைத் தன் விளையாட்டிற்காக ஒரு நாடகம் போல் நடத்துகிறார் என்ற விஷயம் எல்லாருக்கும் தெரிந்ததே. அந்த நாடகத்தில், தான் நேராக பங்கு எடுத்துக் கொள்ளாமல் போனாலும், தன்னுடைய அம்ச பூதர்களானவர்களைக் கொண்டு அதில் நடிக்குமாறு செய்து அதை நடத்திக் கொண்டு வருகிறார். அப்பொழுது மேலே சொன்ன தன் அம்ச பூதர்களுக்கு எல்லாவித ஸௌகர்யங்களையும் கொடுத்து அவர்களை அனுப்புவார், பெருமாள். அந்த ஸௌகர்யங்களை அதிகாரம் (ஆளும் தன்மை) என்று சொல்லலாம். இந்த அதிகாரம் பண்ணுவதற்குக் குணங்கள் வேண்டும், ஏனென்றால் அவைகளை உடைத்தாயிருந்தால் தான் ஒருவன் அதிகாரத்தைச் செலுத்த முடியும். ஒவ்வொரு கார்யத்தைச் செய்வதற்கும் சக்தியை, ஒவ்வொரு குணம் கொடுக்கும்.

பெருமாள் ஸர்வவ்யாபி. அதாவது எல்லாவற்றிலும் வ்யாபித்திருக்கிறார். அதாவது அவரிடத்தில் எல்லாம் அடங்கியிருக்கும். அப்பொழுது குணங்களென்றவைகளும் அடங்கியிருக்கும் பெருமாளிடத்தில். அதாவது பெருமாள் அவைகளை உடைத்தாயிருப்பார். மேலே சொன்ன பெருமாளால் அம்சபூதர்களுக்கு எவ்வளவு குணங்கள் தேவையாயிருக்குமோ அவைகள் தான் அவர்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும். அவர்களுக்குக் கொடுக்கப்பட்டிருந்த சில குணங்களைப்பற்றி (அவைகள்

எந்த எந்த ஸமயத்தில் உபயோகப்படுத்தப்பட்டன) இங்கு விசாரிப்போம்:

முதலில் 'தெய்வ தன்மை' என்ற குணத்தை எடுத்துக்கொள்ளுவோம். இந்தக்குணம் (சக்தி) பெருமாள் அம்சமுள்ளவர்களுக்குத் தானிருக்கும், மற்றவர்களுக்கு இருக்காது. ஸ்ரீராமருக்குத் தெய்வ குணமிருந்தது. அதை எப்போது காண்பித்தாரென்றால் ஸ்ரீ ராமருடைய தர்மபத்னியான ஸ்ரீஸீதா தேவியை லங்கேச்வரனான ராவணன் தன்னுடைய பட்டணத்திற்குத் தூக்கிக் கொண்டு போகையில் ஜடாயு என்ற பக்ஷி அவனை வழியில் மடக்கி அவனோடு சண்டை போட்டு, இறக்கைகள் அறுபட்டு பூமியில் விழுந்து கிடந்தது. ஸ்ரீராம, லக்ஷ்மணர்கள் ஸ்ரீஸீதா தேவியைத் தேடிக்கொண்டு வரும்போது ஜடாயு இருக்கிற இடத்திற்கு வரும்படி நேர்ந்தது. அப்போது ஜடாயு ஸ்ரீராமரிடத்தில் ராவணன் ஸ்ரீஸீதா தேவியைத் தூக்கிக்கொண்டு போன சமாசாரத்தைச் சொல்லிவிட்டு தன் உயிரை இழந்தது. ஸ்ரீராமர் அந்தப் பக்ஷிக்குத் தகன கார்யமெல்லாம் செய்து விட்டு அதை மோக்ஷம் அடையும்படிச் செய்தார்.

ஸ்ரீ க்ருஷ்ணன் சாதுர்யமாக (சாதுர்யமென்ற குணத்தை வைத்துக்கொண்டு) அர்ஜுனனுக்கு தன்னுடைய ஸஹோதரியான ஸுபத்ரையை கன்னிகாதானம் பண்ணும்படிச் செய்தார். அது எப்படி என்றால்: ஒரு ஸமயம் அர்ஜுனன் தீர்த்த யாத்திரை பண்ணிக்கொண்டு த்வாரகைக்கு வந்

தான். அங்கே ஸுபத்ரையைக்கண்டு அவளைக் கல்யாணம் செய்து கொள்ள இச்சித்து, அதை ஸ்ரீக்ருஷ்ணனிடம் தெரிவித்தான். அவர் அவனை ஒரு ஸந்யாஸி வேஷம் தரிக்கச்சொல்லி, தன்னுடைய ப்ராதாவான பலராமனை அர்ஜுனன் ஸந்யாஸியை வரவேற்கச் சொல்லி, தாங்களிருக்கிற அரண்மனையிலேயே தங்க இடம் கொடுக்கச் சொல்லி, அந்த ஸந்யாஸிக்கு ஸுபத்ரையை சிச்ருஷை செய்யச் சொன்னார். பலராமன் அதே மாதிரி தானே எல்லாவற்றையும் செய்தான். கொஞ்ச நாட்கள் கழிந்த பிறகு அர்ஜுனனுக்கும், ஸுபத்ரைக்கும் ஸ்நேகம் ஏற்பட, அவர்களை ஒருவருக்கும் தெரியாமல் ஒரு ரதத்தில் ஏற்றி ஊருக்கு வெளியில் போகும்படி ஸ்ரீ க்ருஷ்ணன் செய்து விட்டார். அப்புறம் இந்த ஸமாசாரங்களெல்லாம் பலராமன ஸ்ரீக்ருஷ்ணனிடம் தெரிவித்தபோது அவர் 'ஸந்யாஸிகளை வீட்டிற்குள் சேர்க்கக்கூடாதே, நீ தான் எல்லாவற்றையும் செய்தாய். இப்பொழுது என்ன செய்வது. அவர்களைக்கல்யாணம் பண்ணிக்கொள்ளச்சொல்லவேண்டியதுதான,' என்று பதில் உரைத்தார். பிறகு எல்லாரும் சேர்ந்து அவர்களுக்குக் கல்யாணத்தையே செய்தார்கள். மிகவும் சாதுர்யமாகத் (கெட்டிக்காரத்தனமாக) தன் பேரில் தப்பு வராமல், ஸ்ரீ க்ருஷ்ணன் இந்த விஷயத்தில் நடந்து கொண்டார். இதே மாதிரி சாதுர்யமாக ஸ்ரீ விஷ்ணு ஒரு காரியத்தைச் செய்தார். அது, தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் அடிக்கடி சண்டை நடக்கும். அப்பொழுது தேவர்கள் தோற்றுப்போய் ஒரு சமயம் விஷ்ணுவிடம் முறையிட, அவர் அஸுரர்களுடன் ஸ்நேகம்

பண்ணச்சொல்லி அவர்களுடன் சேர்ந்து க்ஷீர (பால்) ஸமுத்ரத்தை, வாஸுகி என்ற பாம்பை கயிருக வைத்துக்கொண்டு, மந்தரமலையை மத்தாக வைத்துக்கொண்டு கடையச் சொன்ஞர். அந்த மாதிரி செய்தபோது அம்ருதம் (அதைச் சாப்பிட்டால் சாவு வராது) ஒரு பாத்திரத்தில் வைக்கப் பட்டு வெளியில் வந்தது. அதை தேவதைகளும், அஸுரர்களும் தங்களுக்குத்தான் வேண்டுமென்று சண்டை போட்டுக்கொண்டார்கள். அதன் பேரில் ஸ்ரீ விஷ்ணு 'மோஹினி' என்ற ஸ்த்ரீ ரூபம் எடுத்துக்கொண்டு அங்கு வந்தார். அஸுரர்கள் அவளை (மோஹினி)ப் பார்த்து மோஹித்துப்போய் அவளையே அந்த அம்ருதத்தை எல்லாருக்கும் கொடுக்கச் சொன்ஞர்கள். அவள் (மோஹினி) தனக்கு வேண்டியவர்களான தேவதைகளுக்கு மட்டும் அம்ருதத்தைக் கொடுத்தாள். பெருமாள் ஸ்ரீவிஷ்ணு பண்ணியது சாதுர்யமான கார்யம் அல்லவா?

ஸௌசீல்யம்: நந்நடத்தையுள்ளது. அதாவது சாஸ்த்ரங்களில் சொல்லியிருக்கிற தர்மங்களைக் கைப்பற்றி நடப்பது. இந்தக் குணம் ஸ்ரீராமரிடத்தில் வெகு நன்ருய் ப்ரகாசித்தது. அதை ஸ்ரீமத் ராமாயணத்தில் காணலாம்.

ஸௌலப்யம்: சுலபமாக அடைவது. குசேலர் ஸ்ரீ க்ருஷ்ணனை வெகு சுலபமாகவேப் போய் தரிசிக்க முடிந்தது.

சௌர்யம்: சூரத்தன்மை, சண்டை போடுவதில் தீரஞயிருப்பது. ஸ்ரீராமர் இந்தக் குணத்தை

எப்படிக்காண்பித்தாரென்றால், வனவாஸம் செய்யும் பொழுது ராவணனுடைய தங்கை சூர்பணகை என்பவள் லக்ஷ்மணனால் தன் காது, மூக்கு அறுக்கப்பட்டு, தன் தமயனான கரனிடத்தில் அந்த விஷயத்தைச் சொன்னாள். உடனே கரனும் தன் தம்பியான தூஷணனுடனும், தன் சேனையுடனும் (14,000 பேர்கள்) ஸ்ரீ ராமருடன் போருக்கு வந்தான். ஸ்ரீ ராமர் ஒருவராகவே அவர்களைத் தோற்கடித்தார். வெகு தைர்யத்துடனும் (சௌர்ய குணத்தை வைத்துக் கொண்டும்) இந்த கார்யத்தைச் செய்தாரென்று சொல்ல வேண்டும்.

ஸ்ரீ க்ருஷ்ணன் மஹாபாரத யுத்தம் ஆரம்பமாகும்போது அர்ஜுனன், காரணங்களைச் சொல்லி சண்டை போடமாட்டேனென்று தன் வில்லை கீழே போட்டுவிட்டபோது எல்லாவற்றையும் 'ஸ்தைர்யமாக' (பொறுமையுடன் கேட்டு) அவனுக்கு ஸ்ரீமத் பகவத் கீதையை உபதேசித்து அவனை சண்டை செய்யும்படி செய்தார்.

**காருண்யம்:** கருணையுடன் இருப்பது. இந்தக் குணத்தை பெருமாள் அவருடைய எல்லா அம்சபூதர்களுக்கும் கொடுத்திருக்கிறார். இதை அவர்களுடைய சரித்திரங்களில் காணலாம்.

**ஸாம்யம்:** ஸமமாக விருப்பது. ஸ்ரீ க்ருஷ்ணன் இடையர் பிள்ளைகளோடு அவர்களைத் தனக்கு ஸமமாக பாவித்துக் கொண்டு விளையாடிக் கொண்டிருந்தார். ஸ்ரீ ராமர் குகனையும் (ஓடம் ஓட்டுபவன்)

ஹநுமானையும் தனக்கு ஸமமானவர்களென்று எண்ணி நடந்து கொண்டார்.

**வாத்ஸல்யம்:** பெருமான் (அர்ச்சாவதாரம்) தனக்கு ‘பக்த வத்ஸலன்’ என்று ஒரு பெயரையே வைத்துக் கொண்டிருக்கிறார்.

ஸ்ரீ ராமர் அவரிடத்தில் சரணாகதி பண்ணினவர்களை ரக்ஷித்து (காப்பாற்றி) சரணாகத வத்ஸலன் என்ற பெயரை பெற்றிருக்கிறார்.

சிவன் ஸுலப ப்ரீதனென்று பெயரையுடையவன். அதாவது அவனை வெகு சுலபமாக ப்ரீதி அடையும்படி செய்து விடலாம். அப்படிச் செய்வது சிவனுக்கே ஆபத்து நேரிடும் போலிருக்கும். அப்பொழுது ஸ்ரீ விஷ்ணு சாதுர்யமாக நடந்து கொண்டு அவனை (சிவனை)க் காப்பாற்றியிருக்கிறார் அனேக தடவைகளில். கீழே சொல்லியிருக்கிறது அந்த மாதிரி ஸம்பவங்களிலொன்று. பஸ்மாஸுரன் என்ற அஸுரனொருவன் ஒரு சமயம் சிவனை த்யானம் பண்ணினான். சிவன் அவனுக்கு என்ன வரம் வேண்டுமென, அவன் (அஸுரன்) தனக்கு ‘நான் எவருடைய சிரஸில் (தலை) கையை வைக்கிறேனோ அவர் இறக்கவேண்டும்’ என்ற வரம் வேண்டுமென்றான். ஆகட்டுமென்று சிவன் சொல்லி விட்டான். உடனே அந்த அஸுரன் சிவன் தலையிலேயே தன் கையை வைக்கப்பார்த்தான். அப்புறம் சிவனால் ஸ்ரீ விஷ்ணு சரணடையப்பட்டு ஒரு ப்ரம்மசாரி வேஷம் பூண்டு அந்த அஸுரனிடம் வந்து ‘சிவன் உனக்குக் கொடுத்த வரம் சரியா, (பொய்யா) இல்லையா நீயே

உன் தலையில் கை வைத்துப்பார்' என்று சொன்னார். உடனே அந்த மாதிரிச் செய்ய தன் கையை தன் தலையில் வைத்து தலை உடைந்து போயிறந்தான், அந்த பஸ்மாஸுரன்.

ஸ்ரீ கிருஷ்ணர் நந்த கோபனுடன் ஆயர்பாடியிலிருக்கும் போது அநேக அதிமானுஷ (மனிதர்களால் செய்ய முடியாத) கார்யங்களைச் செய்தார். இந்திரன் தனக்கு வழக்கமாக நந்த கோபன் முதலானவர்கள் பூஜை செய்வது நிறுத்தப்பட்டபொழுது, கோபித்துக்கொண்டு மழையை அதிகமாக அந்த இடத்தில் பெய்யும்படிச் செய்தான். அப்பொழுது க்ருஷ்ணர் கோவர்த்தன கிரியைத் தன் சுண்டு விரலால் தூக்கிக்கொண்டு அதனடியில் மழை நிற்கும் வரையில் அங்கிருந்தவைகளை யெல்லாம் வைத்துக் கொண்டுக்காப்பாற்றினர். இந்தக் காரியம் கௌமார பர்வத்திலிருக்கும்பொழுது செய்தது. இந்தக் காரியத்தால் ஸ்ரீ க்ருஷ்ணருடைய தெய்வத்தன்மை விளங்கியது. இதே மாதிரி பெருமாள் வாமனவதாரம் எடுத்தபொழுது த்ரிவிக்ரமனக (லோகங்களை காலால் அளந்தது) ஆகித் தன் கார்யத்தை முடித்துக் கொண்டார்.

பெருமாள் தன் அம்சபூதர்களை அனுப்பி ஜனங்களுக்கு நல்லது செய்யச் சொல்கிறர். இன்னம் சிலபேர்களுக்கு (மனிதர்களுக்கு)த் தன் அம்சம் கொடுத்து அவர்களையும் ஜனங்களுக்கு உதவி பண்ணச் சொல்கிருர். அவரிடத்தில் கெட்ட குணங்களிருந்த போதிலும் அவைகளை உபயோகப்படுத்து

வதில்லை. கெட்ட குணங்களெல்லாம் மனுஷர்கள் உபயோகப்படுத்தி பாபமடைவதற்குத்தான் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறதென்று சொல்லலாம்.

வைஷ்ணவர்கள் 'பெருமாள் நிர்குண:' என்றால் கெட்ட குணமில்லாதவர் என்று அர்த்தம் கொள்ளுகிறார்கள். இது ஸரியன்று, ஏனென்றால் பெருமாளை ஸம்பூர்ணர் (எல்லாவற்றையும் உடையது) என்று சொல்ல முடியாது கெட்ட குணங்கள் அவரிடத்திலில்லை என்று சொன்னால். ஆகையால் அதற்கு அர்த்தம் 'கெட்ட குணங்களில்லாமலிருக்கையைப் பண்ணிக் கொள்வது' என்று எடுத்துக்கொள்ளலாம்.

---

# பெருமாள் உதவி

பெருமாளைப்பற்றி "மஹாபக்தன்" இன்னம் ஒன்றும் சரியாக எழுதவில்லை யாதலால் இப்பொழுது அவரைப்பற்றி எழுதப்போகிறான் :—

பெருமாளைப்பற்றி சரியாக எழுத முடியாது தான். ஏனென்றால் சாஸ்திரங்களில் ஸர்வ வ்யாபி என்று சொல்லப்பட்டவரை எப்படி அவர் மாதிரி ஸர்வ வ்யாபியாக இல்லாத மற்றவர்கள் அறிந்து எழுதக்கூடும்? "மஹாபக்தன்" எழுதியவைக ளெல்லாம் பெருமாள்தான் அவன் மூலமாக எழுதி யிருக்கிறார். ஆகையால் அவரேதான் தன்னைப் பற்றி எவ்வளவு எவ்வளவு விஷயங்கள் வெளியில் பிரசாரம் பண்ணலாமோ அவ்வளவு இப்பொழுது "மஹாபக்தனை" வைத்துக்கொண்டு எழுதுகிறார்.

பெருமாள் யார் தெரியுமா? அவர்தான் லோகத்திற்கு எஜமானர். அவரை ஜனங்கள் பல விதமாக அழைக்கிறார்கள். "மஹாபக்தன்" அவன் ஆசார்யர் தனக்குப் பெருமாளைப்பற்றி உபதேசித் ததை கீழ் வருமாறு எழுதுகிறான் :—

"மஹா பக்தனுடைய" ஆசார்யர் அவனுடன் பேசும்போது "பெருமாள் வந்தார், சொன்னார், பேசினார் என்று எல்லாம் சொல்லுவார்", "மஹா பக்தனும்" அவனெழுதின வ்யாசங்களில் பெருமாள் என்றுதான் சொல்லியிருக்கிறான். ஆனால் ஜனங் கள் (வைஷ்ணவர்கள்) கோவில் கொண்டிருக்கும் உருவங்களை பெருமாளென்று அழைக்கிறார்கள்.

அது சரியல்ல. ஏனென்றால் மேலே சொல்லியவைகள் பெருமாளுடைய "அர்ச்சாவதாரங்கள்," பெருமாள் யாரென்றால் பெரிய ரூபமுள்ள (ஸர்வ வ்யாபி என்று சொன்னால் எவ்வளவு பெரிய ரூபமென்று சுமாராகத் தெரிந்து கொள்ளலாம்) வர் என்று சொல்லலாம். அவர்தான் லோகத்திற்கெல்லாம் எஜமானரான ஸ்ரீமத் பகவத் கீதையில் சொல்லியிருக்கிற "வாஸுதேவ ஸ்ஸர்வமிதி" என்ற பரவாஸுதேவன்.

"மஹா பக்தன்" அவர் (பெருமாள்) பூலோகத்தை எப்படி ஆண்டு வருகிறார் என்றும், அவரும் தன்னுடைய அம்சாவதாரங்களை பூமியிலெடுத்து ஜனங்களுக்கு ஒத்தாசை புரிந்தாரென்று அவன் எழுதின மற்ற வ்யாஸங்களில் சொல்லியிருக்கிறான். ஆதலால் இப்பொழுது இங்கே திரும்பவும் அதைப்பற்றி ஒன்றும் சொல்லப்படவில்லை. அவர் இன்னமும் அநேக விதமான, ஜனங்களுக்கு, உதவி புறிந்துகொண்டு வருவார். அந்த உதவிகளில் முக்கியமானது எது வென்றால்: ச்ருஷ்டி பண்ணப்பட்டவைகளைத் திரும்பவும் எவ்விடத்திலிருந்து உற்பத்திச் செய்யப்பட்டவோ அந்த இடத்திற்குக் கொண்டுபோய்ச் சேர்ப்பது. அதாவது பெருமாளிடத்திலேயே சேர்ப்பது. ஆனால் அவைகளைப் பெருமாள் உடனே சேர்ப்பதில்லை. கொஞ்சம் நாள்கள் கழிந்தபிறகு, அதாவது அவைகளுடைய கர்மப் பிரகாரம் (கர்மம் என்பது ஒரு பட்டியலில் அவைகள் தங்கள் ஜீவதசையில் என்ன என்ன நடக்கும் என்பதைப்பற்றி ப்ரம்மாவால்

அவைகள் உற்பத்தியானவுடன் சொல்லப்பட்டது.) நடந்துகொண்ட பிறகு கடைசியில் எங்கெந்த இடங்களுக்குப் போகவேண்டுமோ திரும்பவும் பிறவி எடுப்பதற்கு, அல்லது அவைகள் திரும்பவும் பிறவி எடுக்காமல் பெருமாளுடனேயே கூட இருக்க வேண்டுமோ அந்த ப்ரகாரம் அவைகளுக்குச் செய்யப்படும்.

திரும்பவும் பிறவி எடுக்காமல் பெருமாளுடனிருப்பதுதான் மோக்ஷமென்று சொல்வது. அதாவது பெருமாளிருக்கிற இடத்திற்குப் போய் ஆநந்தம் அநுபவிப்பது. இந்த ஆநந்தம் நான்கு விதமாக விருந்து இப்பொழுது அநுபவிக்கப்படுகிறது ஸிருஷ்டிக்கப்பட்டவைகளால். அந்த நான்கு விதங்களாவன (மாதிரிகள்) :—ஸாயுஜ்யம் (பெருமாளுடன் சேர்ந்து விடுவது என்று மஹா பக்தனுடைய ஆசார்யர் சொல்லியிருக்கிறார். ஆனால் மற்ற வ்யாக்யாதாக்கள் "பெருமாளுடைய போகங்களை (சுகங்களை) அநுபவிப்பது" என்று சொல்லுகிறார்கள்; ஸாமீப்யம் = ஸ்ரீ வைகுண்டத்தில் பெருமாள் கிட்டயிருப்பது; ஸாலோக்யம் = ஸ்ரீ வைகுண்டத்திலிருப்பது. அது பெருமாள் கிட்ட இல்லாமலிருக்கலாம்; ஸாரூப்யம் = பெருமாளுடைய ரூபம் மாதிரி ஒரு ரூபத்தை அடைந்திருப்பது. இந்த நான்கு விதங்களில் ஸாமீப்யத்தைத்தான் அடையவேண்டும். ஏனென்றால் அப்பொழுது பெருமாளை தர்சனம் பண்ணி ஆநந்தம் பெற்றுக் கொண்டிருக்கலாம்.

மேலே சொல்லியிருக்கிற மோக்ஷம் பெறுவது எல்லோருக்கும் கிடைக்காது. எவைகளுக்கு புண்ய

பலன்கள் பாப பலன்களைவிட அதிகமாக இருக்குமோ (அதாவது முன் ஜன்மங்களில் செய்த பாபங்களெல்லாம் நாசமாகிப் புண்யங்களையே அதிகமாக உடைத்தாயிருப்பது) அவைகளுக்கு மோக்ஷம் ஸித்திக்கும். மேலும் அவைகள் பெருமாளை மாத்திரமே வேறு ஒருவரையும் வணங்காமல் பூஜித்துக் கொண்டிருக்க வேண்டும். ஏனென்றால் ஸ்ரீமத் பகவத்கீதையில் பெருமாள் "மற்ற ஒருவரையும் சிந்திக்காமல் என்னை மாத்திரம் சிந்திக்கிறவர்களுடைய யோக க்ஷேமங்களை நான் பார்த்துக் கொள்வேன்," என்று உபதேசித்திருக்கிறார். அந்த மாதிரி பண்ணினால் தான் அவர் ப்ரீதி அடைந்து உதவி பண்ணுவார் யாருக்கும். பாபம் ஜாஸ்தியாக பண்ணினவைகளுக்குமோக்ஷம் கிடையாது. அது மாத்திரமல்லாமல் அவைகள் நரக வேதனைகளை அனுபவிக்க வேண்டும் (நரகம் என்று சொல்லப்படுகிற இடத்துக்குக் கொண்டு போகப்பட்டு பலவிதமாகக் கஷ்டப்படுத்தப்படுவார்கள்). ஆனால் சில சமயம் மேலே சொல்லப்பட்ட சிலவைகள் ரொம்பவும் கஷ்டப்பட்டால் அதைப் பொருக்கமாட்டாமல் பெருமாள் மிகவும் காருண்யமுடையவரானதால், அவைகள் கஷ்டப்பட்டது போதுமென்று எண்ணி அவைகளைத் தானிருக்கிற இடத்தில் தனக்குப் பின்னால் தன் பார்வைக்கு கிட்டாதபடி வைத்து விடுவார். அதாவது அவைகள் அங்கேயே கிடக்கவேண்டும், ஜகப்ரளயம் வரும்வரையில். அப்புறம் பெருமாளுடன் சேர்ந்துவிட வேண்டும். ஆகையால் எல்லாரும் மோக்ஷமடையப் பார்க்கவேண்டும். இல்லாவிட்டால் நரக வேதனைகளுக்கு ஆளாகவேண்டும். மோக்ஷம்

அடைவதற்கு சுலபமான வழி ஸ்ரீ வைஷ்ணவர்கள் (வடகலையார்கள்) கண்டு பிடித்திருக்கிறார்கள். அது என்னவென்றால் பெருமாளிடத்தில் பரன்யாஸம் பண்ணிக்கொள்வது. அதை ஒரு ஆசார்யர் மூலமாகச் செய்துக்கொள்வது. வடகலை அல்லாத மற்ற வைஷ்ணவர்கள் அவரவர்கள் ஆசார்யர் இந்த விஷயத்தைப்பற்றி சொல்லுகிறபடி நடந்து கொள்ள வேண்டும். வைஷ்ணவர்களல்லாதவர்கள் (அதாவது விஷ்ணுவைப் பஜிக்காமல் மற்றவர்களைப் பஜிக்கிறவர்கள்) தங்களுடைய குருவை (ஆசார்யர்) ப்ரார்த்தித்து இந்த விஷயத்தைப் பற்றி, அவர் உபதேசிக்கிறபடி நடந்து கொள்ள வேண்டும்.

---

# பெருமாள் அவதாரங்கள்

"யுகம் தோறும் ஸாதுக்களை ரக்ஷிப்பதற்கும், கெட்டவர்களை நாசம் செய்வதற்கும், தர்மத்தை பூமியில் நிலைநிருத்துவதற்கும் நான் உண்டாகிறேன்".

மேலே சொல்லிய வாக்கியத்தை ஸ்ரீக்ருஷ்ண பகவான் தன் சிஷ்யனுன அர்ஜுனனுக்கு, குருக்ஷேத்திரத்தில் பாரதயுத்தம் ஆரம்பிக்கும்முன்னுல் தேர் தட்டில் தேரோட்டியாக உட்கார்ந்து கொண்டு உபதேசித்தார் என்று ஸ்ரீமத் பகவத்கீதை பேசுகிறது.

பெருமாள் உத்யோகஸ்தர்களையும், சிப்பந்திகளையும் வைத்துக் கொண்டு லோக அரசு புரிகிருரென்று தெரிந்த விஷயமே அதைப்பற்றி மஹாபக்தனும், இன்னொமொரு வ்யாசத்தில் எழுதியிருக்கிருன். பெருமாள் ஸ்ரீமத் பகவத்கீதையில் (மேலே சொல்லப்பட்டிருக்கிறது) சொன்ன காரணங்களுக்காகவும், தன் உத்யோகஸ்தர்களான ப்ரம்மா, சிவன், முதலிய தேவதைகளால் தன் உதவி கோரப்பட்டபொழுதும், இன்னும் அநேகவிதக் காரணங்களை வைத்துக் கொண்டும் பூமியில் அவதாரம் (தன்னம்சத்தோடு கூடின உடம்பை வைத்துக்கொண்டு) எடுக்கிருர் (பிறக்கிருர்). மேலே சொல்லியிருக்கிற காரணங்களில், பிறரால் பூமியில் பிறப்பு எடுக்கும் படியாக சாபம் கொடுக்கப்படுவதும் ஒன்று. அதாவது பிறரால் "நீர்பூமியில் பிறப்பு எடுக்கவேண்டும்"

என்று சாபம் கொடுக்கபட்டு, அதைத் ஏற்றுக் கொண்டு பூமியில் அவதாரம் எடுப்பது.

பெருமாள் கூட சாபத்திற்கு ஆளாகுவாரா? அப்படி எவர்கள் அவரைசபிக்கக் கூடும்? என்கிற கேள்விகள் வரக்கூடும். ஆம் பெருமாள் தன்னை சாபம் கொடுக்கக் கூடியவர்கள் (சாபம் கொடுக்கப் பெருமாளால் அனுக்ரஹிக்கப் பட்டவர்கள்) சபித்தார்களானால் அதை ஒப்புக் கொண்டு அதை நிறைவேற்றுவார். பிருகுமகரிஷி தன்பத்தினி ராக்ஷஸர்களுக்கு அபயம் கொடுத்ததற்காக விஷ்ணுவால் அவள் கொல்லப்பட்டபொழுது விஷ்ணுவை, "நீர், பத்துதடவை பூமியில் பிறப்பு எடுக்கக்கடவீர்" என்று சபித்துவிட்டார். விஷ்ணு அதை ஒப்புக் கொண்டு பத்து அவதாரங்கள் எடுத்தார். லோகத்திலிருக்கிறவைகளெல்லாம் பெருமாள் அவதாரமென்றே சொல்வதுண்டு. பெருமாளுடைய முக்யமான சில அவதாரங்களைப்பற்றி விசாரிப்போம். ஏனென்றால் அவைகள் வெகுகாலம் பூமியில் வழங்கிக் கொண்டிருக்கும். மற்றவைகள் தங்கள் கார்யங்கள் சீக்கிரமாக முடிந்து விட்டால் உடனே தன்னடிஜோதிக்கு போய்விடும்.

பெருமாளுடைய முக்யமான அவதாரங்கள் பத்து என்று கணக்கிடப்பட்டிருக்கிறது ஜனங்களால். அவைகளாவன :— மச்சம் (மீன்), கூர்மம் (ஆமை), வராஹம் (பன்றி), நரஸிம்மம் (தலை சிங்கம், உடல் மனிதன்), வாமனம் (குள்ளமாயிருக்கிறது), பார்கவ ராமன் (பரசு ராமன்), சக்ரவர்த்தித் திருமகன் (ராமன்), புத்தர் அல்லது பலராமன், கிருஷ்ணன், கல்கி.

இந்த அவதாரங்களில் கல்கி அவதாரம் இந்த யுகத்தின் (காலம்) கடைசியில் தான் எடுக்கப்படும் என்று நம் சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. புத்தர் என்று மேலே சொல்லியிருக்கிறதை வைஷ்ணவர்கள் ஒப்புக்கொள்ளாமல், அதற்குபதிலாக பலராமனை வைத்துக் கொள்ளுகிறார்கள். ஆனால் பெருமாள் ஒரு காரணத்தை உத்தேசித்து புத்தர் அவதாரத்தை எடுத்திருக்கிறார். இந்த அவதாரங்கள் ஒவ்வொன்றும், வேறு வேறு யுகங்களில் (காலத்தில்) தான் வழங்கியிருக்கிறது. ஆனால் பரசுராமரும், ராமரும் ஒரே காலத்தில் நடமாடிக் கொண்டிருந்த போதிலும் ராமர் வந்தவுடன் பரசுராமருடைய சக்திகளை எல்லாம் தன்னிடம் இழுத்துக் கொண்டு விட்டபடியினால், பரசுராமர் பகவதம்ச மில்லாமல் ஆகிவிட்டார். அதாவது அவதாரத்தன்மை அத்துடன் முடிந்து விட்டது என்று சொல்லலாம். அவரும் இப்போது நம் மலையாள தேசத்திலிருப்பதாக லோகத்தில் சொல்லுகிறார்கள்.

மச்சாவதாரம் : வேதத்தை பிரம்மாவிடமிருந்து அபஹரித்துக் கொண்டு போன அஸுரனைக் கொன்று திரும்பவும் பிரம்மாவுக்கு வேதத்தைக் கொடுத்தார். இதுதான் முக்கியமான காரணம் இந்த அவதாரத்திற்கு.

கூர்மாவதாரம் : சிரஞ்சீவியாக இருப்பதற்காக அமிருதத்தை தருவித்து தேவதைகளுக்குக் கொடுக்க, மந்திர மலையால் பாற்கடலை கடைந்து தேவதைகளுக்கு (பெருமாளுக்கு இஷ்டமானவர்கள்)

மாத்திரம், ராக்ஷசர்களுக்கில்லாமல் பிரஸாதமாகப் பெருமாளால் மோஹினி உருவெடுத்துக் கொண்டு கொடுக்கப்பட்டது. மேலே சொன்ன ஸமுத்ர மதனம் (கடைதல்) நடக்கும்போது பெருமாள் கூர்ம உருவெடுத்துக் கொண்டு மலையை அமர்ந்து போகாமல் தாங்கிக் கொண்டிருந்தார். இந்த அவதாரத்தில் நடந்த ஸமாசாரமிது.

**வராஹாவதாரம் :** பெருமாள் வராஹ (பன்றி) ரூபமெடுத்துத் தன் பத்னியான பூமாதேவியை (பூமியை) பிரளயஜலத்திலிருந்து எடுத்து மேலேயே வைத்துக்கொண்டார். மேலும் பெருமாள் பூமாதேவிக்கு உபதேசம் செய்தார். அந்த உபதேசங்கள் லோகத்தில் பரவ செய்யப் பட்டது. இந்த அவதாரத்தின் விசேஷமிதுதான்

**நரஸிம்மாவதாரம் :** பிரஹ்லாதன் என்ற தன் பக்தனுடைய வார்த்தையை காப்பாற்றுவதற்காக ஒரு இரும்புதூணைப் பிளந்துக் கொண்டு சிங்கத்தினுடைய முகமும், மனித உடம்பும் உடைத்தான ரூபத்தோடு ப்ரஹ்லாதனுடைய தகப்பனான ஹிரண்யகசிபுவை கொன்றார். ஹிரண்யகசிபு தன் புத்ரனை ப்ரஹ்லாதனை பெருமாள் எங்கு மிருக்கிறாரென்று சொன்ன வார்த்தை நிஜமானால் இந்தத்தூணி (இரும்புத்தூண்) லிருக்கிறாரா பார்க்கலாமென்று சொன்னவுடன், பெருமாள் நரஸிங்க ரூபத்துடன் (ஏனென்றால் ஹிரண்யகசிபு தபஸ் பண்ணி பிரம்மாவிடமிருந்து 'தனக்கு லோகத்தி லிருப்பவைகளால் மரணம் நேரக்கூடாது' என்ற வரனை பெற்று இருந்தான்) இதோ மிருக்

கிறேன் பார் என்று அந்த இரும்புத்தூணை உடைத்துக் கொண்டு வெளிவந்தார். இந்த அவதாரத்தின் விசேஷ மென்ன வென்றால்: கடவுளை நம்பினோர் கைவிடப்படார் என்ற பழமொழி நிரூபிக்கப்பட்டது. ஏனென்றால் பெருமாளை (கடவுளை) நம்பித்தான் எல்லாக் காரியமும் செய்தான். அதற்குப் பெருமாள் அவனுக்கு ஒத்தாசை புரிந்தார். இல்லா விட்டால் அவன் தகப்பனார் அவனுக்கு கொடுத்த தண்டனைகளை மீறி பிழைத்திருக்க முடியுமா? இது முதல் விசேஷம். இரண்டாவது விசேஷம்: பெருமாள் புதிதான (அ தாவது) லோகத்திலில்லாதது) ரூபத்தை (நரசிங்க ரூபம்) எடுத்துக் கொண்டது. ஹிரண்யகசிபு என்ற துஷ்டனை நாசம் பண்ணியது இன்னொரு ஸம்பவமாகும் இந்த அவதாரத்தில்.

வாமனவதாரம்: பலி என்று சொல்லப்பட்ட ராக்ஷஸன் இந்திரனை ஜெயித்து பூலோக சக்ரவர்த்தியாயிருந்தான். அவன் ஒரு யாகம் செய்யும்போது பெருமாள் வாமன (குள்ளன்) ரூபத்துடன் பிறந்து, அந்த யாகத்திற்குப்போய் அவனிடம் மூன்று அடிகள் அளவுள்ள மண்ணை (பூமியை) யாசித்தார் (கொடுக்கும்படி கேட்கிறது). அவன் மிகவும் தர்மிஷ்டனானதால் கொடுக்கிறதற்கு ஒப்புக் கொண்டான். பிறகு பெருமாள் திருவிக்ரமனாக ரூபத்தை எடுத்துக் கொண்டு, ஒரு காலால் பூமியையும், இன்னொரு காலால் அந்தரிக்ஷத்தையும் (ஆகாயம்) அளந்த பிறகு, மூன்றும் அடி மண்ணுக்கு பதிலாகக் கொடுத்த அவன் தலைமேல் தன்

கிறேன் பார் என்று அந்த இரும்புத்தூணை உடைத்துக் கொண்டு வெளிவந்தார். இந்த அவதாரத்தின் விசேஷ மென்ன வென்றால்: கடவுளை நம்பினோர் கைவிடப்படார் என்ற பழமொழி நிரூபிக்கப்பட்டது. ஏனென்றால் பெருமாளை (கடவுளை) நம்பித்தான் எல்லாக் காரியமும் செய்தான். அதற்குப் பெருமாள் அவனுக்கு ஒத்தாசை புரிந்தார். இல்லா விட்டால் அவன் தகப்பனார் அவனுக்கு கொடுத்த தண்டனைகளை மீறி பிழைத்திருக்க முடியுமா? இது முதல் விசேஷம். இரண்டாவது விசேஷம்: பெருமாள் புதிதான (அதாவது) லோகத்திலில்லாதது) ரூபத்தை (நரசிங்க ரூபம்) எடுத்துக் கொண்டது. ஹிரண்யகசிபு என்ற துஷ்டனை நாசம் பண்ணியது இன்னொரு ஸம்பவமாகும் இந்த அவதாரத்தில்.

**வாமனுவதாரம்:** பலி என்று சொல்லப்பட்ட ராக்ஷஸன் இந்திரனை ஜெயித்து பூலோக சக்ரவர்த்தியாயிருந்தான். அவன் ஒரு யாகம் செய்யும்போது பெருமாள் வாமன (குள்ளன்) ரூபத்துடன் பிறந்து, அந்த யாகத்திற்குப்போய் அவனிடம் மூன்று அடிகள் அளவுள்ள மண்ணை (பூமியை) யாசித்தார் (கொடுக்கும்படி கேட்கிறது). அவன் மிகவும் தர்மிஷ்டனானதால் கொடுக்கிறதற்கு ஒப்புக் கொண்டான். பிறகு பெருமாள் திருவிக்ரமனாக ரூபத்தை எடுத்துக் கொண்டு, ஒரு காலால் பூமியையும், இன்னொரு காலால் அந்தரிக்ஷத்தையும் (ஆகாயம்) அளந்த பிறகு, மூன்றும் அடி மண்ணுக்கு பதிலாகக் கொடுத்த அவன் தலைமேல் தன்


மத்ஸ்ய


கூர்மம்


வராஹம்


நரஸிம்மம்


வாமனம்


பரசுராமன்


ராமன்


பலராமன்


கிருஷ்ணன்


கல்கி

அடியை வைத்து விட்டு, இந்திரனுக்கு ராஜ்யத்தைக் கொடுத்தார். இதில் என்ன விசேஷம் என்றால், பலி அவனுடைய ஆசாரியர், "யாசிக்கிறவர் பெருமாள், அவர் வஞ்சகம் பண்ணுகிறார், ஆகையினால் கொடுக்காதே" என்று சொன்னபோதிலும் தர்மிஷ்டனானதால் யாசித்ததைக்கொடுத்துவிட்டான். பெருமாளும் அவனுக்குப் பாதாள லோக ராஜ்யத்தைக் கொடுத்து, பிறகு பிரம்ம பட்டமும் கொடுப்பதாகச் சொல்லியிருக்கிறாரென்று சாஸ்த்ரங்களில் சொல்லியிருக்கிறது. இன்னமொரு விசேஷம் இந்த அவதாரத்தில் நடந்தது என்னவென்றால், பெருமாள் ஆகாசத்தை அளந்தபோது பெருமாளுடைய திருவடிக்கு ப்ரம்மா அபிஷேகம் செய்தார். அந்தத் தீர்த்தம்தான் கங்கை என்று பெயரிடப்பட்டு எல்லா லோகங்களுக்கும் போய் அந்த இடங்களைப் புனிதமாக்குகிறது (சுசியாக ஆக்குகிறது).

**பரசுராமாவதாரம் :** துஷ்டர்களான க்ஷத்திரியர்களை நாசம் செய்வதற்காக எடுத்த அவதாரமிது.

**ராமாவதாரம் :** இந்த வ்யாஸத்தில் ஆரம்பத்தில் எழுதப்பட்ட ஸ்ரீமத்கீதையில் சொல்லியிருக்கிற வாக்யத்தின் பிரகாரம் எடுத்த அவதாரமிது. அந்த காலத்திலிருந்த ஸாதுக்களை ரக்ஷித்தார். ராவணன் முதலான கெட்டவர்களை ஸம்ஹாரம் செய்து பூமியில் தர்மத்தை நிலை நிறுத்தினார். இந்த அவதாரம் எப்படியிருந்தது என்றால், தசரத சக்ரவர்த்தி புத்ர காமேஷ்டி யாகம் செய்ய, அதன் பிரஸாதத்தினால் புத்திரனாகப் பிறந்து, **ராமனென்ற** பெயருடன்

மூன்று (லக்ஷ்மணன், பரதன், சத்ருக்னன்) சகோதரர்களுடன் இந்த அவதாரத்தை ஆரம்பித்தார். வால்மீகி மஹரிஷி நாரதரிடம் கேள்விப்பட்டு, பிரம்மாவால் அதை எழுதும்படி அநுக்ரஹிக்கப்பட்டு, ராமாவதாரத்தைப்பற்றி 24,000 ச்லோகங்கள் கொண்ட காவ்யத்தை செய்திருக்கிறார். அதில் எவ்வளவு விசேஷங்கள் அடங்கியிருக்குமென்று எல்லோரும் தெரிந்து கொள்ளலாம். இந்த வ்யாசத்தில் அவைகளை யெல்லாம் எப்படி சொல்ல முடியும்? ஆகையால் கொஞ்சம் விசேஷங்கள் இங்கே எழுதப்பட்டிருக்கின்றன. முழுமையும் தெரிந்து கொள்ள வேண்டுமானால் மேலே சொல்லியிருக்கிற ஸ்ரீமத் ராமாயணம் என்று பெயரிடப்பட்ட புஸ்தகத்தை வாங்கி வாசித்து கொள்ளலாம். அதைப் பாராயணம் (அடிக்கடி வாசிப்பது) கூட பண்ணலாம். ஏனென்றால் பெருமானுடைய கதையை வாசித்தால் மிகவும் புண்ணியமுண்டு (கிடைக்கும்).

இந்த அவதாரத்தில் ராமன் தான் பெருமானென்றில்லாமல் சாதாரண மனிதனென்றே காண்பித்துக் கொண்டிருந்தார். ஆனால் ஒரு இடத்தில் தான் பெருமானென்று காட்டிக்கொண்டார். அது எங்கே என்றால், அவர் ஜடாயுவை மோக்ஷத்திற்கு அனுப்பியபோது. மோக்ஷம் கொடுப்பது பெருமானால் தான் முடியும். மேலும் பெருமான் அவதாரம் எடுத்து மோக்ஷம் கொடுத்தது இந்த ஒரு இடத்தில்தான். மற்ற அவதாரங்களில் இந்த மாதிரிச் செய்யவில்லை. இது வெகு விசேஷமான சமாசாரம்.

ஸ்ரீமத்ராமாயணம் சரணாகதி சாஸ்த்ரமென்று வைஷ்ணவர்களால் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது இந்த அவதாரத்தில் அநேகயிடங்களில் சரணாகதி என்ற முறை கையாளப்பட்டிருக்கிறது. அதாவது, ராமரை சரணாகதி பண்ணியிருக்கிறார்கள். அவைகள்: விபீஷண (விபீஷணனால் செய்யப்பட்ட சரணாகதி) சரணாகதி, ஸுக்ரீவ (வாலியின் தம்பியான ஸுக்ரீவனால் செய்யப்பட்ட சரணாகதி) சரணாகதி, இன்னும் சில சரணாகதிகளில் பெருமானால் செய்யப்பட்ட சரணாகதி (ஸமுத்ர ராஜனை சரணாகதி பண்ணியது) ஒன்றும் ஸம்ஸாரத்தில், அவரும் அவருடைய தர்மபத்னியான ஸீதாதேவியும், நடந்து கொள்ள வேண்டியதைப் பற்றியும் காண்பித்திருக்கிறார்கள். அவர் பக்தனை மாருதி (ஹனுமான்) எப்படி ஸேவகம் பண்ணுவதென்று காண்பித்திருக்கிறார். இந்த அவதாரத்தில் லக்ஷ்மணன் என்ற பெயருடைய அவர் தம்பியும் ஸேவகம் எப்படி செய்வது என்பதைக் காண்பித்திருக்கிறார். அவரும் பித்ருவாக்ய பரிபாலனம் (தன் தகப்பனார் சொன்ன வாக்கியத்தின்படி நடப்பது) செய்து 24000 வருஷம் ராஜ்ய பரிபாலனம் பண்ணியிருக்கிறார். அவர் பத்னியான ஸ்ரீஸீதாதேவி எப்படி நடந்து கொண்டாள் என்ற விஷயமும் இதிலிருக்கிறது.

**புத்தர்:** இப்போது நடக்கிற கலியுகத்தில் ராக்ஷஸர்கள் (கெட்டதைச் செய்கிறவர்கள்) நல்ல கதி அடைவதற்கு தபஸ் செய்ய ஆரம்பித்தபோது பெருமாள் அவர்கள் எண்ணத்தை மாற்றுவதற்காக ஒரு அவதாரம் எடுத்து, அவர்களுக்கு அந்த மாதிரிச் செய்வது நல்லதல்லவென்று போதிக்க,

அவர்கள் பௌத்தர்களாகி விட்டார்கள் (அதாவது புத்தர் சொன்ன மாதிரி செய்தார்கள்). மேலே சொன்ன போதனையில் வேதமும் தூஷிக்கப்பட்டபடியால் வேதத்தை தூஷித்த புத்தரை வைஷ்ணவர்கள் அவதாரமென்று ஒப்புக்கொள்ள மாட்டோமென்கிறார்கள்.

**க்ருஷ்ணவதாரம்:** இதுவும் **ராமாவதாரம்** போல் ரொம்ப நாட்கள் நடந்தது. அதாவது அநேக் விஷயங்கள் இந்த அவதாரத்தில் நடந்திருக்கின்றன. அவைகளெல்லாம் வேதவ்யாஸர் எழுதிய ஸ்ரீமத் பாகவதம் என்ற புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அதை வாசித்துத் தெரிந்துகொள்ளலாம். இல்லாவிட்டால் பாகவதர்கள் ஸ்ரீமத் ராமாயணத்தையும், ஸ்ரீமத் பாகவதத்தையும் காலக்ஷேபம் இந்த ஊரில் அநேக இடங்களில் செய்கிறார்கள். அதைக் கேட்டு **க்ருஷ்ணனுடைய** சரித்திரத்தைப்பற்றி தெரிந்து கொள்ளலாம். ஆகையினால் இப்பொழுது இந்த அவதாரத்தில் நடந்த சில சமாசாரங்களைப் பற்றி விசாரிப்போம்.

இந்த அவதாரத்தில் **தான்** பெருமாளென்றே தன்னுடைய செயல்களால் காட்டிக் கொண்டார். மேலும் ஸ்ரீமத் பகவத் கீதையில் "தன்னை ஜனங்கள் இன்னாரென்று (பெருமாளென்று) தெரிந்து கொள்ளாமல் ஸாதாரண மனிதனென்று எண்ணுகிறார்களென்று" **க்ருஷ்ணன்** அர்ஜுனனுக்கு உபதேசித்திருக்கிறார்.

ஸ்ரீமத் பகவத் கீதையை தன் பக்தனை அர்ஜுனனுக்கு லோகத்தின் நன்மையின் பொருட்டு உபதேசித்தது மிகவும் விசேஷமான ஸம்பவம்

இந்த அவதாரத்தில். ஆனால் இந்த கலியுகத்தில் அது பிரயோஜனப்படமாட்டாது. ஏனென்றால் அதற்கு விரோதமாகத்தான் எல்லாம் நடக்கும். ஆனால் அந்த மாதிரி இப்போது நடக்காமல் கலி யுகம் நாட்கள் ஆக ஆக கடைசியில் அந்த மாதிரி நடக்கும். ஆகையால் இப்போது இருக்கிறவர்களுக்கு ஸ்ரீமத் பகவத் கீதை பிரயோஜனப்படலாம்.

இன்னமொரு முக்யமான விஷயம் நடத்திருக்கிறது இந்த அவதாரத்தில். அது என்னவென்றால்! ஸ்ரீ க்ருஷ்ணன், ஒரு ப்ராம்மணன் பிறந்தது முதல் தன் வாழ் நாளில் என்ன என்ன செய்ய வேண்டுமோ அந்த மாதிரி செய்திருக்கிறார். குழந்தையாயிருக்கும்போது ஜாதகர்மம், நாமகரணம் முதலான ஸம்ஸ்காரங்களெல்லாம் அவருக்கு நடந்து, பிறகு சாந்தீபினி என்று பெயருள்ள ஒரு ஆசார்யரால் உபநயனம் செய்விக்கப்பட்டு, 64 கலைகளான எல்லா வித்தைகளும் உபதேசிக்கப்பட்டு, பிறகு க்ருஹஸ்தாச்ரமத்தை அடைந்து, துவாரகையில் ப்ராம்மணன் நித்யம் செய்ய வேண்டிய அனுஷ்டானங்களை யெல்லாம் செய்துகொண்டு வந்தார் ஸ்ரீ க்ருஷ்ணன். இதைப்பார்த்து எல்லா ப்ராம்மணர்களும் எப்படி லோகத்தில் நடந்துகொள்ள வேண்டுமென்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும்.

கல்கி அவதாரம் லோகத்தில் எல்லாம் விபரீதமாக நடப்பதை நாசம் பண்ணி தர்மத்தை பூமியில் நிலை நிறுத்துவதற்காக எடுக்கப்போகிற அவதாரமென்று சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

---

## அர்ச்சாவதாரம்

பெருமாள் ஜனங்களை ரக்ஷிப்பதற்கு பூமியில் அனேக அவதாரங்கள் (தானிருக்கிற ஸ்தானத்தி லிருந்து கீழே இறங்கி வருவது) எடுத்திருக்கிறார். அவைகளில் அர்ச்சை என்பது ஒன்று. அர்ச்சை= மூர்த்தி. எந்தப் பெருமாள் தேவையானவரோ அந்தப் பெருமாள் ரூபத்தோடு கூடின பிம்பத் திற்கு பூஜை செய்வதற்கு எடுத்த அவதாரம் அர்ச் சாவதாரம் என்று சொல்லப்படுகிறது. அந்த அர்ச்சாவதார பிம்பத்தை ஒரு இடத்தில் ஸ்தா பித்து (வைத்து) அதைப் பூஜிக்க வேண்டும். அந்த மாதிரியிடங்கள் இப்போது கோவில்களாயும், அகங் களாயும் (வீடுகள்), வெறும் தரையாகவும் (பூமி) இருக்கின்றன.

அர்ச்சாவதாரத்தைப் பற்றி பெருமாளே தன் புத்ரனை ப்ரம்மாவுக்கு உபதேசித்திருக்கிறார். அதை வேதவ்யாஸர் ப்ரம்மாண்ட புராணத்தில் பேசியிருக்கிறார். அந்த வாக்யங்களை "ஸ்ரீரங்க மஹாத்ம்யம்" என்ற புஸ்தகம் பிரசுரித்திருக்கிறது. அது பின் வருமாறு:—

"பிரம்மா:—பெருமாளே! உம்மை இப்போது அறிந்தேன். உம்மை நான் நித்யமாக ஆராதிக்க விரும்புகிறேன்.

"**ரங்கநாதன்** (பெருமாள்):—ப்ரம்ம தேவா! உன்னை அனுக்ரஹிப்பதற்காகவே நான் அர்ச்சாவ தாரம் எடுத்தேன். இந்த ரங்க விமானத்துக்குள்ளே

இருக்கும் நான் தான் முதல் முதலாக உண்டான அர்ச்சாவதாரம். நீ என்னை ப்ரதிதினமும் பூஜித்து மோக்ஷம் பெறலாம்."

"ஒவ்வொரு த்வீபத்திலும், ஒவ்வொரு தேசத்திலும், க்ராமத்திலும், எல்லாக் கோயில்களிலும், வீடுகளிலும், ஒரோர் மனுஷனிடத்திலும் கூட நான் விக்ரஹரூபமான அர்சாமூர்த்தியாகவே இருப்பேன், என்னுடைய அர்ச்சா மூர்த்தியான விக்ரஹங்கள் லோஹம், சிலை, மண், மரங்களால் செய்யப்படுவதாயிருக்கும். பரம பதத்தில் சரீரத்தோடுள்ள நான் என்னுடைய பரம், வியூஹம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை என்ற ஐந்து நிலைகளிலும் ஒவ்வொரு காலத்திலுண்டாகும் ஆவிர்பாவத்திலும் என் இச்சையாலுண்டான சரீரத்தோடிருப்பேன் என்னுடைய தத்வத்தையும் அர்ச்சா ஸ்வரூபத்தையும் உண்மையாயறியாமல், என் விக்ரஹத்தை கல்லாய், மண்ணாய், மரமாய், லோஹமாய் நினைப்பவர் நரகமே புகுவர். என் விக்ரஹத்தை பக்தியோடு பூஜிப்பவர் பரமபதம் சேருவர்."

"என்னுடைய அர்ச்சாவதாரம் நாலு விதமாயிருக்கும். அதன் விவரத்தை சாஸ்த்ரங்களில் சொல்லியிருக்கிறேன். ஒவ்வொரு மூர்த்திக்கும் ஒரு விமானம் உண்டு. ஸ்வயம் வ்யக்தம், திவ்யம், ஸைத்தம், மாநுஷம் என்று விக்ரஹங்கள் நாலு விதமாயிருப்பது போலவே அவற்றின் விமானங்களும் ஸ்வயம் வ்யக்தாதி ப்ராகாரங்களாயிருக்கும்.

இவற்றில் ஸ்வயம் வ்யக்தம் மட்டும் தானுயுண்டானது, மற்ற மூன்றும் சில்பியின் கைத்தொழில். பரம், வ்யூகம், வ்யூகாந்தரம், விபவம், ஆவேசம், அம்சம், ஆவிர்பவம்-என்ற இவற்றுக்கு மட்டுமே விக்ரஹம் உண்டு. அந்தர்யாமிக்கு விக்ரஹமில்லை. என்னுடைய மூர்த்தி சில்ப லக்ஷணத்தின்படி ஸ்வரூபமாய், ஸர்வ சிரேஷ்டமாய், சோபை நிறைந்ததாய், காண்போர் கண்ணைக் கவர்வதாய், மனோஹரமாய், ப்ரஸந்ந முகமாயிருக்க வேண்டும். விக்ரஹங்கள் மேல் நோக்கும், கீழ் நோக்கும், குறுக்கு நோக்குமாயிருக்கக் கூடாது. அப்படியுள்ளவை பூஜிக்கத் தக்கவையல்ல.''

"இந்த ரங்க விமானந்தான் ஆத்யமான (முதலான) ஸ்வயம் வ்யக்தம். ஸ்ரீமுஷ்ணம், வேங்கடாத்ரி, ஸாளக்ராமம், நைமிசம், தோதாத்ரி (வானமாமலை), புஷ்கரம், நரநாரயாணாச்ரமம் (பதரிகாச்ரமம்) இவைகளிலிருக்கிற கோயில்களும் ஸ்வயம் வ்யக்தங்கள்.''

"பிரம்ம தேவரே! நீ ஒரு யாகம் பண்ணப் போகிறாய். அதில் நான் அக்னி குண்டத்திலிருந்து எல்லா பிராணிகளுக்கும் வரம் கொடுக்கும் வரதனாய் ஆவிர்பவிக்கப் போகின்றேன். அந்த மூர்த்தியை நீ அங்கேயே (காஞ்சீபுரத்திலேயே) ப்ரதிஷ்டிப்பாய். அது முதலாக பூலோகத்தில் பலரும் என்னை பலவிடங்களிலும் ப்ரதிஷ்டை பண்ணி எனக்கு கோயில் கட்டுவார்கள்.''

"தேவர்கள் ப்ரதிஷ்டை பண்ணின மூர்த்திகள் திவ்யங்களென்றும், ஸித்த புருஷர்கள் பிரதிஷ்டை

பண்ணின மூர்த்திகள் ஸைத்தங்களென்றும் சொல்லப் படும்.''

'' மனுஷ்யர்களும் என்னை பக்தி சிரத்தையோடு பிரதிஷ்டை பண்ணுவார்கள். அந்த மூர்த்திகளும், விமானங்களும் மநுஷ்ய ப்ரதிஷ்டையாகையால் மாநு ஷங்களாயிருக்கும். அந்த மூர்த்திகளுக்கு பலன் கொடுக்கச் சக்தியுண்டு. பிரதிஷ்டை பண்ணுகிறவ னுடைய தபஸ்ஸு, பூஜையிலுள்ள விசேஷம், பிம் பத்தினுடைய அழகு இவற்றுக்குத் தக்கபடித் தான் அந்த மூர்த்திகளில் என்னுடைய ஸாந்நித்யம் இருக்கும். இந்த மூன்றும் குறையாமலிருந்தால் என் ஸாந்நித்யம் பூர்ணமாயிருக்கும், இதில் எது குறைந்தாலும் அதற்குத் தக்கபடி ஸாந்நித்யம் குறைந்து விடும்.''

''ஸ்வயம் வ்யக்த க்ஷேத்திரம் சிறந்த புண்ய பூமி யாய் விளங்கும். ஸ்வயம் வ்யக்த க்ஷேத்ரத்தைச் சுற்றி இரண்டு யோஜனை தூரம் வரையில் புண்ய பூமி. திவ்ய ஸ்தலங்களைச் சுற்றி ஒரு யோஜனை தூர மும், ஸைத்த ஸ்தலங்களைச் சுற்றி அரை யோஜனை யும், மாநுஷ ப்ரதிஷ்டையாயுள்ள ஸ்தலங்களைச் சுற்றி க்ரோச பூமியும் புண்ய பூமியாகும். வீட்டில் ஒரு மூர்த்தியை வைத்து பூஜித்தால் அந்த வீடு முழுவதும் பரிசுத்தமாயிருக்கும். ஸாளக்ராமம் உள்ள இடமெல்லாம் ஸ்வயம் வ்யக்த க்ஷேத்திரம் போலவே பரிசுத்தமாயிருக்கும். பெருமாளில்லாத ஊர் சண்டாள பூமி, ப்ரம்ம வித்துக்களால் த்யஜிக் கத்தகும். ஒரு கிராமத்திலாவது நகரத்திலாவது

பன்னிரண்டு விஷ்ணு கோயில் இருந்தால் அதற்கு ஸாளக்ராம க்ஷேத்ரமென்று பெயர்.''

''ஸ்வயம் வ்யக்த க்ஷேத்திரங்களுக்குள் ஸ்ரீரங்கம் தான் ஆதியாயும், ப்ரதானமாயுள்ளது. இதைச் சுற்றிலும் இரண்டு யோஜனை தூரத்துக்குள் எங்கேயிருந்தாலும் மோக்ஷம் நிச்சயம். இந்த க்ஷேத்திரத்தில் வஸிக்கிறவைகள் (திர்யக் கூட) மோக்ஷம் பெறுகின்றன.''

''பிரம்ம தேவா! நீ பாஞ்சராத்ர விதிப்படி பஞ்சகால பரனாகயிருந்து கொண்டு என்னை ப்ரதி தினம் மூன்று காலத்திலும் தவறாமல் ஆராதனம் பண்ணு (பஞ்ச காலமாவது-அபிகமனம் உபாதானம், இஜ்யை, ஸ்வாத்யாயம், யோகம். இந்த ஐந்து கார்யங்களுக்காக ஒரு நாளை ஐந்தாகப் பிரித்து அதன்படியே அனுஷ்டிக்க வேணும்). இந்த ஐந்து கார்யங்களையும் தவறாமல் செய்து வந்தால் பகவத் பக்தியும் பரம பதமும் எளிதாய்க் கிடைக்கும்.''

லோகத்தில் இந்தியா தேசத்திலொன்றில் தான் பெருமாள் அர்ச்சாவதாரம் எடுத்திருக்கிறபடியால், அது தான் புண்ய பூமி என்று சொல்ல வேண்டும், அர்ச்சாவதாரம் புண்யமில்லாத வேறு இடத்தில் எடுக்க மாட்டாராகையால். இந்தியாவிலும் தென்னிந்தியா தான் மிகவும் புண்யமான பூமி என்று சொல்ல வேண்டும். ஏனென்றால் அவ்விடத்தில்தான் அநேக பெரிய கோவில்கள் காணப்படுகின்றன. மகமதியர்கள் இந்தியாவை தங்கள் வசத்தில் வைத்துக் கொண்டிருந்தபொழுது வட

இந்தியாவில் தான் அதிகம் நடமாடிக் கொண்டிருந்தார்கள். தென்னிந்தியாவில் கொஞ்ச தூரந்தான் அவர்களால் வர முடிந்து திரும்பிப்போக வேண்டியதாயிற்று. ஆகையால் அவர்கள் வட இந்தியாவில் செய்த மாதிரி தென்னிந்தியாவில் கோவில்கள் பேரில் அதிகம் புத்தி செலுத்த முடியவில்லை. அதனுல் அவைகள் தப்பித்துக் கொண்டன என்று சொல்லக்கூடும். விஷயம் இந்த மாதிரி இருந்தபோதிலும் தென்னிந்தியாவில் தான் பெரிய கோவில்களிருக்கின்றன. அதனுல் தென்னிந்தியா தான் இந்தியாவின் மற்ற பாகங்களை விட புண்ய பூமி என்று சொல்லவேண்டும்.

கோவில்கள் பெருமாளுக்கு மாத்ரம் கட்டப்படாமல் தேவதைகளுக்கும், ஆசார்யர்களுக்கும் கட்டப்பட்டிருக்கிறது. அதாவது ஒவ்வொரு மதத்தவர்கள் தங்களுடைய தெய்வத்திற்கோ அல்லது ஆசார்யர்களுக்கோ கோவில்கள் கட்டி அவர்களைப் பூஜிக்கிருர்கள்.

மஹாபக்தன் சில பெருமாள் கோவில்களைப் பற்றி பின் வருமாறு எழுதுகிருன் :—

மேலே பெருமாளால் (ரங்கநாதர்) ப்ரம்மாவுக்கு "ரங்க விமானத்துக்குள்ளே இருக்கும் நான்தான் முதல் முதலாக உண்டான அர்ச்சாவதாரம்" என்று சொல்லப்பட்டதனுல் அந்த ரங்க விமானம் ப்ரதிஷ்டிதமான ஸ்ரீரங்கம் என்ற க்ஷேத்திரத்தில் கட்டப்பட்ட கோவிலைப் பற்றி முதலில் சொல்ல வேண்டும்.

"ரங்க விமானத்தைப்" பற்றியும் ப்ரம்மாண்ட புராணம் பேசுகிறது. அது பின் வருமாறு:—

"பெருமாளால் ரங்க விமானம் ப்ரம்மாவுக்குக் கொடுக்கப்பட்டு ப்ரம்மா தன்னுடைய ஸ்தானமான ஸத்ய லோகத்தில் அதை ப்ரதிஷ்டை செய்து, ஸூர்யன், வைவஸ்வதமநு என்றவர்களோடு ஆராதனம் பண்ணினார். பிறகு மநு புத்ரனான இக்ஷ்வாகு தபஸ் பண்ணி ப்ரம்மாவிடமிருந்து அதைப் (ரங்க விமானம்) பெற்றுத் தன்னுடைய அயோத்யா நகரத்தில் ப்ரதிஷ்டித்து ஆராதனம் பண்ணினார். பிறகு இக்ஷ்வாகு வம்சத்தில் உதித்த ராமனால் அது ஆராதிக்கப்பட்டு, விபீஷணனுக்குக் கொடுக்கப்பட்டது. விபீஷணன் அதைக் கொண்டு வந்து காவேரி தீரத்தில் ப்ரதிஷ்டை பண்ணினான். அது முதல் **ரங்கநாதன்** காவேரி தீரத்திலேயே கல்பாந்த ஸ்தாயியாய் தங்கி விட்டான். இந்த சுவேத வராஹ கல்பம் முடியும் வரையில் பெருமாளும் விமானமும் காவேரி தீரத்திலேயே இருந்து மநுஷ்யர்களால் தரிசிக்கப்படுவதாயிருக்கும்,

[மேலே சொன்ன சமாசாரம் சுருக்கமாக சொல்லப்பட்டிருக்கிறது. அந்த சமாசாரம் ஸ்ரீரங்க மஹாத்ம்யம் என்ற புஸ்தகத்தில் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அதை வாசித்துத் தெரிந்து கொள்ளலாம்]

"பெருமாளையும் விமானத்தையும் விட்டு பிரிய மனமில்லாமல் விபீஷணன் அயோத்தியில் இக்ஷ்வாகு காலம் முதல் எல்லா அரசர்களும் பிரதி வரு

ஷமும் தவருமல் நடத்தி வந்த ஆதி ப்ரம்மோத்ஸ வத்தை நடத்திவிட்டுத் தன்னுடைய இடமான லங் கைக்குப் போகுமுன் பெருமாளிடத்தில் போய் கத றினபோது பெருமாள் சொல்லலானுர் :—'விபீஷணு ! காவேரி சூழ்ந்த இந்நாடு மிக்க மனோகரமாயிருக் கிறது. இங்குள்ள ரிஷிகள் என்னை தரிசிப்பதற் காகவே இந்த க்ஷேத்திரத்தில் நெடுநாளாகக் காத் திருக்கிறுர்கள். ஆகையால், விபீஷணு ! நான் இங்கேயே இருக்க விரும்புகின்றேன்.''

'' இதுவும் தவிர, என்னுடைய பாதத்திலி ருந்து உண்டாகிச் சிறப்புற்ற கங்கையை விட புனி தையாய் விளங்க விரும்பின காவேரி, ஸார க்ஷேத்ர மென்னும் திருச்சேறையில் என்னுடைய விக்ர ஹத்தை ப்ரதிஷ்டை பண்ணி பூஜிக்க, என் திருக் கோவிலான ரங்க விமானத்தோடு வந்து நான் உன் னிடத்திலேயே நித்யவாஸம் பண்ணுகிறேனென்று காவேரிக்கு முன்பே வாக்கு கொடுத்து விட்டேன். ஆகையால் விபீஷணு ! நீ லங்கைக்குப் போ நான் இங்கேயே இருக்கிறேன் ''—(ஸ்ரீரங்க மஹாத்மயம்).

பிறகு விபீஷணன் லங்கைக்குப் போய் விட் டான். தர்ம வர்மா என்ற அப்போது தமிழ் நாட்டை ஆண்டு கொண்டிருந்த அரசன் ப்ராம்ம ணர்களைக் கொண்டு பூஜை உத்ஸவம் முதலான வற்றை சிறப்பாக நடத்திக் கொண்டிருந்தான்.

ஸ்ரீரங்கத்தைப் பற்றின விவரம் பல புராணங் களில் பேசப்பட்டிருக்கிறது. ஸ்ரீரங்கம் பஹு-புராண ப்ரஸித்தம் என்று வேதாந்த தேசிகர் கொண்டாடுகிருர்.

ரங்கம்—இதில் ஸர்வேச்வரன் ரமித்திருக்கிறான். காவேரியே வேதம், இரண்டு காவேரியின் நாலு கரைகளும் நாலு புருஷார்த்தங்கள். ஸ்ரீரங்கத்தை ஒட்டியுள்ள இரண்டு கரைகளும் தர்ம மோக்ஷங்கள். அப்பாலுள்ள இரண்டு கரைகளும் அர்த்த, காமங்கள்—அதாவது—வடதிருக் காவேரியின் வடகரை அர்த்தம், தென்கரை தர்மம், தென்திருக் காவேரியின் தென்கரை காமம், வடகரை மோக்ஷம்.

ஸப்த ப்ராகாரங்களும் ஸப்த (7) லோகங்கள். விமான ப்ரதக்ஷிணமாயுள்ள முதல் ப்ராகாரம் ஸத்ய லோகம், இரண்டாவது தபோலோகம், மூன்றாவது ஜனர் லோகம், நான்காவது மஹர் லோகம், ஐந்தாவது ஸுவர்லோகம், ஆருவது புவர் லோகம், ஏழாவது பூலோகம்.

ரங்க விமானமே ப்ரணவம். ரங்க மண்டபம் = காயத்ரீ [காயத்ரி மண்டபம் என்று பெயர். அதிலுள்ள இருபத்திநாலு தூண்களும் காயத்ரியிலுள்ள இருபத்திநாலு எழுத்துக்கள்.]

விமான கலசங்கள் :—ஒன்பதும் காயத்ரியின் ஒன்பது சிரஸுக்கள்.

கோபுரங்கள் : வேதத் தேவதைகள். வேதாங்களான சாஸ்தரங்களெல்லாம் ஸந்நிதியிலுள்ள வஸ்துக்களாயும் கார்யங்களாயும் விளங்குகின்றன. 15 கோபுரங்கள் இருக்கின்றன.

ஸ்ரீரங்கநாதர் தெற்கே திருமுக மண்டலத்தோடு புஜங்க சயனத்தோடும் ஸேவை ஸாதிக்கி

ருர். ஸ்ரீரங்க நாச்சியார் தனிக் கோயில் நாச்சியாராக (அதாவது பெருமாளோடில்லாமல் தனியாக கோயில் கொண்டிருப்பது) ஸேவை ஸாதிக்கிருள். பெருமாள் தர்ம வர்மாவுக்கும், ரவி வர்மனுக்கும் பரத்யக்ஷம். கோயிலைச் சுற்றி அனேக தீர்த்தங்களிலிருக்கின்றன.

ஆழ்வார்கள் இந்தியாவிலுள்ள 108 திவ்ய வைஷ்ணவ க்ஷேத்திரங்களிலுள்ள பெருமாள்களை மங்களாசாஸனம் பண்ணியிருக்கிருர்கள். இந்த 108 திவ்ய க்ஷேத்திரத்திலொன்ருன ஸ்ரீரங்கத்திலிருக்கிற பெருமாளை அனேகமாக எல்லா ஆழ்வார்களும் பாடியிருக்கிருர்கள். ஆகையால் இது விசேஷமானது என்று கருத வேண்டும்.

இச்சந்நிதியில் மற்ற சந்நிதிகளைப் போல் தேங்காயை மூலஸ்தானத்தில் உடைப்பதில்லை. அதனுல் வெளியில் உடைத்த தேங்காய் துருவலையே பெருமாளுக்கு ஸமர்ப்பிக்கப்படும்.

மேலே சொல்லியிருக்கிற விஷயங்களை யெல்லாம் வாசித்துப் பார்த்தால் இந்தக் கோவில் எவ்வளவு மகிமையுள்ளது என்று தெரிந்து கொள்ளலாம். அதனுல் தான் இந்தக் கோவில் 'கோவில்' என்று அழைக்கப்படுகிறது (அதாவது கோவில் என்ருல் ஸ்ரீரங்கத்திலிருக்கிற ஸ்ரீரங்கநாதர் கோவிலைத்தான் குறிக்கும்). மேலும் இந்தக் கோவிலிருக்கிற க்ஷேத்ரத்தை பூலோக வைகுண்டமென்றும் அழைக்கிருர்கள் ஜனங்கள். அப்பேர்பட்ட கோவில் இப்போது என்ன ஸ்திதியிலிருக்கிறது என்று கவ

ஹித்துப் பார்த்தால் வருத்தத்தைத்தான் கொடுக்கும். என்ன செய்வது. அதற்கு இப்பொழுது இருக்கிற ஜனங்களின் துர்தசைதான் காரணமென்று கருதவேண்டும். இப்போது எப்படி இருக்கிறது தெரியுமா இந்தக் கோவில்? அதைப்பற்றி கொஞ்சம் கீழே சொல்லப்பட்டிருக்கிறது.

கோவில் ஏழு ப்ராகாரங்களில் முதல் மூன்றில் ஜனங்களே குடி கொண்டிருக்கிறார்கள். இந்தக் கோவிலும் "ஆலயப்ரவேசம்" (அதாவது கோவிலுக்கு வரக்கூடாதவர்கள் வருவது) ஆகிக் கொண்டே யிருப்பதனால் மிகவும் அசுத்தமாகிக் கொண்டேயிருக்கிறது. சமீபத்தில்பெருமாள் சந்நிதியிலேயே தீப்பற்றுதல் ஏற்பட்டு பெருமாளுக்கும் அவருடைய சயனமாகிற ஆதி சேஷனுக்கும் கொஞ்சம் குறை ஏற்பட்டு அவைகளை புதுப்பித்து, ஸம்ப்ரோக்ஷணையும் செய்யப்பட்டு ஆலயப்ரவேசம் திரும்பவும் ஆகிக் கொண்டே யிருக்கிறது. அதாவது பெருமாளுக்கு பூஜை சரியாக பண்ணப் படுவதில்லை என்றுதான் சொல்ல வேண்டும். பெருமாளே (மேலே சொல்லியிருக்கிறபடி) தன்னுடைய ஸாந்நித்யம் பூஜை செய்கிறவர்கள் எப்படி செய்கிறார்களோ அந்த மாதிரி தானிருக்கு மாதலால் அவருடைய ஸாந்நித்யம் சரியாக விராது என்று எடுத்துக்கொள்ள வேண்டும். [அதனால் தான் பெருமாள் மஹா பக்தனை அந்தக் கோவில் பெருமாளை ஸேவிக்க அழைத்துக்கொண்டு போகிற தில்லை போலும்].

# ஸ்ரீ ராமாவதாரம்

இந்தியா முழுமையும் ஸ்ரீராமனை எல்லாரும் கொண்டாடுகிறார்கள். அநேகமாக எல்லாக் கோயில்களிலும் அவருடைய ப்ரதிமையை ப்ரதிஷ்டைப்பண்ணி பூஜிக்கிறார்கள். ஜோஸ்யர்கள் கூட ஸ்ரீராமனுடைய சரித்திரத்தைப் பாடியிருக்கிற வால்மீகி மஹர்ஷியினுடையப் புஸ்தகத்தைப் பிராயச்சித்தம் (பாவசாந்தி) பண்ணுவதற்கு பாராயணம் (படித்தல்) செய்யச் சொல்லுகிறார்கள். அதாவது அந்தப் புஸ்தகத்தைப் படித்தால் நல்ல பலன் கிடைக்குமென்று, சிவன் கூட ஸ்ரீராம தாரக மந்திரத்தை காசியிலிருக்கிற மணிகர்ணிகா என்று பெயருள்ள, கங்கை நதிக்கரையில் பிராணனை விடுகிறவர்களுக்கு உபதேசித்து அவர்கள் நல்ல கதியை (மோக்ஷம்) அடையும்படிச் செய்கிறான். மேலும் இந்த அவதாரத்தில் ஹிமயமலை முதற்கொண்டு இந்தியாவின் அடிப்பாகமாகிய தனுஷ்கோடியும் அதற்குக் கீழேயிருந்த ராவணனுடைய லங்கா பட்டணத்திற்கும் பெருமாள் சஞ்சாரம் பண்ணியதாக சொல்லப்படுகிறது. ஆகையால் இந்த ஸ்ரீராமவதாரம் மிகவும் விசேஷமானது என்று எடுத்துக்கொள்ள வேண்டும்.

விஷ்ணுவின் அவதாரங்களில் பொருக்கி எடுக்கப்பட்ட தச (10) அவதாரங்களில் இந்த ஸ்ரீராமாவதாரம் ஒன்றாகும். இதுவும் ஸ்ரீ க்ருஷ்ணவதாரம் போல் வெகுகாலம் பூமியில் நடமாடிக் கொண்டிருந்தது. அது எப்பொழுதென்றால் இப்பொழுது நடக்

கிற சதுர்யுக ஸ்ரீ க்ருஷ்ணனிருந்த த்வாபரத்திற்கு முந்தின த்ரேதாயுகமாகுமென்று சொல்லலாம், ஏனென்றால் ஸ்ரீராமன் ரிஷிகளுக்கு வாக்குத்தத்தம் செய்ததை அடுத்த யுகத்தில் ஸ்ரீ க்ருஷ்ணன் பூர்த்தி செய்தாரென்று சொல்லப்பட்டிருக்கிறது.

ஸ்ரீராம காதை (சரித்திரம்) பெருமாளைப் பாடின வேதவ்யாஸரால் பாடப்படவில்லை. அது ப்ரம்மா வால் அனுக்ரகிக்கப்பட்டு (அருள்) நாரத மஹரிஷி யால் போதிக்கப்பட்டு (சொல்லிக்கொடுத்து) ஸ்ரீராம னையே த்யானம் பண்ணிக்கொண்டிருந்தவரான வால்மீகி மஹர்ஷியால் பாடப்பட்டிருக்கிறது. இன்னும் அநேகம் பேர்கள் அதைப்பாடியிருக்கிறார் கள். முதலில் வால்மீகி பாடினதைத்தான் நாம் எடுத்துக்கொள்ள வேண்டும். அப்புறம் மற்றவர் கள் பாடினதை எடுத்துக் கொள்ளலாம், எடுத்துக் கொள்ளாமலுமிருக்கலாம், ஏனென்றால் அவரவர்க ளுக்குத் தெரிந்தவைகள் வெவ்வேறு விதமாகவு மிருக்கும். வால்மீகியின் புஸ்தகத்தைத் தவிர, 22 ராமாயணங்களும், ராமாயணத்தைச் சேர்ந்த 55 நூல்களும் இருந்ததாகக் கணக்குச் சொல்லப் பட்டிருக்கிறது. ஆனால் அவைகளில் சில அகப்படு கிறதில்லையாம் இப்பொழுது.

மற்ற அவதாரங்கள் மாதிரி இந்த அவதாரமும் நேக காரணங்களை உத்தேசித்து எடுக்கப்பட்டது று தெரிகிறது. மற்ற அவதாரங்களில் போல் துக்களை ரக்ஷித்து துஷ்டர்களை சிக்ஷித்துத் தர் நிலை நிறுத்த ஒவ்வொரு யுகத்திலும் அவ

தாரம் செய்கிறேனென்று" சொல்லியபடியும் தன்னையே புத்ரனாக அடைய வேண்டுமென்று முன் பிறப்பில் தபஸ் செய்த தசரத மஹாராஜனுடைய வேண்டுகோளைப் பூர்த்தி பண்ணவும் இந்த அவதாரம் எடுத்தார் பெருமாள்.

இந்த அவதாரம் எப்படி ஆரம்பமாயிற்று (பிறக்கிறது) என்றால் அயோத்தியாண்ட சூரிய வம்சத்தரசர்களில் உதித்த தசரதன் அவனுக்கு எல்லா ஸம்பத்துக்களும் நிறைந்திருந்த போதிலும் புத்ரஸம்பத் இல்லாமையால் ஒரு புத்ர காமேஷ்டி யாகம் செய்தபொழுது ஒரு பாத்திரத்தில் பாயஸம் பிரஸாதமாக அவனுக்குக் கொடுக்கப்பட்டது. அந்த ப்ரஸாதத்தை இரண்டாகப் பிரித்து ஒரு பாகத்தைத் தன் மூத்த மகிஷியான கௌஸல்யைக்கும், மற்ற பாகத்தை இரண்டாகப் பிரித்து, ஒரு பாகத்தை ஸுமித்திரைக்கும் மற்றொரு பாகத்தை கைகேயிக்கும் அதன்பிறகு அம்மகிஷிகள் கருத்தரித்து, கௌஸல்யை ஸ்ரீராமனையும், கைகேயி பரதனையும், சுமித்ரை லக்ஷ்மணனையும், சத்ருக்னனையும் பெற்றார்கள். ஸ்ரீராமனை பெருமாள் தனக்கு உதவி செய்ய ஆதிசேஷாம்சமான லக்ஷ்மணனையும், சங்காம்சமான பரதனையும், சக்ராம்சமான சத்ருக்னனையும் கூட்டிக்கொண்டு வந்தார் என்று சொல்லலாம். இந்த ராம, லக்ஷ்மண, பரத, சத்ருக்னர்கள் புத்ரர்களாக தசரத கௌஸல்யைகளுக்கு பிறந்து அவர்களுக்கு பெருமாள் தான் புத்ரனாக பிறக்கிறேனென்று சொல்லியிருந்ததைப் பூர்த்தி பண்ணினார்கள். இந்த ப்ராதாக்களில் லக்ஷ்மணன்

ராமனோடும், சத்ருக்னன் பரதனோடும் இணைபிரியாமல் நடந்துக் கொண்டார்கள்.

ஸ்ரீராமனுக்கு தக்க வயது வந்தபோது அவன் தகப்பனாரான தசரதமஹாராஜா அவனுக்கு யுவராஜா பட்டாபிஷேகம் செய்ய நிச்சயித்திருந்தபொழுது, அவனுடைய மாற்றுந்தாயான கைகேயி அந்தக் காரியத்தை செய்யக் கூடாதென்றும், அதற்கு பதிலாக தன் பிள்ளைக்கு (பரதனுக்கு) யுவராஜப்பட்டாபிஷேகமும், ஸ்ரீராமனை 14 வருஷம் காட்டுக்குப் போகும்படியாகவும் செய்ய வேண்டும் என்று தன் பர்த்தாவான தசரதனை தனக்கு இரண்டுவரங்கள் கொடுத்திருந்ததன்பதிலாகப்பண்ணும்படி அட்டகாஸம் செய்தாள். இதைக் கேட்டு தசரதன் மூர்ச்சையாக விழுந்து விட்டான். அப்புறம் கைகேயியே ஸ்ரீராமனைக் கூப்பிட்டு மேலே சொல்லியிருக்கிற சமாசாரங்களை அவனுக்குச் சொல்ல, அதை தன் தகப்பனார் சொன்னமாதிரி எடுத்துக் கொண்டு காட்டுக்கு ஸ்ரீ ஸீதையையும் லக்ஷ்மணனையும் கூப்பிட்டுக்கொண்டு, தான் பித்ருவாக்ய (தகப்பனாருடைய வாக்யம்) பரிபாலனம் (காப்பாற்றுதல்) செய்யப் போகிறேனென்று சொல்லிக் கொண்டு போனான் ஸ்ரீராமன் (அதாவது தன் அவதார கார்யத்தைச் செய்ய போனான்) தனக்கு வந்த துர்தசையை கவனிக்காமல். என்ன துர்தசை என்றால் தனக்குக் கிடைக்கும் போலிருந்த யுவராஜ பட்டத்தை அடைய முடியாமல் செய்த தசை. பாகவதர்கள் ஸ்ரீமத் ராமாயண காலக்ஷேபம் பண்ணும்பொழுது மேலே சொன்ன கட்டம் வரும்பொழுது ஒரு கதை

சொல்வது வழக்கம். அந்தக் கதை:—ஸ்ரீராமனுக்கு யுவராஜ பட்டாபிஷேகம் செய்ய நிச்சயித்த நாளின் முதல் நாள் ஸ்ரீராமனும் ஸ்ரீஸீதாதேவியும் உல்லாஸமாகப் பேசிக்கொண்டிருந்ததாகவும், அப்பொழுது ஸ்ரீஸீதாதேவி ஸ்ரீராமனுக்கு, "என்ன நாளைக்கு தங்களுக்கு யுவராஜ பட்டாபிஷேகம் நடக்கப்போகிருப் போலிருக்கிறதே, நாம் என்ன கார்யத்திற்கு இங்கே வந்திருக்கிறோம். அதை அடியோடு மறந்து விட்டாப்போலிருக்கிறதே, நீர் யுவராஜ பட்டாபிஷேகம் பண்ணிக்கப் போகிறதைப் பார்த்தால்," என்று ஞாபகப்படுத்தினளாம்.

ஸ்ரீராமனுக்கு அந்த விடத்தை விட்டுப் போவதற்கு "பித்ருவாக்கியபாலனம்" பண்ணுவதென்றது நல்ல சாக்காக ஆயிற்று போலும்.

ஸ்ரீராமன் காட்டுக்குப் போன பிறகு அங்கேயிருந்த ரிஷிகளோடு ஸங்கம் ஏற்பட்டு அவர்களுக்கு தான் அடுத்த அவதாரத்தில் "நீங்கள் என்னிடம் கோரியதைப் பூர்த்தி பண்ணிவைக்கிறேன்" என்று பிரதிக்ஞை பண்ணினன். அதேமாதிரி பெருமாளால் அடுத்த க்ருஷ்ணவதாரத்தில் கோபிகளாகப்பிறந்த மேலே சொன்ன ரிஷிகளுக்கு மேலே சொன்ன பிரதிஞை பூர்த்தி செய்யப்பட்டது.

ஸ்ரீராமன் தனக்கு தெய்வத்தன்மையிருக்கிறதென்று வெளியில் காட்டிக் கொள்ளாமல் போன போதிலும், அவன் ஜடாயுவை மோக்ஷம் போகச் சொன்ன கார்யம் அதை வெளிப்படுத்தி விட்டது.

இந்த விசேஷமான கார்யம் மாதிரி வேறொன்று, பெருமாளுடைய அவதாரங்களில் நடந்ததாகத் தெரியவில்லை.

பெருமாளான ஸ்ரீராமனும் ஜகன்மாதா ஸ்ரீமஹாலக்ஷ்மியின் அம்சமான ஸ்ரீ ஸீதாதேவியும் ஒரு நாடகத்திற்கு முக்ய புருஷனும் முக்ய ஸ்திரீயும் போல் இந்த அவதாரத்தில் நடந்து கொண்டார்கள். ஸ்ரீராமன் ஒவ்வொரு புருஷனும் லோகத்தில் எப்படி நடந்து கொள்ளவேண்டுமோ அந்த மாதிரியாகவும், ஸ்ரீ ஸீதாதேவி லோகத்தில் ஸ்த்ரீகள் நடந்து கொள்ள வேண்டிய மாதிரியாகவும் நடித்துக் காட்டியிருக்கிறார்கள். அதைப் பார்த்து எல்லோரும் அந்தப்படிக்கே லோகத்தில் நடந்துக்கொள்ள வேண்டும். இதுதான் முக்யமான விஷயம் இந்த அவதாரத்தில் தெரிந்துக்கொள்ள வேண்டியது.

வால்மீகி மஹர்ரிஷியால் எழுதப்பட்ட ஸ்ரீராம சரித்திர கதை அடங்கியுள்ள புஸ்தகமான ஸ்ரீமத் ராமாயணத்தை "சரணாகதி சாஸ்த்ரம்" என்று சொல்லுகிறார்கள், ஏனென்றால் அநேகம் பேர்கள் ஸ்ரீராமனை "சரணாகதி" அடைந்திருக்கிறார்கள். இந்த சரணாகதிகளில் விபீஷண சரணாகதி முக்யமானது. இவைகளைப் பற்றி ஸ்ரீமத் ராமாயண புஸ்தகத்தை வாசித்துத் தெரிந்துக் கொள்ளலாம்.

ஸ்ரீராமன் பத்தாயிர வர்ஷங்களுக்கு மேல் அரசு புரிந்து எப்படி ராஜ்யபாரம் நடத்துகிறதென்று காண்பித்திருக்கிறான். அது மிகவும் விசேஷமாக

யிருந்ததால் அதற்கு "ராமராஜ்யம் போல்" என்று பெயர் வழங்கப்படுகிறது லோகத்தில். ஸ்ரீராம பக்தனை ஹநுமான் என்று பெயருள்ள வானர ச்ரேஷ்டன் கதையும் ஸ்ரீமத் ராமாயணத்தில் அடங்கியுள்ளது. அதாவது ஹனுமான் இந்த அவதாரத்தில் ஸ்ரீராமனுக்கு மிகவும் ஒத்தாசை புரிந்தான்.

சதுர்முக ப்ரம்மா வால்மீகி மஹரிஷிக்கு ஸ்ரீமத் ராமாயணத்தை எழுதுவதற்கு முன்னால் பின்வருமாறு அனுக்ரஹித்தார்:- "ராம சரித்திரத்தைப்பற்றின யாவும் உமக்குப் பூர்ணமாய்த் தெரியக்கடவது. நீர் செய்யும் காவ்யத்தில் ஒவ்வொரு வார்த்தையும் ஸத்யமாயிருக்கும், பொய்யாகாது. பூமியில் மலைகள் நதிகளுள்ள வரையில் ராமாயணமும் வழங்கும்......" அதாவது பூமியில் மலைகள் நதிகளுள்ள வரையில் என்றால் ப்ரளயம் (உலகம் முடியும் காலம்) வரும் வரையில். ஆகையால் ஸ்ரீராமனை ஸ்ரீமத் ராமாயணம் மூலமாகவும் ஸ்ரீராமன் கோவில்கள் மூலமாகவும் பூஜிப்பார்கள் லோகத்தில் ஜனங்கள். ஆனால் இன்னொரு வசனம், கலியில் (கலியுகத்தில்) 5000 (ஐயாயிரம்) வருஷங்களுக்குப் பிறகு ஜனங்கள் மஹாவிஷ்ணுவை மறந்து விடுவார்களென்று சொல்லியிருக்கிறது. எப்படி நடக்குமோ சொல்ல முடியாது. ஆனால் சில பேர்கள் ஸ்ரீமத் ராமாயணத்தை வாசித்துக் கொண்டிருக்கலாம் (கலி கடைசியில்).

---

## க்ருஷ்ணவதாரம்

பெருமாள் லோக ரக்ஷணத்திற்காக அவதாரம் எடுக்கிறுரென்று நம் சாஸ்த்ரங்களில் சொல்லப் பட்டிருக்கிறது. அவதாரம் என்ருல் இரக்கம் அதாவது கீழே (தன்னிடத்திலிருந்து கீழே) போவது. பெருமாள் அவதார மெடுக்கிரு ரென்ருல், பெருமாள் தானிருக்கிற இடத்திலிருந்து இன்னெரு இடத்திற்குப் போவது. இங்கே சொல்லி யிருக்கிற "தானிருக்கிறயிடமாவது" ஸ்ரீ வைகுண் டம் என்று பெயருள்ள, பூமிக்கு வெகுதூரத்தி லுள்ள, பெருமாள் நித்யம் (எப்பொழுதும்) வாஸம் பண்ணுகிற பிரதேசம் (இடம்). "கீழே" போவது என்பது நாமிருக்கிற பூமிக்கு எழுந்தருளுவது (வருவது). ஆகையால் இந்த வ்யாஸத்தின் ஆரம்பத் தில் சொன்ன வாக்யத்திற்கு அர்த்தம்: பெருமாள் தான் வஸிக்கிற ஸ்ரீவைகுண்டத்திலிருந்து லோக (பூமியிலிருக்கிறவைகள்) ரக்ஷணத்திற்காக பூமிக்கு எழுந்தருளுகிருர். என்ன கார்யத்திற் கென்ருல் பெருமாள் (ஸ்ரீக்ருஷ்ணன்) தன்னுடைய சிஷ்யனுன அர்ஜுனனுக்கு "நான் யுகந்தோறும் ஸாதுக்களை ரக்ஷிப்பதற்கும் துஷ்டர்களை நாசம் செய்வதற்கும், தர்மத்தை நிலைநாட்டுவதற்கும் பூமியில் பிறவி எடுக்கிறேன்" என்று உபதேசித்திருக்கிருர் (கீதை 4வது அத்யாயம்). மேலே சொன்ன "பிறவி" பெருமாள் தானே எடுக்கிருரா அல்லது பிறரால் ரண்டப்பட்டு அப்படிச்செய்கிருரா? இந்தப்'பிறவி' ரிதர்களுடையப் பிறவி மாதிரியா? அந்தப் பிறவி 'பதற்குத்தானே தன்னிடத்தை விட்டு வரு

கிருரா அல்லது தன் அம்சத்தை உடைத்தாயிருக்கிற ரூபத்தை தனக்கு பதிலாக அனுப்புகிருரா? முதலிய கேள்விகள் பிறக்கின்றன.

அவைகள் சிலவற்றைப்பற்றி இங்கு கவனிப்போம்:— ஸ்ரீவிஷ்ணு ஸூக்தத்தில் "ஸூரிகள் (ஸ்ரீவைகுண்டத்தி லிருப்பவர்கள்) எப்பொழுதும் பெருமாளை ஸேவித்துக் கொண்டு இருக்கிருர்கள்" என்று சொல்லியிருக்கிறது. அப்பொழுது பெருமாள் எப்போதும் ஸ்ரீவைகுண்டத்திலேயே யிருக்கிருர் என்று தெரிகிறது. அதாவது பெருமாள் தானே போகாமல் தன்னுடைய அம்சமுள்ளவரை பூமியில் அவதாரம் எடுக்கச் சொல்லுகிருரென்று எடுத்துக் கொள்ள வேண்டும். இதற்கு அத்தாட்சி ஒன்று ஸ்ரீமத் பாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அது என்னவென்ருல் த்வாரகா பட்டணத்தில் ஒரு ஸமயம் ஒரு ப்ராம்மணனுக்கு ஒரு குழந்தை பிறக்க அது பூமியைத் தொட்டவுடன் இறந்து போயிற்று. அந்தச் சவத்தைத் தூக்கிக் கொண்டுபோய் ராஜா அரண்மனையில் வைத்துவிட்டு, துக்கப்பட்டு ராஜாவை அவனுல்தான் குழந்தை யிறந்தது என்று வைதான். இந்த மாதிரி அவன் குழந்தைகள் இறக்க மூன்று தடவைகள் செய்தான். அவனுக்கு ஒன்பதாவது குழந்தை இறந்து விட்டபோது, ஸ்ரீக்ருஷ்ணன் ராஜவாக இருந்தான். பக்கத்திலிருந்த அர்ஜுனன் அந்த ப்ராம்மணனுக்குச் சொன்னுன், "இங்கே உன்னைக் காப்பாற்றுவதற்கு க்ஷத்ரியர்கள் ஒருவருமில்லையா? பெருமாள்(தான்) காப்பாற்றுவார், என்ருல் அது

முடியாமல் போனால், நான் அக்னியில் (நெருப்பு) விழுந்து உயிரை இழப்பேன்." ப்ராம்மணன் அதைக் கேட்டு ஸந்தோஷமடைந்து தன் அகத்திற்குப் போனான். பிறகு அந்த ப்ராம்மணன் தன் பார்யை கரு உண்டாயிருக்கும்போது அதை அர்ஜுனனுக்குத் தெரிவித்தான். அர்ஜுனன் அதைக் கேட்டு ருத்ரனை த்யானம் பண்ணிவிட்டு அந்த ப்ராம்மணனுடைய பார்யை பிரஸவிக்கும் கிருஹத்தைச் சுற்றிச் சரக்கூட்டால் மூடிவைத்தான். அப்புறம் குழந்தை பிறந்தது. ஆனால் மற்ற குழந்தைகளைப் போல் அதுவும் இறந்து விட்டது. இதைப்பார்த்து அர்ஜுனன் குழந்தையைத் தேடினான். எங்கே எங்கே அவன் போகக்கூடுமோ அங்கேல்லாம் போயும் குழந்தை காணவில்லை. உடனே அர்ஜுனன் அக்னியில் விழப்போனான். அப்பொழுது ஸ்ரீக்ருஷ்ணன் அதைப்பார்த்து "நீ தீயில் விழவேண்டாம், நீ அசக்தன் என்று எண்ணாதே, நீப்ராம்மணப்பையனை கொண்டு வந்து கொடுத்தால் உன்னை லோகம் புகழும்" என்று அர்ஜுனனுக்குச் சொல்லி, அவனை அழைத்துக்கொண்டு ஸ்ரீ வைகுண்டம் போய் அங்கே பெருமாள் பக்கத்திலிருந்த மேலே சொன்ன ப்ராம்மணனுடைய இறந்துபோன எல்லாக் குழந்தைகளையும் அவனிடம் கொடுத்தார். அப்பொழுது பெருமாள் ஸ்ரீ க்ருஷ்ணனையும் அர்ஜுனனையும் பார்த்து பேசினார்:—அந்த ப்ராம்மணனுடைய பிள்ளைகள், வேண்டுமென்று, உங்களைப் பார்ப்பதற்காக இங்கே கொண்டு வரப்பட்டார்கள். அம்சாவதாரம் செய்கிற நீங்கள் கார்யத்தைச் சீக்கிரம் முடித்துவிட்டு இங்கே என் பக்கத்திற்கு வாருங்கள்." மேலே

சொன்னதை கவனித்தால் ஸ்ரீக்ருஷ்ணவதாரம் முழு அவதாரமல்ல. அதாவது பெருமாள் தானே அவதாரம் எடுக்காமல் தன்னுடைய அம்சமுள்ள ஸ்ரீ க்ருஷ்ணனை அவதாரம் எடுக்கும்படி செய்தார். ஆகையால் பெருமாளுடைய அம்சபூதர்கள் தான் பூலோகத்தில் நடமாடிக் கொண்டிருந்தார்கள். பெருமாள் அவதாரங்களைத் தானே எடுக்கிறதுமுண்டு. மற்றவர்களால் தூண்டப்பட்டும் எடுப்பதுண்டு. அந்த அவதாரங்களுக்குப் பிறவி மனிதப் பிறவிபோலில்லாமல் அந்தந்த ஸம்யத்திற்கு தகுந்தாப்போல் ரூபமெடுப்பார் பெருமாள். அவர் எவ்வளவோ காலம் ஆகி இதுவரையில் அநேக அவதாரங்கள் எடுத்திருக்கிறார். அவைகள் ஒவ்வொரு யுகத்தில் ஒரு அவதாரமும், அவைகளில் சிலவைகளுக்கு கொஞ்சம் நாட்கள்தான் பூமியில் நடமாட்டம். ஸ்ரீராமனும் ஸ்ரீக்ருஷ்ணனும் வெகு காலம் பூமியில் சஞ்சாரம் பண்ணினார்கள். அதாவது ராமக்ருஷ்ண அவதாரங்கள் தங்கள் கார்யங்கள் முடிவதற்கு வெகுகாலம் பூமியிலிருக்க வேண்டியிருந்தது. மற்றவர்களெல்லாம் தங்கள் காரியங்கள் சீக்ரமாக முடிந்துபோக தங்கள் ஸ்தானத்திற்கு போய்விட்டார்கள்.

ராமக்ருஷ்ண அவதாரங்களில் ஸ்ரீ க்ருஷ்ணவதாரம்தான் பிரபலமானதென்றுப் சொல்லப்படுவதால் அதைப்பற்றி இப்பொழுது விசாரிப்போம். இந்த க்ருஷ்ணவ தாரம் இப்போது இருக்கிற கலியுகத்தின் முன் யுகமான த்வாபரயுகத்தில் நடந்ததாகச் சொல்லப்படுகிறது. வெகுகாலம் இந்த அவதாரம் நடந்ததால் அதில் அடங்கியுள்ள

அநேக விஷயங்கள் தெரிந்துக்கொள்ள வேண்டி யிருக்கும். அவைகளைப் பற்றி வேதவ்யாஸர் ஸ்ரீமத் பாகவதத்தில் சொல்லியிருக்கிறார். அந்தப் புஸ்த கத்தை வாசித்துப் தெரிந்துக் கொள்ளலாம். ஆகையால் ஸ்ரீக்ருஷ்ணனைப்பற்றிய சில விஷயங்கள் பின் வருமாறு விசாரிக்கப் பட்டிருக்கிறன—

பெருமாள் ஒரு காரணத்தை உத்தேசித்து மாத்திரம் அவதாரங்களை எடுக்கவில்லை. அநேக காரணங்களால்தான் அவர் அவதாரங்களெடுத் தார், எடுக்கவும் செய்வார். அதாவது என்னென்ன வைகள் அவர் அவதாரங்களில் நடந்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறதுகளோ அவைகள் கட்டாய மாக (அவைகளுடைய கர்மாநுஸாரமாக) நடக்க வேண்டியிருந்தது. அதாவது பொதுவாக எல்லா ருடைய கர்மப்படி லோகத்தில் நடைபெறுகிறது. எல்லாம் அப்படி நடக்காமல் பெருமாள் மாற்றலாம். ஆனால் அவர் அம்மாதிரி செய்யமாட்டார். ஏனென் றல் அவர் கட்டளைபடிதான் எல்லாம் நடக்கின்றன.

மேலே சொன்னமாதிரி ஸ்ரீ க்ருஷ்ணவதாரத் திற்கு அநேக காரணங்களிருக்கும். அவர் லோக க்ஷணத்திற்காக அவதாரமெடுத்தாரென்று புஸ்தங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆரம் பத்திலேயே (அதாவது பிறந்த போதே) அவர் பெருமாள் ரூபத்தோடு தர்சனம் தேவகி (அவர் தாயார்) க்கும் வஸுதேவருக்கும் (அவர் தகப்பனார்) தந்தார். முன் ஜன்மங்களில் அவர்கள் செய்த தபஸ் ஸினுல் பெருமாளைத் தங்கள் புத்ரனுகப் பிறக்கும்படி வேண்டிக் கொண்டதன் பேரில் பெருமாள் தன்

ரூபத்தோடு பிறந்தார் (இது ஒரு காரணம் அவதாரத்திற்கு). பிறகு இந்தக் கார்யம் முடிந்தவுடன் இன்னமொருவிடத்திற்குப் போய் (நந்த கோபன் பார்யையான யசோதையிடம் போய்) அங்கே யசோதைக்குப் பிள்ளையாக விருந்து அவளுக்கு ஆநந்தத்தை உண்டு பண்ணிக்கொண்டிருந்தார் அங்கேயிருந்தவரையில். இது யசோதை செய்த தபஸுக்குப்பலன் (இது இன்னொமொரு காரணம் ஸ்ரீக்ருஷ்ணுவதாரத்திற்கு) இந்த மாதிரி அநேகக்காரணங்கள் ஸ்ரீ க்ருஷ்ணன் சரித்திரத்தில் காணலாம்.

இந்த அவதாரத்தில் மனித உருவை வைத்துக் கொண்டிருந்த போதிலும் முதலிலிருந்தே தனக்குத் தெய்வத்தன்மை இருக்கிற தென்றுக் காட்டியிருக்கிறார் அவர் பெருமாள் ரூபத்தோடு பிறந்ததால். அது மாத்திரமல்லாமல் அவர் செய்த காரியங்களெல்லாம் மநுஷ்யர்களால் செய்யமுடியாதவைகள், தெய்வத்தால் தான் செய்ய முடியும். பெருமாள் மற்ற அவதாரங்களில் இந்த மாதிரிச் செய்து கொள்ளவில்லை. ஆகையால் இந்த அவதாரம் மிகவும் விசேஷமான தென்று சொல்ல வேண்டும். அவருடைய (ஸ்ரீ க்ருஷ்ணன்) சிசு பர்வத்திலிருந்தே அவருடைய அவதார கார்யங்கள் தொடர்ந்தன என்று சொல்லவேண்டும். ஏனென்றால் அவரைக் கொல்ல கம்ஸனால் (எப்பொழுதும் நிந்தனைப்பண்ணிப் பெருமாளை ஸ்மரிப்பவன்) அனுப்பப்பட்டவர்களை ஸம்ஹாரம் செய்தார். இதில் விசேஷமென்னவென்றால் அவரால் கொல்லப்பட்டப் (அதாவது அவருடன் ஸம்பந்தப்பட்டவர்கள்) பேர்வழிகள்

நல்லகதியை (மோக்ஷத்தை) அடைந்தார்கள். அது அவருடைய தெய்வத்தன்மையைக் காட்டுகிறது. ஆனால் ஒருவரையும் மோக்ஷம் அனுப்பினது இடையாது அவர்.

அவருடைய பால்யபர்வம் கோக்களிடத்திலும் (பசுக்கள்), கோபிகளிடத்திலும் கழிக்கப்பட்டது. இந்தக்கோபிகள் தான் முன்னால் ரிஷிகளாக இருந்ததாகவும், அவர்களுக்கு ஸ்ரீராமன் அவர்கள் தன்னை (பெருமாள்) அநுபவிக்க வேண்டிக் கொண்டதை அடுத்தாவதாரமான ஸ்ரீ க்ருஷ்ணனாகி கோபிகளுடன் விளையாடி வாக்குதத்தம் பண்ணினதைப் பூர்த்தி பண்ணினார். கோக்கள் விஷயமாகச் செய்த ப்ரம்மாவின் கர்வத்தையும் இந்த்ரனுடைய கர்வத்தையும் பங்கம் பண்ணினார். அவர்களும் ஸ்ரீ க்ருஷ்ணனிடத்தில் சரணாகதி பண்ணிக் கொண்டார்கள். மிக விஷத்தால் ஜனங்களுக்கு உபத்ரவப் படுத்தின காளிங்கனென்ற ஸர்ப்பத்தை யமுனா நதியிலிருந்து வேறு யிடத்திற்குப் போகும்படிச்செய்தார். "ராஸக்ரீடையை" கோபிகளுடன் செய்தார். இதைச் செய்ததினால் ஸ்ரீ க்ருஷ்ணனை "ஸ்திரீ லோலன்" (காமாதுரன்) என்று சில பேர்வழிகள் பரிஹாஸம் பண்ணுகிறார்கள். இதற்கு ஸமாதானமாக இன்னமொரு விஷயம் நடந்ததைச் சொல்ல வேண்டும். அந்த விஷயம் ஸ்ரீ க்ருஷ்ணன் "ஸ்திரீ லோலன்" அல்ல என்று தெரிவிக்கும். அது என்னவென்றால் :—பாரதயுத்தம் முடிந்தபிறகு அர்ஜுனனுடைய பேரனை அபிமன்யுவின் புத்ரன் தன் தாயாரான உத்தரையின் கர்பத்தி

லிருக்கும் பொழுது த்ரோணாசாரியார் (பாண்டவர்களுடைய ஆசார்யர்) பிள்ளை அச்வத்தாமாவால் கோபத்தினால் பாணம் போட்டு எரிக்கப்பட்டான். அப்பொழுது அர்ஜுனனுடைய தாயாரான குந்தி தேவி தன் பேரனான மரித்துப்போன சிசுவைப் பிழைப்பிக்கும்படி ஸ்ரீ க்ருஷ்ணனை ப்ரார்த்தித்தாள். ஸ்ரீ க்ருஷ்ணன் "இங்கே நித்ய ப்ரம்மசாரி யாராவது ஒருவரிருந்தால் அவரைக் கூப்பிட்டு குழந்தையைத்தொடச்சொல்லு, அப்பொழுது குழந்தை உயிர்பித்து விடும்" என்று பதில் சொன்னார். அவ்விடத்திலிருந்த ப்ராம்மண பாகவதர்கள் உள்பட ஒருவரும் தான் நித்ய ப்ரம்சாரி என்று சொல்லிக்கொண்டு முன்வராமலிருந்தார்கள். அப்புறம் அங்கிருந்த ப்ராம்மணர்கள் "நீர்தான் நித்ய ப்ரம்மசாரியாயிற்றே, நீரே குழந்தையைத் தொடும்" என்று சொன்னவுடன் ஸ்ரீ க்ருஷ்ணன் அந்தக் குழந்தையைத் தொட்டார். உடனே குழந்தைக்கு உயிர்வந்து விட்டது. இதனால் ஸ்ரீ க்ருஷ்ணன் நித்ய ப்ரம்மசாரிகளில் சேர்ந்தவரென்று ஏற்பட்டுவிட்டது. ஆகையால் ஸ்ரீ க்ருஷ்ணன் ஸ்த்ரீ லோலனாகவும் நித்ய ப்ரம்மசாரியாகவும் ஒரேஸமயத்தில் எப்படி யிருக்க முடியும்? ஆனால் ஸ்ரீ க்ருஷ்ணன் பெருமாளாகையால் அவருக்கு அப்படியிருக்க முடியும் பெருமானுக்கு எப்படி வேண்டுமானால் யிருக்கமுடியுமாதலால். ஸ்ரீ க்ருஷ்ணன் கோபிகளோடு விளையாடினது ஒரு கார்யார்த்தமாகப் பண்ணினது. அப்படிச் செய்வது அவருக்குத் தான் தகும். அவர் அநேக ஸ்திரீகளைக் கல்யாணம் பண்ணிக்கொண்டு (கல்யாணம் பண்ணிக் கொள்ள வேண்டியதாயிற்று)

க்ருஹஸ்தாச்ரமத்தை லோகத்திற்கு நடத்திக் காண்பித்தார் தன் பட்டணமான த்வாரகையிலிருந்து கொண்டு. நாரதர் (ரிஷி) இதைப்பார்த்துவிட்டுச் சொல்லி யிருக்கிறார்.

ஒருவன் எப்படி லோகத்தில் நடந்து கொள்ள வேண்டுமென்று அவர் தன் சிஷ்யனுன அர்ஜுனனுக்கு ஸ்ரீமத் பகவத்கீதை மூலமாக உபதேசம் செய்திருக்கிறார். அதன்படியே தானும் இந்த அவதாரத்தில் நடந்துக்கொண்டார். அவர் அம்சமுள்ளவர்கள் லோகத்தில் இன்னும் நடமாடிக் கொண்டிருக்கிறார்கள் என்று ஒரு பெரியவர் சொல்லக்கேட்டான் மஹாபக்தன். (இது ஒருவனுல் ஒரு பசுமாடு ஒரு கோவிலுக்கு கொண்டுவரப்பட்ட பொழுது அவன் ஸ்ரீ க்ருஷ்ணனுடைய அம்சம் பெற்றவன் என்று சொன்னது).

இந்த அவதாரத்தில் ஒரு விசேஷம் காண்கிறது. அது லோகத் தாயாரான ஸ்ரீ மஹாலக்ஷ்மி அதிக பங்கு எடுத்துக் கொள்ளவில்லை. அவள் ஸ்ரீ ருக்மிணியாக வந்தாள். அவள் பாகம் (நாடகத்தில் சொல்லுகிறப்போல்) கொஞ்சம் தான். ஆனல் அது ஒரு விசாரணைக்கு இடம் கொடுத்துவிட்டது. அது என்னவென்ருல் ஸ்ரீ ருக்மணிதேவி தனக்குப் பிள்ளை வேண்டுமென்று ஸ்ரீ க்ருஷ்ணனைக் கேட்டதன் பேரில் அவர் கைலாஸத்தை அடைந்து சிவனை த்யானம் பண்ணி தனக்குப் பிள்ளை வேண்டுமென்று கேட்டுக் கொண்டாராம். அதனுல் சிவன் தான் பரதேவதை பெருமாளான ஸ்ரீ க்ருஷ்ணன் பரதேவதையில்லை

என்று சைவர்கள் (சிவனுடைய பக்தர்கள்) கக்ஷி பேசுகிறார்கள். இதற்கு ஸமாதானம் சிவனே பெருமாள்தான் பரதேவதை என்று ஒப்புக் கொண்டிருக்கிற படியால், வேறு ஸமாதான மொன்றும் சொல்ல வேண்டியதில்லை. ஆனால் ஸ்ரீக்ருஷ்ணன் செய்தது சிவனுடைய கர்மப்படி நடந்திருக்க வேண்டும்.

அர்ஜுனனுக்கும் துர்யோதனாதிகளுக்கும் பெருமாளுடைய விச்வரூபத்தை காண்பித்திருக்கிறார் ஸ்ரீக்ருஷ்ணன். ஆனால் அர்ஜுனன் அந்த ரூபத்தை ஸரியாகப்பார்க்க முடியவில்லை. துர்யோதனாதிகளும் ஸ்ரீக்ருஷ்ணன், தான் யார் என்று அவர்களுக்குக் காண்பித்த விச்வரூபத்தைப் புரிந்து கொள்ளவில்லை போலும். ஏனென்றால் அவர்கள் ஸ்ரீ க்ருஷ்ணனிடத்தில் இந்த ரூபத்தைப் பார்த்த பிறகு முன்னால் எப்படி நடந்துக் கொண்டார்களோ அதேமாதிரி தான் பிறகும் நடந்துக் கொண்டார்கள்.

வட இந்தியாவில் தான் ஸ்ரீ க்ருஷ்ணனை அதிகமாக கொண்டாடுகிறார்கள். ஏனென்றால் அங்கே தான் இந்த அவதாரம் நடமாடிற்று. நம்மூரில் ஒரு க்ருஷ்ணன் கோயிலும், ஸ்ரீ பார்த்தஸாரதி ஸ்வாமி கோயிலு மிருக்கின்றன. அந்த ஸ்ரீ க்ருஷ்ணன் கோயில் சாதாரணக் கோயிலாகக் கருதப்படுகிறது ஜனங்களால். அதற்கு தசை அந்த மாதிரி யிருக்கிறாப் போலிருக்கிறது.

---

# ஸ்ரீக்ருஷ்ணன் பூர்ணாவதாரமா?

வேதம் பெருமாளுடைய அவதாரம். அக்ஷர ரூபமாக இருக்கிறார். அந்தப் பெருமாள் யாரா யிருக்கலாமென்ற கேள்வி வருகிறது. அவர் பரவாஸுதேவன் என்ற விஷ்ணு. ஸ்ரீமத்கீதையில் சொல்லியிருக்கின்ற வாஸுதேவ: [வாஸுதேவ ஸ்ஸர்வமிதி..............கீதை, 7வது அத்யாயம் 19 ஸ்லோகம்.] என்கிற பதம், சில, வ்யாக்கியாதாக் கள் (ஸ்ரீமத் கீதைக்கு உரை எழுதினவர்கள்) க்ருஷ் ணனையே குறிக்கிறதென்றும், இன்னம் சிலர் அந் தப்பதம் பரமேச்வரனைக் குறிக்கிறது என்றும் எழு தியிருக்கிறார்கள். அந்தப் பதம் க்ருஷ்ணனைக் குறிக் காமல் பரவாஸுதேவனையே குறிக்கவேண்டுமென் பதற்குச் சிலகாரணங்கள் கீழ்வருமாறு சொல்லப் பட்டிருக்கிறது. அவைகள்; (1) வாஸுதேவ: என்ற பதம் ஒரேதடவை ஒரேஇடத்தில் "ஸர்வம்" என்ற பதத்தோடுச் சேர்த்துச் சொல்லப் பட்டிருக் கிறது ஸ்ரீமத் கீதையில். மற்ற இடங்களில் க்ருஷ் ணன் தன்னைப்பற்றிச் சொல்லும்போது, अहं (நான்), मया (என்னால்) मे (என்னுடைய) என்று அநேக இடங்களில் சொல்லியிருக்கிறார். அதே மாதிரி வாஸுதேவ: என்ற இடத்திலும் தன்னையேபற்றி இருந்திருந்தால் அந்தப் பதங்களையே உபயோகித் திருப்பார். அந்தமாதிரி சொல்லாமல் "வாஸுதேவ:" என்று சொல்லியிருக்கிறார்; (2) க்ருஷ்ணன் ஒரு சின்ன ரூபத்தோடு யிருந்ததால் அவனை "ஸர்வம்" என்று சொல்லக்கூடாது; (3) நாரதர் த்வாரகைக் குப்போய் க்ருஷ்ணன் பத்நிகளோடு எப்படி எப்படி

இருந்தார் என்று பார்த்துச் சொல்லியிருக்கிறார் :— அங்கே அனேக மாளிகைகளை அமைத்துக்கொண்டு, ஒவ்வொரு மாளிகையிலும் ஏதாவது கார்யம் செய்து கொண்டிருந்தார். அந்தக்கார்யங்களில் ஒன்றில் க்ருஷ்ணன் தனியாக இருந்து கொண்டு பரம புருஷனை த்யானம் பண்ணிக் கொண்டிருந்தார். [இந்தவிஷயம் ஸ்ரீபாகவதத்தில் சொல்லியிருக்றது.] இதனால் க்ருஷ்ணன்தான் ஸர்வம் இல்லை, இன்னும் மொருவர் ஸர்வமாயிருக்கிறார் என்று தெரிகிறது. மேலும், வாஸுதேவன் (தன்னைப்பற்றி சொல்லும் போது இந்த மாதிரிதான் எல்லாரும் சொல்லிக் கொள்வார்கள்) என்று சொல்லாமல் "வாஸுதேவ" என்று மரியாதையாகச் சொன்னது வேறொருவரைப்பற்றி இருக்க வேண்டும்.

4. **பரமேச்வரன்** என்றபதம் பரவாஸுதேவனுக்குத்தான் பொருந்தும், ஏனென்றால் அவனுக்குத் தான் பரத்வம் உண்டு.

நம் சாஸ்திரத்தில் பகவான் ஐந்து ரூபமுள்ளவனாயிருக்கிறானென்று சொல்லப்பட்டிருக்கிறது. அவைகள் : பரம், வ்யூஹம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை. பரரூபம்தான் பரவாஸுதேவன். வ்யூஹங்கள் :- வாஸுதேவன், சங்கர்ஷணன், ப்ரத்யும்னன், அநிருத்தன் இவைகள் அப்ரத்யக்ஷம் [கண்ணுக்குத் தெரியாதது, ஆகையினால் லோகம் இவைகளைப்பற்றி தெரிந்து கொள்ள வேண்டியதில்லை போலும்.].

அடியேனுடைய ஆசாரியார் " பெருமாள் இவைகளை உண்டுபண்ணிய பிறகு, தான் கீழுக்குப்

போவதை, கீழே மிகவும் அசுத்த மாயிருப்பதால், நிறுத்திக்கொண்டார்,'' என்று உபதேசித்திருக்கிற படியால் மற்ற அவதாரங்கள் அவருக்கு சிலாக்ய மானவைகளல்லவென்று தென்படுகிறது.

வேதத்தை இவைகளோடும் (வ்யூஹங்கள்) மற்ற அவதாரங்களோடும் சேர்க்கப்படவில்லை. ஆன போதிலும் வேதம் பெருமாளைப்போல் (பரவாஸுதேவன்) அநந்தம் என்று சொல்லப்படுவதோடு பெருமாளுடைய நாமங்களை உடைத்தாயிருப்பதால் பரவஸுதேவனென்று சொல்ல வேண்டும். அது (வேதம்) பெருமாளுடைய அவதாரமென்றும், ப்ரம்மாவுக்கு உபதேசிக்கப்பட்ட தென்றும், சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் வேதம் பரவாஸுதேவனுடைய ஒரு விசேஷ அவதாரம் என்று சொல்ல வேண்டும். அப்பேர்பட்ட வேதத்தை எல்லாரும் ஸேவிக்க வேண்டும். இப்பொழுது வழங்கி வருகிற ஸ்வல்ப பாகமுள்ள வேதத்தையும் இப்பொழுது இருக்கிறவர்களால் ஸேவிப்பது அஸாத்யமான கார்யமாக இருக்கும். ஆதலால் அவரவர்கள் அபிவாதனம் பண்ணும் போது சொல்லுகிற வேதசாகை (ரிக்கு அல்லது யஜுஸ், ஸாமம் அதர்வணம்) யையாவது ஸேவிக்க வேண்டும். இந்த மாதிரியாகவாவது செய்தால் பெருமாள் பிரீதி அடைவார்.

---

# வேதாவதாரம்

வேதம் பெருமாளுடைய அவதாரம், அக்ஷர ரூபமாயிருக்கிறர். அதிலிருக்கிற பதங்கள் ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாமத்திலிருக்கின்றன. அதாவது, அந்தப் பதங்கள் ஸ்ரீ விஷ்ணுவின் பெயர்கள். வேதபாராயணம் பண்ணியபிறகு சாந்தி பாடத்தில் "ப்ராம்மணர்களால் எவ்வளவு வேதத்தின் அக்ஷரங்கள் உச்சரிக்கப்பட்டனவோ அவ்வளவு பகவந் நாமங்கள் சொல்லப்பட்டன. இதில் சந்தேகமில்லை" என்று சொல்லியிருக்கிறது. ஆகையால் வேதத்தில் சொல்லியிருக்கிறது விஷ்ணுவைப் பற்றியது.

ஸ்ரீமத் பகவத்கீதையில் சொன்ன "வாஸுதேவ: ஸர்வமிதி" (7-வது அத்யாயம்) என்ற வாக்யம் "வாஸுதேவ" அதாவது ஸ்ரீ விஷ்ணு தான் "ஸர்வம்," எல்லா விஷயங்கள், அதாவது லோகத்தில் நடந்தவைகள், நடக்கிறவைகள், நடக்க போகிறவைகள்) ஆகையால் வேதத்தில் சொல்லியிருக்கிற விஷயங்கள் லோக சமாசாரங்கள். அவைகள் எல்லாவிதமான (நல்லவைகள் கெட்டவைக்ள்) சமாசாரங்களாக இருக்கும். ஏனென்றல் பெருமாள் ஸர்வ வ்யாபி, அதாவது அவர் எல்லாவற்றின் பேரிலும் நிரம்பியிருக்கிறர், எல்லாம் அவரிடத்திலிருக்கிறது.

பெருமாள் தன்னுடைய நாபிக் கமலத்திலிருந்து சதுர்முக ப்ரம்மாவை வெளிக்கிளப்பி, அவருக்கு

வேதத்தை உபதேசித்தார். ப்ரம்மா தன்னை சிருஷ்டி வ்யாபாரம் பெருமாளால் செய்யச் சொன்ன பொழுது, வேதத்தை உபயோகப்படுத்தினர். எப்படி என்றுல் வேதத்தை ஸேவித்ததனுல் பெருமாளை ஸ்தோத்ரம் பண்ணினர். அதனுடன் சிருஷ்டி கார்யத்திற்கு அதில் சொல்லி யிருக்கிற விஷயங்கள் உபயோகப்பட்டன. [மநு தர்ம சாஸ்த்திரத்தில் ' ப்ரம்மா வேதத்தில் சொன்னபடி ஒவ்வொரு சிருஷ்டி கார்யத்தையும் செய்தார் ' என்று சொல்லி யிருக்கிறது].

கீழ் சொல்லியிருக்கிற விஷயம் வேதத்தில் (காடகம், ப்ரச்னம், 1, பஞ்சாதிகள் 45, 46) சொல்லப்பட்டிருக்கிறது :—

" பரத்வாஜர் மூன்று ப்ரம்மசரியம் (அதாவது ஆயுஸ் முழுமையும் ப்ரம்மசாரி ஆச்ரமத்திலிருந்து கொண்டு வேதத்தை கற்றுக் கொண்டிருக்கிறது) வசித்தார் (நடத்தினர்). பிறகு வயது முதிர்ந்து படுத்துக் கொண்டிருந்தார். இந்திரன் அவர்கிட்டே போய் அவரைக் கேட்டான் " ஏ பரத்வாஜா ! நான் உனக்கு இன்னமொரு ஆயுஸ் கொடுத்தால் அப்பொழுது நீ என்ன செய்வாய் ?". பரத்வாஜர் "நான் அதில் ப்ரம்மசரியத்தையே ஆச்ரயிப்பேன்" என்று பதில் அளித்தார்.

பிறகு இந்திரன் அவருக்குத் தெரிய அவருக்கு எதிரில் மூன்று மலைகள் இருக்கும்படிச் செய்து தன்னுடைய கைமுஷ்டி அளவு மண்ணை எடுத்து வைத்துக் கொண்டு, அவருக்குச் சொன்னன், " ஏ பரத்வாஜா ! எதிரே தென்படுகிற மலைகளைப்பார்.

வேதங்கள் அவ்வளவு அளவுள்ளவைகள். நீ இப்பொழுது மூன்று ப்ரம்மசரியத்தில் கற்றுக் கொண்ட வேதபாகம் என் கைமுஷ்டி மண் அளவுள்ள வேதம் மாதிரி மூன்று முஷ்டி மண் அளவுள்ளது. மேலும் வேதம் அநந்தம். அதாவது முடிவு இல்லாதது" என்று. பாரத்வாஜர் இதைக் கேட்டபிறகு வேதம் பூராவாகக் கற்றுக் கொள்ள வேண்டும் என்கிற ஆசையை அகற்றிக் கொண்டிருக்க வேண்டும்.

மேலே சொல்லியிருக்கிற விஷயம் என்ன வென்றால் "வேதம் அநந்தம்" என்பது. அப்படியார் இருப்பாரென்றால் பெருமாளாகத் தானிருக்க வேண்டும். பெருமாளை ஒருவரும் அறிந்ததில்லை. ஆகையால் வேதத்தை ஒருவரும் அறிந்திருக்கமாட்டார்கள். இது க்ருத, த்ரேதா யுகங்களில் நடந்த சமாசாரமாயிருக்க வேண்டும். ஏனென்றால் த்வாபர யுகத்தில் விஷ்ணு அம்சமான வேதவ்யாஸர் விஷ்ணுவால் ஏவப்பட்டு லோகத்தின் ஹிதத்திற்காக வேதத்தை நாலுபாகமாகப் பிரித்தார் என்று ஸ்ரீவிஷ்ணு புராணத்தில் சொல்லியிருக்கிறது. இந்த கலியுகத்தில் ரிஷிகளை வைத்துக் கொண்டு வேதத்திலிருக்கிற சில விஷயங்களை (அவைகள் லோகத்திற்கு எவ்வளவு வேண்டுமோ அவ்வளவு) ச்ருதி ஸ்ம்ருதி என்று வெளிப்படுத்தப் பட்டிருக்கிறது (பெருமாளால்). இதுதான் (இந்த வேதபாகம் தான்) இப்பொழுது லோகத்தில் வழங்குகிறது. ஆதியிலிருந்த வேத பாகங்களும் ஒவ்வொரு யுகத்தில் ப்ரம்மாவால் ஸ்ருஷ்டிக்கப்பட்டவைகள் க்ஷீணதசை அடைந்தாற்போல் க்ஷீணதசை

அடைந்துக் கொண்டு வந்து இப்பொழுது மிகவும் ஸ்வல்ப பாகம் தான் வழங்கிவருகிறது.

"ப்ராம்மணர்களால் எவ்வளவு வேதத்தின் அக்ஷரங்கள் உச்சரிக்கப்பட்டனவோ அவ்வளவு பகவந் நாமங்கள் சொல்லப்பட்டன. இதில் சந்தேகம் கிடையாது," என்று ஒரு மஹானால் (?) சொல்லப்பட்டிருக்கிறது. மநு தர்ம சாஸ்த்திரத்தில் கீழ் வருமாரு சொல்லப் பட்டிருக்கிறது :— "தினந்தோறும் விதிந்த காலம் (அனுஷ்டானம் பண்ணுகிற காலம்) தவருமல் சோம்பலில்லாமல் வேதத்தையே ஜபம் செய்ய வேண்டும். யாதொரு காரணத்தால் இதைவிட மேற்பட்ட தர்மமுள்ளதாகப் பெரியோர்கள் சொல்லவில்லையோ. இதுதவிற மற்ற தர்மமானது இதை விடக்குறைந்த தர்மமாகவே சொல்லப்படுகிறது" ஆகையால் எல்லா ப்ராம்மணர்களும் வேதத்தை ஸேவிக்க வேண்டும்.

வேதத்திற்கு வைஷ்ணவர்கள் [மத்வாச்சாரியார் வேதத்தின் மிக ஸ்வல்ப பாகத்திற்கு பொருள் எழுதியிருக்குருர்] ஒருவரும் பூராகவும் பொருள் எழுதவில்லை. சில அத்வைதிகளும், ஐரோப்பியர்களும் வேதத்திற்கு உறை எழுதி இருக்கிருர்கள். அதை அந்த அந்த ஸம்பிரதாயஸ்தர்கள் உபயோகித்துக்கொள்ளவேண்டும், வைஷ்ணவர்கள் அவைகளை உபயோகப்படுத்தக் கூடாது. ஆனபோதிலும் வைஷ்ணவர்கள் மேலே சொல்லியிருக்கிற காரணங்களால் வேதத்தை உபயோகித்து கொள்ள வேண்டும்.

பெருமாளை ஒருவரும் அறியவில்லை (ஒருவரும் அறிய ஸாத்தியப் படாததால்). பெருமாளான வேதமும் ஒருவராலும் அறியமுடியாது. அப்படி யிருக்கும் போது அடியேன் எப்படி இந்த வ்யா ஸத்தை எழுத ஆரம்பித்தேன் என்றால் என்னு டைய ஆசாரியார் அடியேனுக்கு வேதம் புறியு மென்று அநுக்ரஹித்திருக்கிறார். ஆனதால் இந்த வ்யாஸம் அடியேனால் எழுத முடிந்திருக்கிறது.

---

## வேத உபநிஷத் பாகம்

அடியேன் ஸமீபத்தில் அடியேனுடைய சிநேகிதரான ஒருஸ்வாமியுடன் ஸம்பாஷணை பண்ண நேர்ந்தது. அப்பொழுது வேதத்தைப் பற்றி சிலாகித்து அடியேன் பேசினபொழுது, அவர் சொன்னார், "வேதத்தின் ஸம்ஹிதா பாகம் கர்மகாண்டங்கள். அவை அவ்வளவு சிலாக்யமில்லை, வேதாந்த மென்கிற உபநிஷத் பாகங்கள் சிலாக்யமானவைகள். ஆகையால் அவைகளைப்பற்றி ஒரு "உபநிஷத் ஸாரம்" என்ற புஸ்தகத்தை நம் "விசிஷ்டாத்வைத ப்ரசாரிணீ ஸபா" பிரசுரித்திருக்கிறதென்று சொல்லி ஒரு புஸ்தகத்தை அடியேனிடம் கொடுத்தார்.

பிறகு அந்தப் புஸ்தகத்தில் அதன் நூலாசிரியர் எழுதிய முகவுரையைப் படித்தேன். அதில் மேலே அந்த ஸ்வாமி சொன்ன மாதிரிதான் இருக்கிறது.

இப்பொழுது இங்கு அடியேன் என்ன செய்யப் போகிறேனென்றால், இந்த விஷயத்தைப்பற்றி அடியேனுடைய ஆசார்யரிடமிருந்து அடியேன் கற்றுக் கொண்டதை கீழே உரைத்திருக்கிறேன். அடியேனுடைய கொள்கை என்னவென்றால் ஒவ்வொருவரும் ஒரு ஆசார்யரைத் தழுவி, அவர் கற்பிக்கிறதை ஏற்றுக் கொண்டு, அதன்படி நடந்து கொள்ள வேண்டும். அதாவது ஆசார்யர் வாக்குதான் ஸத்யமென்று எடுத்துக்கொண்டு வேறொன்றையும் எடுத்துக் கொள்ளக்கூடாது. இதன் ப்ரகாரம் மேலே சொன்னஸ்வாமிகள் செய்திருப்பார்

களாதலால், அவர்களுடைய அபிப்ராயங்களைப் பற்றி ஒன்றும் சொல்வதற்கில்லை. அடியேனுடைய அபிப்ராயம் பின்வருமாறு :

வேதத்தின் சாந்தி பாடத்திலேயே "பெருமாள் வேதத்தில் அக்ஷரரூபமாக கீர்த்தனம் பண்ணப்படுகிறார்" என்று சொல்லி யிருப்பதால் வேதமே பெருமானென்று எடுத்துக் கொள்ள வேண்டும். இன்னும் வேதம் பெருமாளைப் போல் அநந்தம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. [இப்படியிருக்கும் பொழுது "வேதாந்தம்" என்று எப்படிச் சொல்லத் தகும்]. அதாவது பெருமாளும் வேதமும் ஒன்று எல்லாவிதத்திலும். அதாவது பெருமாளுடைய உடம்பின் எல்லாபாகங்களும் ஒன்றாக ச்ரேஷ்டமாக இருக்குமாப்போல் வேதத்தின் எல்லா பாகங்களும் ஒன்றாக ச்ரேஷ்டமாகத்தானிருக்கும். ஆனால் நாம் ஸ்ரீவைஷ்ணவர்களெல்லாம் பெருமாளுடைய திருவடியைத்தான் ச்ரேஷ்டமாக எண்ணி கடைபிடித்துக் கொள்ளுகிறோம். அதாவது பெருமாளுடைய உருவம் முழுவதும் நமக்கு தெரிகிறபோதிலும், அதில் திருவடியைப் பொருக்கியிருக்கிறோம். இந்த மாதிரி வேதத்தைப்பற்றி செய்யக் கூடாதாவென்றால், அது முடியாத காரியம், ஏனென்றால் வேதம் முதலிலிருந்த மாதிரி முழுமையும் இப்பொழுது இல்லாமல் அதன் அநேக (நமக்கு தெரியாத என்னபாகங்கள், எவ்வளவு என்று கணக்கிட முடியாதவைகளும்) பாகங்கள் மறைந்து போய் வெகு ஸொல்ப பாகம்தான் நம் கை வசத்திலிருக்கிறதென்று சொல்லப்படுகிறது.

இன்ன மொருகாரணம் வேதத்தின் எல்லா பாங்களும் ஸமமாக விருக்கிறதென்பதற்குச்சொல்லலாம். அது என்னவென்ருல் : கிருத யுகத்தில் நம் முன்ஞேர்கள் வேதத்தின் ஞானபாகத்தைக் கைகொண்டார்கள்; அதற்கு அடுத்த த்ரேதா யுகத்தில் வேதத்தின் கர்ம காண்டத்தை அனுசரித்தார்கள் நம் முன்ஞேர்கள் ; அதற்கடுத்த த்வாபர யுகத்தில் வேதத்தில் அர்ச்சனையைப்பற்றி பேசும் காண்டம் தழுவப்பட்டது நம் முன்ஞேர்களால் ; இப்போது நடக்கிற கலியுகத்தில் நமக்கு வேதவ்யாஸர் வேதத்தின் (பெருமாள்) நாம ஸங்கீர்த்தன பாகத்தை அனுசரிக்க ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் உபதேசித்திருக்கிருர். மேலே சொன்ன நாலு யுகத்தில் வேதத்தின் வெவ்வேறு பாகங்கள் தழுவப்பட்டன ஜனங்களால். இதனுல் என்ன தெரிந்து கொள்ளலாம் என்ருல் வேதத்திலிருக்கிற எல்லா பாகங்களும் ஸமமானவைகள், அதுவும் அவரவர்களுக்கு எந்த எந்த பாகம் தகுதியானதோ அது கைப்பற்றப்பட்டது.

நம் (ஸம்ப்ரதாயத்து) பெரியோர்கள் இப்பொழுது இருக்கிற வேதத்திற்கு பூராவும் பாஷ்யம் எழுதாமல் உபநிஷத் பாகத்திற்கு மாத்திரம் பாஷ்யம் செய்ய அது கைவசத்திலிருக்கிறது. அதையாவது எல்லாரும் அவசியமாக வாசிக்க வேண்டியது.

ஓம். தத். ஸத்.

---

# பெருமாள் அம்சபூதர்கள்

பெருமாள் ஜனங்களை ரக்ஷிப்பதற்காகத்தானே பூமியில் அவதாரம் எடுத்ததல்லாமல் ஆசார்யர் என்று அழைக்கபட்டவர்களையும் நியமித்து அந்தப் பெருமாள் செய்த க்சார்யத்தையே அவர்களும் செய்யும்படி செய்கிருர். இந்த மாதிரியில்லாமல் வேறு மாதிரியாகவும் அந்தக் கார்யத்தை பண்ணும்படி ஏற்பாடு செய்திருக்கிருர். அது என்னவென்ருல்: சில பேர்களைப் பொருக்கி, அவர்களுக்கு தன் அம்சம் கொஞ்சம் கொடுத்து, அவர்களை சாஸ்தரங்களில் சொல்லியிருக்கிற ஒருவன் அனுஷ்டிக்க (செய்ய) வேண்டிய கர்மங்களைப் (செயல்களை) பண்ணச் சொல்வது, அப்படி செய்துகொண்டு வருகிறவர்கள் மஹான்கள் (பெரியவர்கள்) என்று கருதப்பட்டு, அவர்களிருக்கிற இடமே புண்ய பூமியாக ஆகிவிடும். அந்த பூமியின் ஸம்பந்தம் அடைந்தவர்களுக்கு புண்ய பலம் கிடைக்கும். அவர்களை தர்சித்தாலே புண்யபலனை அடையலாம். அவர்களுக்காகவே நடக்கக் கூடிய ஊரில் மழை பேய்வது போன்ற சில கார்யங்களில் பங்கு கொள்ளலாம். அதாவது அவர்களுடைய இருப்பே எல்லா விதத்திலும் சுபிக்ஷத்தை (செழிப்பு)க் கொடுக்கும், அதில் பங்கு எடுத்துக் கொள்ளலாம் அவர்கள் ஸமீபத்திலிருந்து கொண்டு. அவர்கள் எங்கு போனாலும் அந்த இடம் சுபிக்ஷமாயிருக்கும். அது மாத்திரமல்லாமல் அவர்கள் எந்த நதி, தடாகம் (குளம்) முதலியவைகளில் ஸ்நாநம் செய்தாலும் அவைகள் தங்கள் இழந்துபோன மகிமையையும் திரும்பிப் பெறக்

கூடும். இவர்களில் சில பேர்கள் பகவத் விஷயங்களை ஜனங்களுக்குப் போதிப்பார்கள் (சொல்லிக் கொடுப்பார்கள்) பகவத் கதா காலக்ஷேபம் செய்து. அவர்களுக்கு பாகவதர்கள் என்றும், பௌராணிகர்கள் (புராணம் சொல்லுகிறவர்) என்று இன்னமும் ஒரு பெயரும் வழங்கப்படுகிறது.

மேலே சொல்லியிருக்கிறதைத் தவிர நதிகள், தடாகங்கள், ஸமுத்ரங்கள், க்ஷேத்ரங்கள் முதலியவைகள் ஜனங்களுக்கு உதவி செய்ய ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன பெருமாளால். ஆதலால் அவைகள் கலி தோஷத்தினால் மலின தசையை அடைந்திருந்த போதிலும், அதாவது அவைகள் முதலில் அடைந்திருந்த மகிமையை இழந்திருந்தாலும் இப்பொழுது இருக்கிற பாகவதர்களின் ஸம்பந்தம் ஏற்பட்டு கொஞ்சம் மகிமையாவது உடைத்தாயிருக்கலாம், இருக்குமென்று கூட சொல்லலாம். ஏனென்றால் பெருமாள் அதற்குக் கொடுத்த கால அளவு முடியாமலிருந்தால். பெருமாள் எல்லாவற்றிற்கும் கால அளவு ஏற்படுத்தியிருப்பார். அதாவது ஒவ்வொன்றுக்கும் தனக்கும் கூட, உயிருடனிருப்பதற்கு (அதாவது ப்ரயோஜனமுள்ளதாயிருப்பது) இன்ன காலத்தில் ஆரம்பித்து இன்ன காலத்தில் முடிவு அடைய வேண்டுமென்று பெருமாள் நிச்சயம் செய்து விடுவார். அதனால் தான் லோகத்தில் எல்லாம் நாசம் அடைந்து போய்விடுகிறதுகள். பெருமாளும் ஜனங்களுக்கு உதவி புரிவதற்கு செய்கிற கார்யங்க்ள் வெவ்வேறு விதமாக விருக்கின்றன. இப்போது புதிதாக ஸ்த்ரீகள் கூட பகவத் விஷ

யத்தைப் ப்ராசரிக்கக் கிளம்பியிருக்கிறார்கள். அதாவது பெருமாள் அவர்களை அந்தக் கார்யத்தைச் செய்ய நியமித்திருக்கிறார் போலும். ஆனால் அந்தக் கார்யம் செய்வதால் ஸ்த்ரீகள் தோஷத்தைத்தான் அடையவேண்டும் சாஸ்த்ரங்கள் அவர்கள் அந்தக் கார்யத்தைச் செய்யக் கூடாதென்று சொல்லியிருப்பதால். ஆனால் பெருமாளே அவர்களுக்கு அந்தக் கார்யத்தைச் செய்ய அனுமதி (உத்திரவு) கொடுத்திருந்தால் அவர்களிடத்தில் தோஷம் ஒட்டாது. இல்லாவிட்டால் தோஷம் கட்டாயமாக ஒட்டுமென்றுதான் எடுத்துக் கொள்ளவேண்டும், செய்யக்கூடாத கார்யத்தை அவர்கள் செய்வதால். பெருமாள் உத்திரவு இல்லாமல் அந்தக் கார்யத்தை அவர்கள் செய்யக் கூடுமாவென்றால், கூடும் அவர்கள் கர்ம வசத்தால், அதாவது அவர்களுடைய முன் ஜன்மங்களில் செய்த கர்மங்கள் அவர்களைச் செய்யும்படிச் செய்யும். அவர் செய்கிற கார்யம் நல்ல விஷயமாக, அதாவது பெருமாளையே பற்றியதால் பெருமாள் தூண்டுதலால் அந்தக் கார்யத்தைச் செய்கிறார்களென்று எடுத்துக் கொள்ளவேண்டும். ஜனங்கள் ஸாதாரணமாகப் பெருமாளைப் பற்றியே கவனிக்க மாட்டார்களாதலால், அதுவும் இந்த கலியுகத்தில் மேலும் எல்லாம் வரவரக் கெட்டுப் போயிக்கொண்டே வருவதால், பெருமாள் அவைகளெல்லாம் முழுமையும் கெட்டுப்போய் நாசமடையும்படி விடமாட்டார். ஏனென்றால் எல்லாம் நாசம் அடைகிற காலம் வருவதற்கு இன்னம் வெகு காலம் (அனேக வர்ஷங்கள்) கிடக்கவேண்டும். அந்தக் காலம் வருகிறவரைக்கும் எப்படியாவது தன்னு

டைய லீலேயான பூலோக நாடகத்தை நடத்திக் கொண்டு வரவேண்டும். இல்லாவிட்டால் லீலேயி லிருக்கிற ஸ்வாரஸ்யம் போய்விடும். மேலும் அவர் அந்த நாடகம் தான் குறிப்பிட்டகாலம் வரையில் நடப்பதற்கு ஏற்பாடு முன்னலேயே (அதாவது நடக்கிற கலியுகத்திற்கு முன்னல் கிடந்த மூன்று யுகங்களுக்கு முன்னலேயே) செய்து வைத்திருப் பார். ஆனல் எல்லாம் குறிப்பிட்ட மாதிரியே நடக்கவேண்டுமா என்று கேட்டால், அதெல்லாம் பெருமாள் அதீனம். அதாவது அவர் எப்படி இச் சிக்கிருரோ அப்படித்தான் நடக்கும். ஆகையால் எல்லாரும் எல்லா விஷயத்திற்கும் பெருமாளேத் தான் ப்ரார்த்திக்க வேண்டும். ஆகையால் நாமெல் லோரும் பெருமாளே எப்பொழுதும் ப்ரார்த்தித்துக் கொண்டிருப்போமாக.

---

# ஆழ்வார்கள்

பெருமாள் தான் நேராக பூலோகத்திற்குப் போகாமல் தன் அம்ச பூதர்களான ஸ்ரீராமர், ஸ்ரீக்ருஷ்ணர் மாதிரியானவர்களை அனுப்பி ஜனங்களுக்கு உதவி புரியும்படிச் செய்வார். இந்த மாதிரி இப்பொழுது நடக்கிற கலியுகத்திற்கு முன்னால் கிடந்த க்ருத, த்ரேதா, த்வாபர யுகங்களில் நடத்தப்பட்டது அப்படிச் செய்யாமல் வேறு வேறு மாதிரிகளாக இப்பொழுது செய்யப்படுகிறதுகளென்று சொல்லலாம். அது இப்பொழுது அந்த ப்ரகாரம் செய்வது தகுதியிராது போலும். இந்தக் கலியுகாரம்பத்தில் பெருமாள் தன்னுடைய கைங்கர்யபரர்களான (வேலைக்காரர்கள்) விஷ்வக்ஸேனர், ஆயுதாழ்வார்கள் (ஆயுதங்கள்) முதலியவர்களுடைய அம்சபூதர்களை பூமியில் பிறக்கும்படிச் செய்து, அவர்களைப் பெருமாளைப்பற்றி கானம்(பாடல்)பண்ணச்சொல்லி, அவர்களும் ஆழ்வார்களென்று அழைக்கப்பட்டு அந்த ப்ரகாரம் நடந்து கொண்டிருந்து அவர்களுடைய காலமும் வெகு நாட்களுக்கு முன்னாலேயே ஆகிவிட்டது. அந்த ஆழ்வார்கள் பன்னிரண்டு பேர்கள். அவர்கள்:—பொய்கை ஆழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசை ஆழ்வார், மதுரகவி ஆழ்வார், நம்மாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், தொண்டரடிப்பொடி ஆழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கை ஆழ்வார், ஆண்டாள்.

பொய்கை ஆழ்வார் பெருமாளுடைய பாஞ்சஜன்ய (சங்கு) ஆழ்வாருடையாம்சம் பெற்றவர்; பூதத்தாழ்வார் கதா (கதை) ழ்வாருடைய அம்சம்; பேயாழ்வார்

நந்தக (ஒரு ஆயுதம்) த்தினுடையாம்சம். மேலே சொன்ன மூன்று பேர்களும் இந்தக் கலியுகத்தில் உதிக்காமல் நடந்த த்வாபரயுகத்தில் தோன்றியவர்கள். பெருமாள் இவர்களோடு ஒரு ஸமயம் விளையாடினார். அது என்னவென்றால்: பொய்கையாழ்வார் ஒரு ஸமயம் தீர்த்தயாத்திரை செய்யும்போது திருக்கோவிலூருக்குப் போனார். அப்பொழுது மழை பெய்தது, அவர் ஒரு வீட்டிற்குப்போய் தங்குவதற்கு அங்கே இடம் கொடுக்கப்பட்டு வீட்டின் ரேழியில் படுத்துக்கொண்டிருந்தார். உடனே பூதத்தாழ்வார் மேல் சொன்ன வீட்டுக்கு வந்து, பொய்கையாழ்வாரைப் பார்த்து "தான் தங்குவதற்கு இடமிருக்குமா" என்று கேட்டு, அவரும் "இரண்டு பேர்களுக்கும் உட்கார இடமிருக்கிறதென்று" சொன்னதின் பேரில் இரண்டு பேர்களும் ரேழியில் உட்கார்ந்திருந்தார்கள். கொஞ்ச நேரம் கழிந்த பிறகு, இந்த இடத்திற்கே பேயாழ்வார் என்றவரும் வந்து, அவர்களைத் தானும் தங்குவதற்கு இடமிருக்குமா என்று கேட்க, அவர்கள் "இங்கே ஒருவர் படுக்கலாம், இருவர் உட்காரலாம், மூவர் நிற்கலாம்" என்று சொல்ல, மூன்று பேர்களும் ரேழியில் நின்றுக்கொண்டிருந்தார்கள். பிறகு அவர்கள் இன்னொருவர் வந்து அங்கே அவர்களை நெருக்கிக் [கொ]ண்டு நிற்கிறதாக அறிந்தார்கள். அப்பொழுது [அவ]ர்கள் தங்களுடைய ஞானத்ருஷ்டியால் புதிதாக [வந்]தவரைப் பெருமாள் என்று தெரிந்துகொண்டு [அவ]ரை ஸ்துதித்தார்கள் (பாடினார்கள்). மேல் [சொ]ன்ன மாதிரி பெருமாள் தன் பக்தர்களு[டனே]ர் விளையாடி ஸேவை ஸாதித்தார் மேலே

சொன்ன மூன்று ஆழ்வார்களும் அயோனிஜர்கள். அதாவது ஸ்திரீ—புருஷர்களுக்குப் பிறக்காமல், தாங்களே புஷ்பங்களில் தோன்றியவர்கள்.

நம்மாழ்வாருடைய சரித்திரம் வெகு விசித்திரமாக இருக்கிறது. அவர் மாதிரி ஒருவருமிருந்ததில்லை என்று சொல்லவேண்டும். அவர் கலி பிறந்த நாற்பத்து மூன்றும் நாள் சேனை முதலியார் (விஷ்வக்ஸேனர்) அம்சத்தோடு திருக்குருகூரில் (ஆழ்வார் திருநகரி) பிறந்து உடனே அந்த ஊர் பெருமாள் கோவிலுக்குள்ளிருந்த ஒரு புளியமரத்தின் கிட்டே போய், அதனடியில் பத்மாஸனம் போட்டுக்கொண்டு பெருமாளை த்யானம் செய்ய ஆரம்பித்தார். அங்கே அந்த மாதிரியாகவேயிருந்து தன் வாழ் நாட்களை (35 வருஷம்) க்கழித்தார். அவர் தாய் பாலுண்ணுமல் தானே வளர்ந்தவர். ஆழ்வார்களுள் அவர் முதல் ஸ்தானத்தை பெற்றவர். ஆழ்வார்கள் செய்த க்ரந்தங்களான "நாலாயிர திவ்ய பிரபந்தம்" ஒருவராலும் அனுஸந்தானம் பண்ணுமல் போய் மறைந்து கிடந்தது. அதை ஆசார்ய பரம்பரையில் சேர்ந்த நாதமுனிகளென்பவர் நம்மாழ்வாரையே த்யானம் பண்ணி அவராலேயே (நம்மாழ்வார்) உபதேசிக்கப்பெற்ருர்.

மதுரகவி ஆழ்வார் குமுதாம்சம். திருகுருகூருக்கடுத்த திருக்கோளூரில் பிராமணக் குலத்தில் பிறந்தவர். இவர் வேத சாஸ்திரங்களை கற்றவர். ஸ்ரீராமருடைய தம்பியான சத்ருக்னன் ஸ்ரீராமரை ஆச்ரயிக்காமல் பரதனை ஆச்ரயித்தாற்போல், நம்மாழ்வாரை ஆச்ரயித்துப் பாடியிருக்கிருர் இவர்.

பெருமாளைப் பாடாமல். ஆனால் அதனாலேயே இவர் பெருமாள் க்ருபையைப் பெற்றவர்.

திருமழிசை ஆழ்வார் காஞ்சிபுரத்திற்கு கிழக்கே யுள்ள திருமழிசை என்ற ஊரில் பார்கவ முனிவருக்கு ஒரு தேவதாஸியினிடத்தில் ஒரு பிண்டமாய் பிறக்க, அது ஒரு பிரப்பம் புதரில் போடப்பட்டு, பெருமாளின் அருளால் அப்பிண்டம் ஆண் குழந்தை ரூபம் எடுத்து, அந்த பிரப்பம் புதரில் பிரம்பு அறுக்கப்போன ஒரு ஸ்த்ரீயின் கண்ணில் பட, அவள் தன் மகவில்லாத குறைதீர்க்கக் குழந்தையைத் தன் வீட்டிற்கு எடுத்துக் கொண்டுபோய் வளர்க்கப்பட்டவர். இவர் சக்ராம்சம் உடையவரென்று சொல்லப்படுவார். இவர் கடவுள் உண்மை தத்துவத்தைத் தெரிந்துகொள்ள பற்பல சமயங்களில் புகுந்து பிறகு பேயாழ்வாரை சரணம் அடைந்து அவருடைய சிஷ்யனுக்கப்பட்டார். கும்பகோணத்தில் நிரந்தரவாஸம் கொண்டு, வைஷ்ணவ ப்ரசாரத்தில் ஈடுபட்டு, ஸ்ரீ ஆராவமுதனின் த்யானத்தில் தன் கடைசி காலத்தைக் கழித்தார் இவர்.

கோழிக்கூடு என்ற ஊரில் அரசர் குலத்தில் உதித்த குலசேகராழ்வார் கௌஸ்துபாம்சமுடையவர். இவர் ஸ்ரீமத்ராமயணத்திலீடுபட்டவர். அரசாளும்போது ஒரு ஸமயம் ஸ்ரீமத்ராமாயண காலக்ஷேபம் பண்ணும்போது ஸ்ரீராமர் கரதூஷணருடன் போர் செய்தார் என்றதைக் கேட்டபொழுது நிஜமாகவே தன் சேனைகளைத் திரட்டிக்கொண்டு ஒருவராகப் போர் செய்த ஸ்ரீராமருக்கு தான் உதவி செய்யப்

போகிறேன் என்று சொன்னார். உடனே பாகவதர் ஸ்ரீராமர் கரதூஷணர்களைத் தோற்கடித்து விட்டார் என்று சொன்னதின் பேரில் மேல் சொன்ன தன் எண்ணத்தை மாற்றிக்கொண்டார். இவர் ப்ராம்மணர்களிடத்தில் விசேஷ அன்புள்ளவர். இதை விலக்குவதற்காக இவருடைய மந்திரிகள் ப்ராம்மணர்கள் பெருமாளுடைய ஒரு ஆபரணத்தை களவு செய்து விட்டார்களென்ற அபவாதத்தை அவர்கள் பேரில் சாட்டி விட்டார்கள். இதை இந்த ஆழ்வார் ஒத்துக்கொள்ளாமல் அதற்கு பரீக்ஷையும் பண்ணிவிட்டார். அது என்னவென்றால், ஒரு குடத்தில் பாம்புகளை விட்டு தன் கையை குடத்தினுள்ளே விட்டு, கையை பாம்புகள் ஒன்றும் செய்யாதிருந்தால் ப்ராம்மணர்கள் பேரில் ஒன்றும் குற்றமில்லை என்ற அர்த்தமாகுமென்று அதே பிரகாரம் இவர் செய்தார். பாம்புகளும் ஒன்றும் செய்யவில்லை அவர் கையை. ஆதலால் அந்த பரிக்ஷையில் ஜெயித்து விட்டார். முகுந்தனை முகுந்தமாலை என்ற க்ரந்தத்தால் பாடியிருக்கிறார்" பெருமாள் திருமொழி என்ற க்ரந்தமும் இவர் பாடியது.

**பெரியாழ்வார்** : ஸ்ரீ வில்லிபுத்தூரில் **விஷ்ணுசித்தர்** என்ற பெயருடன் ப்ராம்மண குலத்தில் கருடாம்சத்துடன் பிறந்து பிற்காலத்தில் **பெரியாழ்வாரென்று** பெயர் பெற்றவர். இவர் பெருமாளுக்கு புஷ்ப கைங்கர்யம் (அதாவது மாலை சாத்துவது பெருமாளுக்கு) செய்துக் கொண்டிருந்தார் ஆதியில். ஒரு ஸமயம் அக்காலத்தில் மதுரையிலிருந்த பாண்டிய தேசத்தரசன பல சமய பண்டிதர்களின் வித்வத்சபைக்

கூட்டி பரம்பொருள் இன்னதென்று நிர்ணயிக்க, அதற்குப்பரிசாக ஒரு சிலையில் அளவற்ற பணத்தை முடிந்து, அந்தப் பணப்பையை சபா மண்டபத்தின் முன் ஒரு கம்பத்தில் கட்டி தொங்கவிட்டு, பண முடிப்பு தானே அறுந்து விழும்படியாக, யார் பரம்பொருளை விளக்குகிறார்களோ அவருக்கே பணமெல்லாம் உரியது என்று சொல்லி அதை நடத்தினான். அப்பொழுது ஸ்ரீ வில்லிபுத்தூர் பெருமாள் விஷ்ணுசித்தரை, அவருக்கு ஒன்றும் தெரியாமலிருந்த போதிலும் அந்த ஸபைக்குப் போகச்சொல்லி "ஸ்ரீமந் நாராயணனே பரம்பொருளே"ன்று நிரூபித்து பொற்கிழியை (பணம் மூட்டை)க் கொண்டுவாரும் என்று நியமித்தார். அதன் பேரில் விஷ்ணுசித்தர் பெருமாள் சொன்னபடியே செய்து, மேலே சொன்ன பரிசையும் பெற்று, அந்த அரசனால் பட்டத்து யானை மீது ஏற்றப்பட்டு ஊர்வலம் வந்தபொழுது பெருமாள் அந்தக்காக்ஷியைப் பார்த்து ஆனந்திக்க ஆகாயத்தில் வந்து அவருக்கு ஸேவை ஸாதித்தார். ஆழ்வார் பெருமாளை ஸேவித்து பெருமாளுடைய அழகுக்கு ஏதாவது தீங்கு வருமோ என்று பயந்து "பல்லாண்டு" பாடி மங்களாசாஸனம் (ஸ்தோத்திரம்) பண்ணினார். அப்புறம் அவர் தன்னிடத்திற்குப் போய் முன்போல் புஷ்ப கைங்கர்யம் பெருமாளுக்குச் செய்துக் கொண்டிருந்தார். கொஞ்சம் நாள் கழிந்த பிறகு அவருடைய நந்தவனத்தில் துளசிச் செடிகளின் அடியில் கிடந்த குழந்தை (ஆண்டாள்)யை எடுத்து வளர்த்து, பருவம் வந்த அளவிலே ஸ்ரீரங்கத்திற்கு அழைத்துப்போய் ஸ்ரீரங்கநாதனுக்கு நாயகியாக ஸமர்பித்தார். பெருமாளுக்கே

மங்களாஸாஸனம் பண்ணிய பெரியாரானதால் பெரியாழ்வார் என்று பெயர் பெற்றார்.

**ஆண்டாள்:** சூடிக்கொடுத்த நாச்சியார் என்று அழைக்கப்பட்டு, பூமாதேவி அம்சமாய் ஆண்டாள் என்ற பெயருடன் ஸ்ரீ வில்லிபுத்தூரில் அவதரித்தாள். இவளுடைய சரித்திரம் கொஞ்சம் மேலே சொல்லப்பட்டிருக்கிறது. இவள் தன் தகப்பனார் பெருமாளுக்கு மாலை ஸமர்ப்பிக்குமுன் அதைத்தான் முதலில் அலங்கரித்துக் கொள்ளுவாள். அதனால் சூடிக்கொடுத்த நாச்சியார் என்று பெயர் வந்தது. இவள் திருப்பாவை (பெருமாளை எப்படி அடைவது) என்ற க்ரந்தத்தைப் பாடியிருக்கிறாள். நாச்சியார் திருமொழி (இது கல்யாணங்களில் பாடப்படுகிறது) என்ற க்ரந்தத்தையும் பாடியிருக்கிறாள்.

**விப்ர நாராயணர்** என்ற ஆழ்வார் திருமண்டங்குடி என்னும் க்ஷேத்ரத்தில் ப்ராம்மண குலத்தில் வநமாலாம்சத்துடன் உதித்தவர். இவரும் பெருமாளுக்கு புஷ்ப கைங்கர்யம் செய்துக் கொண்டிருந்தார். ஆனால் கொஞ்ச நாள் கழித்த பிறகு ஒரு தாஸியின் வசம் அகப்பட்டுக்கொண்டு, தன் கைங்கர்யத்தை விட்டு விட்டு, அவளுடனேயே இருந்தார். அப்புறம் பெருமாளால் அவர் தாஸி வலையிலிருந்து நீக்கப்பட்டு, வைஷ்ணவர்களுக்கு அடிமை பூண்டொழுகி அதனால் "தொண்டரடிப் பொடி" என்ற நாமத்தையும் பெற்றார்.

**திருப்பாணாழ்வார்:** ஸ்ரீரங்கத்திற்கருகிலுள்ள உறையூரில் ஸ்ரீவத்ஸாம்சத்துடன் ஒரு அந்தணர் நெற்

பயிரில் அவதரித்தவர். அந்த ஊர் சேரியிலுள்ள பாணகுலத்தானொருவன் அந்தக் குழந்தையை எடுத்துக் கொண்டுபோய் வளர்த்து வந்தான். அதனால் திருப்பாணாழ்வார் என்ற திருநாமம் வந்தது அவருக்கு. மேலும் அதனால் அவர் ஸ்ரீரங்கஸ்தலத்தில் காலடி வைக்கத் துணியாமல் காவேரிக் கரையிலிருந்தே நின்றுகொண்டு ஸ்ரீரங்கநாதனை பாடிக் கொண்டிருந்தார். பெருமாள் அதைப் பார்த்து மனமிரங்கி அர்ச்சகரையே ஆழ்வாரைத் தூக்கிக் கொண்டு வரச்சொல்லி தன்னுடன் ஐக்கியம் பண்ணிக்கொண்டு விட்டார்.

**திருமங்கைஆழ்வார்** :—சோழ நாட்டில் திருவாலி திருநகருக்கருகிலுள்ள திருக்குறையலூரில் கள்ளக் குடியில் சோழ அரசனின் சேனைத்தலைவனுக்கு, சார்காம்சத்துடன் பிள்ளையாகப் பிறந்தார். பால்யத்தில் வில் வித்தை முதலிய ஆயுதப்பயிற்சி பெற்று சோழ ராஜனின் சேனாதிபதியாய் அமர்ந்து, பகைவர்களை வென்று **பரகாலன்** என்று பிரசித்தி பெற்றார். பிறகு திருமாங்கை நாட்டிற்கு சிற்றரசனாகச் செய்யப்பட்டார் சோழ அரசனால்.

இப்படியிருக்கையில் ஒரு அப்ஸரஸ் (தேவப் பெண்) ஒரு முனிவர் சாபத்தால் மனுஷதேகத்தை எடுத்துக்கொண்டு திருவெள்ளக்குளம் என்ற ஊரில் குமுதவல்லி என்ற பெயருடன், இனிய குரலுடன் ஸங்கீர்த்தனம்பண்ணிக்கொண்டும் நடனமாடிக் கொண்டும் வசித்து வந்தாள். இந்த ஆழ்வார் அதைக் கேள்விப்பட்டு அந்தப் பெண்ணைக் கல்யாணம்

செய்துக்கொள்ள இச்சித்து, அந்த விஷயத்தை அந்தப் பெண்ணை வளர்த்துக் கொண்டு வந்தவரிடத்தில் சொல்ல, அந்தப் பெண் திருவிலச்சினை, திருமண்காப்பு முதலிய பஞ்சஸம்ஸ்காரமுடைய வைஷ்ணவனுக்கன்றி பிறருக்கு வாழ்க்கைப்பட மாட்டேன் என்று சொல்ல, அந்த ஆழ்வாரும் அந்த மாதிரி செய்து அவளைக் கல்யாணம் பண்ணிக் கொண்டார். அவள் மேலே சொன்னது தவிர "நீர் ஓர் ஆண்டளவும் நித்யம் 1008 வைஷ்ணவர்களுக்கு அமுது செய்விக்க வேண்டுமென்று" சொன்னதையும் பூர்த்திபண்ணத் தன்னிடத்திலிருந்த பணத்தையெல்லாம் செலவழித்து விட்டுத் தன் தோழர்கள் "நீர்மேல் நடப்பான்," "நிழலிலே தாங்குவான்," "தாளூதுவான்," "தோலாவழக்கன்" என்ற நாலு பேரின் உதவியோடு கொள்ளையடிக்கிற தொழிலைக் கைப்பற்றினார்.

இப்படிச் செய்துகொண்டு இருக்கும்பொழுது, பெருமாள் அவர்மேல் க்ருபை செய்து (அவருக்கும் நல்லகாலம் வந்ததால்) தாயாருடன் மணக்கோலத்தில் ஆழ்வாரிடத்திற்கு வந்தார். அவர் அதைப் பார்த்துப் பெருமாள் அணிந்திருந்த நகைகளைக் கழற்றினார். ஆனால் பெருமாள் காலிலிருந்த ஆபரணத்தைக் கழட்ட முடியவில்லை அவர் தன் பல்லை அதற்கு உபயோகித்த போதிலும் (இந்தமாதிரி செய்தது பெருமாளின் சரணத்தை அடைந்த மாதிரி ஆயிற்று போலும்). உடனே பெருமாள் தன்னைச் சரணமடைந்தவருக்கு அவர் காதில் திரு அஷ்டாக்ஷரம் என்ற மந்திரத்தை ஓதிவிட்டு, மறைந்து

விட்டார். அப்புறம் அவருக்கு புத்திமாறி பகவத் கைங்கர்யத்திலேயே, ஈடுபட்டு, ஒவ்வொரு திவ்ய தேசங்களுக்கும் யாத்திரை போய், அங்கிருந்த பெருமாள்களை மங்களாசாஸனம் பண்ணிக்கொண்டு தன் காலத்தைக் கழித்தார்.

முதலில் சொன்ன மூன்று ஆழ்வார்கள் த்வாபர யுகத்தில் இருந்தார்கள். மற்றவர்கள் கலியுகத்திலிருந்தவர்கள். அவர்களுடைய க்ரந்தங்கள் நாலாயிர திவ்ய ப்ரபந்தமென்று சொல்லப்படுகின்றன. அவைகளெல்லாம் பெருமாளைத்தான் பாடுகின்றன. பெருமாள் ஒவ்வொரு ஆழ்வாரையும் லோகத்தில் ஜனங்கள் நடக்கிற மாதிரி செய்து எப்படிப் பெருமாளிடத்தில் பக்தி பண்ண வேண்டுமென்றதையும் காண்பிக்கச் செய்திருக்கிறார். "நாலாயிர திவ்ய ப்ரபந்தம்" தமிழ் வேதம் என்று சொல்லப்படுகிறது. அதாவது அதில் வேதத்தில் சொல்லியிருக்கிறவைகளெல்லாம் சொல்லப்பட்டிருக்கிறது ன்று அர்த்தம். கோவில்களில் இந்த க்ரந்தம் விக்கப்படுகிறது.

# லோகாசாரியர்கள்

ஆழ்வார்கள் காலங்களெல்லாம் வெகு நாட்களுக்கு முன்னுலேயே ஆகிவிட்டன. அவர்களுடைய ப்ரதிமைகள் (பிம்பங்கள்) கோவில்களில் பூஜை செய்யப்படுகின்றன. அவர்களுடைய க்ரந்தங்களும் கோர்வில்களில் வேதத்தோடும் பாடப்படுகின்றன.

பெருமாள் மேலே சொன்னவர்களுக்குப் பிறகு லோகாசாரியார்கள் என்றவர்களை பூலோகத்திற்கனுப்பி ஜனங்களுக்கு மத விஷயமாக உதவி செய்யும்படி நியமித்ததின் பேரில் பிறவி எடுத்து கார்யங்களை நடத்திஞர்கள் அவர்கள்.

ராமானுஜர் என்பவர் தான் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு லோகாசாரியார். இவர் சேஷா (ஆதிசேஷன்) ம்சம். இவருக்கு முன்ஞல் சிவனுடைய அம்சம் பெற்றவரான சங்கராச்சாரியார் (சுமார் 2000 வருஷங்களுக்கு முன்ஞல் இருந்தவர்) அத்வைதத்தை இந்தியாவில் நிலை நிறுத்திஞர். அப்பொழுது புத்தர் ஏற்படுத்தின பௌத்த மதம், ஜைன மதம், முதலியவைகள் இந்தியாவில் மிகவும் ப்ரபலமாக இருந்தன. அவைகளைக் கண்டிக்க அத்வைத சித்தாந்தத்தை சங்கராச்சாரியார் உபயோகப்படுத்திக் கொண்டார் போலும். ஏனென்ருல் அவர் விஷ்ணு பக்தரென்றும் சொல்லப்படுகிருர் இப்பொழுது. ராமனுஜர் அத்வைத மதத்திற்கு எதிர்த்தட்டாக ஸ்ரீ வைஷ்ணவர்களின் ஸித்தாந்தமான விசிஷ்டாத் வைதத்தைப் பிரசாரம் பண்ணி

நிலை நிறுத்தியிருக்கிறார். இந்தியாவில் இப்பொழுது அவருக்கு சிஷ்யவர்கங்கள் ஏராளமாக இருக்கிறார்கள். தனக்குப் பிறகு அவருடைய ஸித்தாந்தம் நிலை நிற்க வேண்டும் பொருட்டு 74 பீடங்களை ஸ்தாபித்தார். அவைகளை நிர்வஹித்து வருமாறு கட்டளை இடப்பட்டவர்களுக்கு ஸிம்மாசனாதிபதிகள் என்று பெயரிட்டார்கள். இவர்களைத் தான் "ஸ்ரீவைஷ்ணவ ஆசார்ய பரம்பரைப் புகழைப் பெற்றிருப்பவர்களென்று" சொல்லலாம்.

இதற்கு பிற்பாடு ஸ்ரீ வைஷ்ணவ கோஷ்டி இரண்டாகப் பிரிந்து ஒன்று வடகலையார் (வட இந்தியாவில் அதிகமாக வழங்கின சமஸ்க்ருத பாஷையை பின்பற்றினவர்கள் என்றும், இன்னொன்று தென் கலையார் (தென் இந்திய தேசத்தில் வழங்குகிற தமிழ் பாஷையை முக்யமாக எடுத்துக் கொண்டிருப்பதால்) என்றும் பெயரை உடைத்தாயிருக்கிறது.

ராமானுஜருடைய அம்சத்தை உடைத்தாயிருப்பவர் என்று சொல்லப்பட்ட மணவாள மாமுனி என்பவரை தென்கலையார் ஆசிரியராக வைத்துக் கொண்டு உள்ளார்கள். வடகலையார்களுக்கு வேதாந்த தேசிகர் ஆசாரியராக ஆனார்.

அடியேன் வடகலையார் கோஷ்டியைச் சேர்ந்தவனுகையால் அவர்களுடைய கோஷ்டி இங்கு பேசப்படுகிறது.

வேதாந்த தேசிகர் என்பவர் திருப்பதி ஸ்ரீனிவாஸப் பெருமாளுடைய கண்டை (திருமணி) யின்

அவதாரமென்று சொல்லப்படுகிறார். இவர், பால்யத்திலேயே எல்லா வித்தைகளையும் கற்பிக்கப்பட்டு (ராமானுஜருடைய சிஷ்யரால்) தன்னுடைய ஆசார்யர் செய்த காரியத்தையே தானும் செய்து கொண்டு அநேக க்ரந்தங்களை எழுதியிருக்கிறார். ரஹஸ்ய த்ரய ஸாரம் என்ற க்ரந்தம் தான் அவருடைய க்ரந்தங்களில் முக்யமானது என்று சொல்ல வேண்டும். அதில் பரந்யாஸம் (சரணாகதி பெருமாளிடத்தில் செய்வது) என்ற விஷயத்தைப் பற்றி சொல்லியிருக்கிறது. அவர் நூறு (100) வருஷங்களுக்கு மேல் ஜீவித்திருந்ததாகச் சொல்லப்படுகிறது. அவரே தனக்குப் பிறகு வரப்போகிற ஆசார்யர்கள் ப்ரதிமை (பிம்பம்)களைக் கோவில்களில் ப்ரதிஷ்டை பண்ணி ஆராதனம் செய்ய வேண்டியதில்லை என்று அவருடைய சிஷ்யர்களுக்குச் சொல்லி விட்டாராம். ஏனென்றால் அவர்கள் அவ்வளவு யோக்யதையை உடைத்தாயிருக்க மாட்டார்கள் போலும்.

வேதாந்த தேசிகர் காலமான பிறகு வடகலையார் கோஷ்டி இரண்டாகப் பிரிந்து ஒன்று மடம் என்றும், இன்னொன்று முனித்ரயம் என்றும் அழைக்கப்படுகிறது. மடம் என்பது ஒரு மடம் ஏற்படுத்தி அதற்கு ஒருவர் அதிபதியாக நியமிக்கப்பட்டு, அவர் அந்த கோஷ்டிக்கு ஆசார்யராக விளங்குவார். முனித்ரயம் என்ற கோஷ்டியார் இன்னொருவரை ஆசார்யராக வைத்துக் கொண்டார்கள். இப்பொழுது மடத்தார்கள் (அஹோபில மடத்தில் சேர்ந்தவர்கள்). தங்களுடைய ஆசார்ய பரம்பரையி

லிருப்பவரை ஆச்ரயிக்கிறார்கள். முனித்ரயத்தைச் சேர்ந்தவர்கள் சில பேர்கள் மடங்கள் ஏற்படுத்திக்கொண்டு அதற்கு சிஷ்யர்களாகவும், சில பேர்கள் ஸ்வயமாசார்ய புருஷர் (தாங்களே ஆசார்யராகவிருப்பது) களாகவும் அய்யங்கார் என்ற பெயரோடும் ஆசார்ய பதவியை வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

அடியேனுக்குப் பெருமாளால் இரண்டு ஸ்வாமிகள் ஆசார்யர்களாக நியமிக்கப்பட்டு அவர்கள் அடியேனால் சரணமடையப்பட்டிருக்கிறார்கள். அவர்களில் முதல்வர் ஸ்ரீ க்ருஷ்ணசுவாமி அய்யங்கார் ஸ்வாமி என்பவர். செங்கல்பட்டு ஜில்லாவைச் சேர்ந்த குளத்தூரென்ற கிராமத்தில் அவதரித்தவர். இப்பொழுது வைகுண்டவாஸியாக இருக்கிறார். அடியேனுக்கு அவர் ஸ்ரீமஹாலக்ஷ்மி மந்த்ரத்தை உபதேசித்திருக்கிறார். அவர் அனுமதியின் பேரில் இன்னொரு ஆசார்யார் பரந்யாஸம் அடியேனுக்கு கும்பகோணம் ஸ்ரீ சாரங்கபாணி ஸ்வாமி சந்நிதியில் பண்ணிவைத்தார். அவர் கும்பகோணத்தில் பிறந்து வளர்ந்தவர். அவர் அக்னி ஹோத்ரி (அதாவது அக்னி ஹோத்திரம் பண்ணிக் கொண்டிருந்தவர்). அவர் ஸ்ரீனிவாஸ தாதாசார்யர் ஸ்வாமி (பட்டுஸ்வாமி என்றும் அழைக்கப்பட்டார்). அய்யங்கார் என்ற ஆசார்ய கோஷ்டியில் சேர்ந்தவர். இப்பொழுது அவர் வைகுண்ட வாஸியாக இருக்கிறார்.

மேலே லோகாசாரியார், ஆசார்யர்களைப் பற்றி சொல்லியிருக்கிற விஷயங்களை அவரவர்கள் ஆசார்யரைக் கேட்டுத் தெரிந்துகொண்டு நடக்கவேண்டும்.

# ஆசார்யர்

எந்த வித்தையும் ஆசார்யர் மூலமாகக் கற்றுக்கொண்டால்தான் பலிக்குமென்று நம் சாஸ்திரங்களில் சொல்லபட்டிருக்கிறது. ஆசார்யர் கற்பிக்காத வித்தை பிரயோஜனப்படாதென்று எடுத்துக்கொள்ள வேண்டும். அதுவும் பகவத் விஷயத்தைப்பற்றின வித்தையை உபதேசிக்கிற (கற்பிக்கிற) வரைத்தான் ஆசார்யரென்று சொல்லவேண்டும். மற்றவர்களை உபாத்யாயர்கள் என்று குறிப்பிட வேண்டும். பகவத் விஷயத்தில் ஆசார்யரை வைத்துக் கொள்ளாமல் நடந்து கொண்டவனைப் பற்றி புராணத்தில் ஒரு கதை சொல்லப்பட்டிருக்கிறது. அது என்வென்றால்: ஒரு பிரம்மாணன் ஸித்தி அடைவதற்கு வெகு நாட்கள் தபஸ் பண்ணியும் பிரயோஜனமில்லாமல் போயிற்றும். அப்பொழுது ஒரு அசரீரியால்(தேகமில்லாத தேவலோக சம்பந்தமான வார்த்தை ஆகாயத்தில் சொல்லப்படுவது) 'நீ ஒரு ஆசாரியரால் உபதேசிக்கப்படாமல் தபஸ் செய்து கொண்டிருக்கிறாய், அதனால் உனக்கு ஒன்றும் பலிக்கவில்லை,' என்று சொல்லக்கேட்டு, பிறகு ஒரு ஆசார்யரை அடைந்து அவரால் உபதேசிக்கப்பட்டு, தபஸ் செய்து அவன் ஸித்தி அடைந்தான். அதாவது அவனுக்கு பகவான் ப்ரத்யக்ஷமானார். ஆகையால் ஒரு ஆசார்யர் மூலமாகத்தான் பகவத் விஷயத்தில் ஸித்தி அடைய முடியும்.

ஆசார்யர், லோகாசாரியர், பரமாசார்யர் என்று மூன்று வகைகள். பெருமாள் பரமாசார்யர் என்று சொல்லப்படுகிறார். பெருமாள் சங்கரர், ராமானு

ஜர், மத்வர் என்று பெயருள்ளவர்கள் மாதிரி சில பேர்களை பூமியில் பிறக்கச்செய்து அவர்களை ஒவ்வொரு ஜாதியிலிருப்பவர்களுக்கு பகவத் விஷயத்தைப் பற்றி உபதேசம் செய்யச் சொல்லுவார். ஒவ்வொருவரும் தான் பிறந்த ஜாதியில் உதித்த ஒருவரை உபதேசம்பெற அடைய வேண்டும். அவர் ஆசார்யரென்று சொல்லப்படுவார்.

எவரை வேண்டுமானாலும் ஆசார்யராக வைத்துக்கொள்ளலாமாவென்றால், கூடாது. யார் அந்த ஆசார்யர் பதவியை வஹிக்கத்தகுதியாயிருக்கிறார்களோ, அவர்களைத்தான் ஆசார்யர்களாக வைத்துக்கொள்ள வேண்டும். அதிலும் அவர்கள் புருஷர்களா அல்லது ஸ்த்ரீகளா என்று கவனிக்க வேண்டும். ஏனென்றால் ஸ்த்ரீகள் இன்னொருவரை (அதாவது பர்த்தாவை) அண்டியிருப்பவர்களாதலால், இந்த ஆசார்யர் பதவியை வஹிக்க அர்ஹதையில்லாதவர்கள். ஆனால் சில பேர்கள் (ஸ்த்ரீகள்) லோகத்தில் ஆசார்யராக எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கிறார்களென்றால் அதற்கு காரணம் வேறாகயிருக்கலாம். அது என்னவென்றால் சாஸ்த்ரங்களில் ஸ்த்ரீகள் வேதம் மந்தரம் ஒன்றும் கற்றுக்கொள்ளக் கூடாதவர்களாகையால் அவர்களுக்கு அந்தப் பதவியை வஹிப்பதற்குத் தகுதியில்லையாது, என்று சொன்ன போதிலும், ஸ்த்ரீகளை ஆசார்யராக் வைத்துக் கொண்டவர்களுக்கு கர்மம் அந்த ப்ராகாரமிருக்க வேண்டு என்று தான் சொல்ல வேண்டும். அதற்கு பலன் என்னவிதமிருக்கலாமென்றால் பெருமாளுக்கு அதைப்பற்றி எப்படி இஷ்ட

மாயிருக்குமோ அந்தப்படிதான் நடக்கும். ஒவ்வொருவனுக்கும் பிறந்த உடனேயே ஆசார்யர் ஏற்பாடு பண்ணப்பட்டிருப்பர். எந்த எந்த காலத்தில் அடைய ப்ராப்தியிருக்கிறதோ, அப்பொழுது ஆசாரியரே ஒவ்வொருவனிடத்திற்கும் வந்து அவனை சிஷ்யனாக ஆக்கிக் கொள்வார். அல்லது ஆசார்யரிடதிற்குப் போய் ஒருவன் தன்னை அவருக்குச் சிஷ்யனாக ஏற்றுக் கொள்ளும்படி அவரை ப்ரார்த்திக்க வேண்டும். அவர் அதற்கு சம்மதித்தால் அந்தப் படிச் செய்வார். ஆசார்யர் அவரவருடைய கர்மப் பிரகாரம் கிடைப்பார். அதாவது ஆசார்யர் அவரவர்கள் அதிருஷ்ட பிரகாரம் கிடைப்பார். அதாவது அதிருஷ்டம் நல்லதாயிருந்தால் ஆசார்யர் எல்லாவிஷயமும் தெரிந்தவராயிருப்பார். அதிருஷ்டமில்லாமலிருந்தால் ஆசார்யர் ஒன்றும் தெரியாதவராயும் கெட்ட நடத்தை உடைத்தாயிருப்பவருமாகயிருப்பார்.

எல்லோரும் ஆசாரியராக ஆகிவிடக்கூடாது. அந்தப் பதவியை வஹிப்பதற்கு யோக்கியதையுள்ளவராக இருக்க வேண்டும். ஆசார்யராயிருப்பவர் கண்டபடி சிஷ்யனைக் ஏற்றுக்கொள்ளக்கூடாது. அந்த விஷயத்தில் மிகவும் ஜாக்கிரதையுடனிருக்க வேண்டும். ஏனென்றால் சிஷ்யன் செய்கிற பாபங்கள் ஆசார்யரைப் போய்ச்சேரும். சிஷ்யன் ஆசாரியருக்குச் சிச்ருஷை பண்ணவேண்டும். இல்லாவிட்டால் ஆசாரிய த்ரோகம் பண்ணியமாதிரி ஆகும். அது மஹத்தான பாபமாகும். ஆகையால் சிஷ்யன் ஆசார்யர் விஷயத்தில் சரியாக நடந்து கொள்ள

வேண்டும். இல்லாவிட்டால் ஆசார்யரும் சரியாகச் சொல்லிக்கொடுக்க மாட்டார். ஆசார்யரை மாற்றிக் கொண்டே யிருக்கக்கூடாது. அப்படிச் செய்வதால் தானும் வித்தையை சரியாகக்கற்றுக் கொள்ள முடியாது. அவர்களுக்கும் அபசாரப் (தப்பாக நடந்து கொள்வது) பட்ட மாதிரியாகும். அது பாபமாகும். மேலும் ஒவ்வொரு ஆசார்யநும் வெவ்வேறு விதமாகக் கற்பிப்பார்கள். அதனால் எதை எடுத்துக்கொள்வது என்று தெரியாது. ஆசார்யர் சொல்வதை எடுத்துக் கொள்ள வேண்டும், தனக்குத் தோன்றியதை எடுத்துக் கொள்ளாமல். இந்த விஷயத்தைப்பற்றி ஒரு கதை ஒரு புஸ்தகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அது என்னவென்றால் ஒரு பண்டிதன் (அநேக புஸ்தகங்களைப் படித்தவன்) தனக்கு ஒன்றும் சரியாகப் புரியாமல் போய், சில வித்வான்களிடம் (ஆசார்யர்களிடம்) போய் தன் குறையைத் தீர்த்துக்கொள்ள ப்ரயத்தனப்பட்டான். அவர்கள் சொல்லிக்கொடுக்கும் பொழுது அவனும் தான் புஸ்தகம் படித்துக் கற்றுக்கொண்டதை வைத்துக்கொண்டு வாதாடினான். அதனால் அவர்கள் கற்பித்தது அவனுக்கு புரியாமல் போய் விட்டது. அப்புறம் ஒருவரிடம் போனபொழுது அவர் கற்பிக்கும் பொழுது அவனைப் பேசாமலிருக்கும்படிச் செய்து உபதேசித்தாரம். அப்பொழுது அவனுக்கு எல்லாம் புரிந்துவிட்டதாம். ஆகையால் ஆசார்யர் சொல்வதைக் கேட்கவேண்டும், அது சரியாகத் தானிருக்குமாகையால்.

பெருமாள்தான் ஆசார்யராக இருப்பார். தான் நேரில் கார்யத்தை செய்யக் கூடாதென்று

மற்றவர்கள் மூலமாக அந்தக்கார்யத்தை செய்கிருர் பெருமாள். எல்லா விஷயங்களும் பெருமாளாதீனம். அதாவது அவர்தான் நடத்துகிருர். ஆகையால் எல்லோரும் பெருமாளுடைய பக்தர்களாக இருக்க வேண்டும். அப்படியிருந்தால் நல்ல கதியை அடையலாம். அதுதானே எல்லோருக்கும் புருஷார்த்தம் (புருஷ ப்ரயோஜனம்)!

# ப்ராம்மணர்கள்

दैवाधीनं जगत्सर्वं मन्त्राधीनं तु दैवतं ।
तन्मन्त्रं ब्राह्मणाधीनं ब्राह्मणाः मम देवताः ॥

மேலே சொன்ன வார்த்தை பெருமாள் (ஸ்ரீ க்ருஷ்ணன்) சொன்னது. அதன் தாத்பர்யம் என்னவென்றால்: ஜகத் (லோகம்) முழுவதும் தைவத்துக்கு அதீனம் (உட்பட்டது), தைவம் மந்த்ரத்திற்கு உட்பட்டது, மந்தரம் ப்ராம்மணர்களுக்கு அதீனம், ஆகையால் ப்ராம்மணர்கள் என்னுடைய தேவதைகள். அதாவது பெருமாள் ப்ராம்மணர்களை பூஜித்துக் கொண்டிருந்தார்.

ப்ரம்ம புத்ரரான அத்ரி என்ற ப்ரம்மரிஷிக்கு அநஸூயா என்றவள் பார்யை. அவள் மஹா பதிவ்ரதையாக விளங்கினாள். ஒரு ஸமயம் அவளைப் பரிசோதிக்க விஷ்ணு, ப்ரம்மா, ருத்ரன் மூன்று பேர்களும் சேர்ந்து ஓர் கார்யத்தைச் செய்தார்கள். அது என்னவென்றால்: அத்ரி மகரிஷி தன் ஆச்ரமத்தில் இல்லாத பொழுது அவர்கள் யதிகளுடைய வேஷம் தரித்துக் கொண்டு, அந்த ஆச்ரமத்திற்குப் போய், அங்கிருந்த அநஸூயயைத் தங்களுக்கு பிக்ஷைப் போடும்படிக் கேட்டார்கள். அவள் அதைச் செய்வதாக ஒத்துக் கொண்ட பொழுது, அவர்கள் "அந்த காரியத்தை நீ நிர்வாணமாக (வஸ்த்ரமில்லாமல்) யிருந்து செய்யும்படிக்கு இச்சைப் படுகிறோம்," என்று சொன்னதின் பேரில், அவளும் அந்த மாதிரியே செய்ய ஒத்துக் கொண்டு, அவள்

உள்ளே போய், இதைப்பற்றி யோஜித்து (ஞான த்ருஷ்டியால்) ப்பார்த்து, அவர்கள் இன்னாரென்று தெரிந்து கொண்டு, தன் பதிவ்ரதா சக்தியால் அவர்களைச் சிறு குழந்தைகளாக ஆக்கிவிட்டு, தான் ஒத்துக் கொண்டபடி நிர்வாணமாக இருந்து கொண்டு குழந்தைகளுக்கு என்ன பிக்ஷை கொடுப்பார்களோ எல்லாரும், அதை (அதாவது பால் கொடுப்பது) ச் செய்து தான் ஒத்துக் கொண்டதைப் பூர்த்தி பண்ணினாள். பிறகு அவர்களுடைய பத்னிகளான லக்ஷ்மி, ஸரஸ்வதி, பார்வதி, அநஸூயயைக் கேட்டுக் கொண்டதன் பேரில் அவர்களை முன்னிருந்தபடி ஆக்கி விட்டாள். இதன் பிறகு அநஸூயை இச்சித்தபடி அவர்கள் தத்தாத்ரேயராக அவதாரம் எடுத்தார்கள்.

இன்னொரு பதிவ்ரதை என்ன செய்தாள் தெரியுமா? அவளுக்கு நளாயினி என்று பெயர். அவளுடைய பர்த்தாவான மௌத்கல்யரிஷி என்பவர், அவளைப் பரிசோதிக்க, குஷ்ட ரோகியாகப் போய், நான் தாஸி வீட்டுக்குப் போக ஆசைப்படுகிறேன் என்று அவளிடம் சொல்ல, அவள் அவரை ஒரு கூடையில் வைத்துக் கொண்டு போகும் பொழுது வழியில் அந்தக் கூடை தபஸ் செய்து கொண்டிருந்த மாண்டவ்யரிஷி என்பவர் காலில் பட்டது. உடனே அவர் "நீ பொழுது விடிய மாங்கல்ய மிழக்கக் கடவாய்" என்று அவளுக்குச் சாபமிட அவள் தன் பதிவ்ரதா பலத்தால் "பொழுது விடியாதிருக்க" என்று சபித்தனள். இதனால் தேவர்களுக்கு நித்ய கர்மாதிகள் நடக்க முடியாமலிருப்பதைக் கண்டு, தேவர்கள் மாண்டவ்யரை வேண்ட, அவர் அவர்களை

அவளுக்கு மாங்கல்ய மிழக்காமலிருக்க அநுக்ர ஹிக்கச் சொல்ல, அவர்களும் அந்த மாதிரி செய்த பிறகு அவள் பொழுது விடியப் பண்ணினாள்.

மேலே சொன்ன இரண்டு பதிவ்ரதைகளின் சரித்திரத்திலிருந்து ஸ்திரீகள் எவ்வளவு பலமுள்ளவர்களாக இருந்தார்களென்று தெரிந்து கொள்ளலாம். அந்தமாதிரி ஸ்த்ரீகளை பத்னிகளாக வைத்துக் கொண்டு பெருமாளாலும் பூஜிக்கப்பட்டார்கள் ப்ராம்மணர்கள் என்றிருந்த பொழுது, அவர்கள் எவ்வளவோ பலிஷ்டர்களாக இருந்திருக்க வேண்டுமல்லவா?

ப்ராம்மணர்கள், ஜனங்கள் நாலு ஜாதிகளாக பிரிக்கப்பட்ட ஒரு ஜாதியைச் சேர்ந்தவர்கள். அவர்கள் வேதங்களைக் கற்றுக்கொண்டு இன்னும் என்ன காரியங்களைச் செய்ய பெருமாள் கட்டளையிட்டிருக்கிறாரோ அவைகளைச் செய்து கொண்டிருப்பார்கள். இந்த மாதிரி அவர்கள் கிருத, த்ரேதா, த்வாபர யுகங்கள் நடந்தபொழுது செய்து கொண்டிருந்தனர். இப்பொழுது சிலபேர்களைத் தவிர ப்ராம்மணர்களுடைய நடை, உடை ஒன்றுமில்லாமல் பெயரை மாத்திரம் வைத்துக் கொண்டு நடமாடுகிறார்கள். அதற்குக்கூட பங்கம் வரும் போலிருக்கிறது. ஏனென்றால் ராஜாங்கம் ஒருவரும் இன்ன ஜாதியைச் சேர்ந்தவரென்று சொல்லிக் கொள்ளக் கூடாது என்று கட்டளையிட்டிருக்கிறது. மேலும் சூத்ரர்கள் ப்ராம்மணர்களுடைய பெயர்களை வைத்துக் கொள்கிறார்கள். ராஜங்கம் ஜாதி என்பதையே ஒழிக்க வேண்டுமென்று மிகவும் பிரயாஸைப் பண்ணிக் கொண்டிருக்கிறது. அதற்குத் தகுந்தாற்போல் ப்ராம்மணரல்

லாதவர்கள் ப்ராம்மணர்களை எல்லா விதத்திலும் ஹிம்சிக்கிறார்கள். அவர்களும் கெட்டு விட்டார்கள். ப்ராம்மணர்களுக்கு புத்தி சாலித்தனம் மாத்திரமிருக்கிறது. அதை வைத்துக் கொண்டு எப்படியாவது காலத்தைத் தள்ளிக் கொண்டு போகிறார்கள். இதனால் வைதிக மார்க்கத்தையும் விடவேண்டிய தாயிருக்கிறது. ஸ்த்ரீகளும் காலத்திற்குத் தகுந்தாற்போல் நடந்து கொள்ளுகிறார்கள். இப்பொழுது அவர்கள் தங்கள் பதிவ்ரதா தர்மத்தையே கைபற்றுகிறது கிடையாது. நாளுக்கு நாள் அவர்கள் புருஷர்கள் மாதிரி ஆகவேண்டுமென்று நடந்து கொள்ளுகிறார்கள். அதாவது புருஷர்களுக்கு ஸமானமாகி அவர்களுடைய காரியங்களையே செய்ய முயற்சி செய்கிறார்கள். அவர்கள் சரியாக நடந்து கொள்ளாவிட்டால் வீடுவீடாக இருக்காது. அதாவது குடும்பங்கள் சரியாக நடக்காது. ஏனென்றால் க்ருஹ (வீடு) லக்ஷ்மி குடிகொண்டிருக்க மாட்டாள். இப்படி நடக்கிறதெல்லாம் கலி புருஷனுக்கு ஸந்தோஷமாகத்தானிருக்கும். ஏனென்றால் இப்பொழுது அவனுடைய ராஜ்யம் நடக்கிறது. ஆனால் பெருமாள் தன்னுடைய ஸ்ருஷ்டியெல்லாம் மேல் சொன்ன மாதிரி நடந்து கொண்டிருக்கும் பொழுது பார்த்துக் கொண்டிருக்கமாட்டார். ஆனால் அவர் எல்லாம் ரொம்பவும் கெட்டுப்போன பிறகு தான், தான் ரக்ஷை (ரக்ஷணம்) செய்ய வருவேனென்று சொல்லியிருக்கிறார். ஆகையால் எல்லோரும் பெருமாளையே வந்து எல்லாரையும் ரக்ஷிக்கும்படி ப்ரார்த்திக்க வேண்டும். அப்படிப் பண்ணினால் கண்டிப்பாகப் பெருமாள் எல்லோரையும் ரக்ஷிப்பார்.

# பக்தர்கள்

'பக்த வத்ஸலன்' என்று பெருமாளுக்கு ஒரு பெயரிடப்பட்டிருக்கிறது ஜனங்களால். அவரும் அந்த நாமாவை வைத்துக்கொண்டு நம் தென்னிந் தியாவில் திருக்கண்ணமங்கை, திருநின்றவூர் என்ற இரண்டு பிரதேசங்களில் (ஊர்களில்) கோயில் கொண்டிருக்கிறார். அந்த நாமாவின் அர்த்த மென்ன வென்றால், அடியாருக்கு ப்ரியமாயிருப்ப வர், அதாவது பக்தர்களுக்கு உதவி செய்பவர். மேலே சொன்ன திருக்கண்ணமங்கை என்ற ஊரின் ஸ்தல (பிரதேசம்) புராணத்தில் அங்கே கோயில் கொண்ட பெருமாளைப் பற்றிச் சொல்லப்பட்ட ஐதி கம் (கேள்வி வாக்கு) பின்வருமாறு :—

ஸ்ரீ மஹாலக்ஷ்மி அந்த ஊரின் ஸமீபத்திலிருக் கிற வனத்தில்தான் பெருமாளை பர்த்தாவாக அடைய வேண்டுமென்று தபஸ் பண்ணியதாகவும், பெருமாளும் அவளைக் கல்யாணம் பண்ணிக்கொள்வ தற்கு அங்கே வந்து அவளைக் கல்யாணம் பண்ணிக் கொண்டாராம். அந்த ஊரில் இன்னமொரு விசே ஷம் நடந்ததாம். ப்ரம்மாவிடமிருந்து வேதத்தை து கைடபர் என்ற பெயருள்ள ராக்ஷஸர்கள் அப த்துக் கொண்டு போனபொழுது ப்ரம்மா பெரு ளை வைகுண்டத்திற்குப் போய் பார்க்க முடியாத ல் (பெருமாள் அந்த ஸமயத்தில் வைகுண்டத் இல்லையாம்). இந்த ஊருக்கு வந்து பெருமாளைக் த்து தபஸ் செய்தாராம். பிரமனிடம் வாத்ஸல்யம் ண்டமை பற்றி பக்த வத்ஸலனென்ற திருநாமம்

விளங்குகிறது (பெருமாளுக்கு).

வருணனுக்கும், மார்க்கண்டேயருக்கும் ப்ரத்யக்ஷம் பெருமாள் (அவர்கள் கோரிக்கைப்படிக்கு அங்கு பொருள் ஸேவை ஸாதிக்கிறார்). அதாவது அந்த ஊரில் பெருமாள் பக்தர்களான ஸ்ரீ மஹாலக்ஷ்மி, ப்ரம்மா, வருணன், மார்க்கண்டேயர் முதலியோருக்கு ஸேவை ஸாதித்துக் கொண்டிருக்கிறார். இந்த திருக்கண்ணமங்கை என்று பெயருள்ள க்ஷேத்ரம் (பெருமாள் வசிக்குமிடம்) கும்பகோணம்-திருவாரூர் ரெயில் பாதையில் திருவாரூருக்கு 4 மைல் தூரத்தில் இருக்கிறது.

திரு நின்றவூர் (அங்கே பெருமாள் நின்று கொண்டு ஸேவை ஸாதிக்கிறார்). மதராஸ்-திருவள்ளூர் ரயில் பாதையில் நடுவிலிருக்கிற தின்னனூர் என்ற ஊருக்கு ஒரு மையிலுக்குள்ளான தூரத்திலிருக்கிறது. இந்த ஊர் முன்னால் பெரிய பட்டணமாயிருந்ததாம். இப்பொழுது ஒரு சின்ன ஊராகயிருக்கிறது. ஆனாலும் பெருமாள் அங்கே இன்னமும் கோயில் கொண்டிருப்பதால் அதை ஒரு திவ்ய க்ஷேத்திரமென்றுதான் சொல்லவேண்டும். இந்த ஊரில் வருணனுக்கு (பெருமாள்) ப்ரயத்க்ஷமாம். அதாவது அவனுக்கு அவன் கோரியபடி ஸேவை ஸாதிக்கிறாராம்.

மேலே சொல்லியிருக்கிற ஸ்ரீ மஹாலக்ஷ்மி, ப்ரம்மா, மார்க்கண்டேயர் வருணன் முதலியவர்கள் பெருமாளுடைய அம்சம் பெற்றவர்களாதலால் ஸொந்தமாகி விட்டார்கள் (அவர்கள் பெருமாளிடத்தில் தான் பக்தி பண்ணுவார்கள்). ஆகையால்

அவர்களைப் போலிருப்பவர்களை பக்த கோடியில் சேர்க்கக்கூடாது. அவர்களைப் போலில்லாமல் லோகத்திலிருக்கிற சில முக்யமானவர்களைப்பற்றி இப்பொழுது பேசுவோம். பக்தன் என்ற பதத்திற்கு ப்ரீதி யுள்ளவனென்று அர்த்தமர்கும். அந்த ப்ரீதி உடைத்தாயிருப்பது பெருமாளிடத்தில் தான், மற்றவர்களிடம் இல்லாமல் இருக்க வேண்டும். ஆனல் லோகத்தில் யாரிடத்தில் பக்தி பண்ணினாலும் அவருடைய பக்தனவன் என்று சொல்லப்படுகிறான். நாம் பெருமாள் எப்படி இந்த விஷயத்தில் செய்கிறாரோ அதைத்தான் கை பிடிக்க வேண்டும். பெருமாள் என்ன செய்கிறாரென்றால் சில பேர்களுக்கு மஹா பக்தனென்று பெயரிடுகிறார். அடியேனுடைய ஆசாரியார் "பெருமாள் அடியேனுக்கு மஹாபக்தன் என்ற பெயரைக் கொடுத்திருக்கிறார் என்று சொல்லி இந்த மாதிரி செய்வது மிகவும் அபூர்வமென்று ஸாதித்திருக்கிறார்." அடியேனுடைய ஆசார்யார் இன்னமொரு விஷயத்தை அடியேனுக்குச் சொல்லியிருக்கிறார். அது என்னவென்றால் "பெருமாள் சொன்னார் மஹா பக்தன் (அடியேன்) ஒன்பது பாகவாதர்களில் ஒருவன், நானும் அப்படியே" அதாவது ஒம்பது பேர்கள் பாகவத பட்டத்தை உடைத்தாயிருக்கிறார்கள். பெருமாளும் அடியேனும் அவர்களில் சேர்ந்தவர்கள். இதிலிருந்து என்ன தெரிந்து கொள்ளலாமென்றால், மஹாபக்தன், பாகவதன், பக்தன் என்ற மூன்று விதமாகப் பெருமாளிடத்தில் பக்தி பண்ணுகிறவர்கள் பிரிக்கப்படுகிறார்கள். மஹா பக்தனென்று சொல்லப்படுகிறவர்களும், பாகவதன்

என்று சொல்லப்படுகிறவர்களும் பெருமாளாலேயே அப்படிச் செய்யப்பட்டவர்களாகையால் அவர்களைப் பெருமாள் அம்சம் உடையவர்களென்று கருதவேண்டும். இப்பொழுது மற்ற சில பக்தர்களைப்பற்றிப் பேசுவோம்.

'குசேலர் தான் பக்தர்களுக்குள் சிரேஷ்டமானவர்' என்று அடியேனுடைய ஆசார்யர் அடியேனுக்கு அருளியிருக்கிறுர். அவருடைய சரித்திரம் பின்வருமாறு:—ப்ரம்ம வித்துக்களில் சிறந்தவரும், சப்தாதி விஷயங்களில் விருப்பமற்றவரும், மன அடக்கமுடையவரும், ஜிதேந்த்ரியரும், தெய்வாதீனமாய் கிடைத்த அன்னுதிகளைக் கொண்டு ஜீவிப்பவரும், ஸ்ரீ கிருஷ்ணனுடைய நண்பனும் ஆகிய ஒரு அந்தணர் (ப்ராமணர்). குசேலரென்னும் பெயருடைய அவ்வந்தணருடைய பார்யை தெய்வாதீனமாய்க் கிடைத்ததை கணவனுக்குப் பரிமாறி பசியினுல் இளைத்து அவரைப் போலவே இந்த்ரியங்களை அடக்கியாளுந் திறமையுடையவளும், பதிவ்ரதையுமாயிருந்தாள். அவள் தாரித்ரயத்திறைல் வருந்தி நடுக்கமுற்று அருகே வந்து ஒருகால் வாடியுலர்ந்த முகத்துடன் தன் கணவனை அவ்வந்தணரைக் குறித்து இங்ஙனம் மொழிந்தாள்:—

"ஓ ப்ராம்மணரே, மஹானுபாவனும் ஸ்ரீ மஹாலக்ஷ்மிக்கு வல்லபனுமாகிய ஸ்ரீ கிருஷ்ணன் உமக்கு நண்பன். ப்ராஹ்மண விச்வாஸமுடையவன், அவர்களுக்கு வேண்டியவையெல்லாம் நிறைவேற்றிக் கொடுக்குந்தன்மையன். நீர் போன மாத்திரத்தில்

உம்முடைய அபிப்ராயத்தை அறிந்து நிறைவேற்ற வல்லவன். ஸாதுக்களான உம்மைப்போன்ற பெரியோர்களுக்கு பரமகதியாயிருப்பவன். ஆகையால் அவனிடம் செல்வீராக. பெருங்குடும்பியும், ஏழ்மையினால் வருந்துகின்றவருமாகிய உமக்கு அம்மாஹானுபாவன் அளவற்ற பணம் கொடுப்பான். அவன் இப்பொழுது போஜர்கள், வ்ருஷ்ணிகள், அந்தகர்கள் இவர்களைப் பாதுகாத்துக் கொண்டு த்வாரகாபுரியில் இருக்கின்றான்."

மிருது ஸ்வபாவமுடைய அவ்வந்தணர் இங்ஙனம் பார்யையால் வேண்டப்பெற்று உத்தம ஸ்லோகனுடைய தர்சனம் நேருமாயின் இது நமக்கு பெரிய கார்யமல்லவா என்று மனதில் சிந்தித்துக் கொண்டு, தன் பார்யையிடத்திலிருந்து கொஞ்சம் உபஹாரம் வாங்கிக்கொண்டு, ஸ்ரீ க்ருஷ்ணனுடைய காட்சி எனக்கு எப்படி நேருமென்று சிந்தித்துக் கொண்டு, த்வாரகைக்குச் சென்று ஸ்ரீ க்ருஷ்ணனுடைய க்ருஹத்திற்குள் நுழைந்தார். படுக்கையில் வீற்றிருந்த ஸ்ரீ க்ருஷ்ணன் தூரத்திலேயே அவ்வந்தணரைக் கண்டு படுக்கையினின்று விரைந்தெழுந்து ஸந்தோஷத்துடன் அவ்வந்தணரை இரு புஜங்களாலும் அணைத்துக்கொண்டான். அப்பால் அவரை மஞ்சத்தில் உட்காரவைத்து அவருக்கு தானே உபஹாரம் கொண்டு வந்து ஸமர்ப்பித்து அவருடைய பாதங்களை அலம்பி, அந்த ஜலத்தைத் தன் தலையில் தரித்து, இன்னம் மற்ற உபசாரங்களையும் செய்தான். பிறகு ஒருவருக்கொருவர் கையை பிடித்துக்கொண்டு தாங்கள்

முன்பு குருகுலத்தில் வஸிக்கும்பொழுது நடந்த அழகான கதைகளைப் பேசிக் கொண்டிருக்கும் பொழுது ஸ்ரீ க்ருஷ்ணன் அவர் கொண்டுவந்த உபஹாரத்தை (அவல்) அவரிடமிருந்து பிடுங்கி அதிலிருந்து ஒரு பிடியைச் சாப்பிட்டு, இன்னமொரு பிடி சாப்பிடப்போகும் பொழுது தன் பார்யை ருக்மணியால் தடுக்கப்பட்டு (அந்தப் பிடி அவலைச் சாப்பிட்டால் ருக்மணியும் அவருடன் செல்ல வேண்டியிருக்கும்), அவ்வந்தணர் ஸ்ரீ க்ருஷ்ணனுடைய திருமாளிகையில் அன்றிரவு தங்கிவிட்டு, மறுநாள் காலையில் ஸ்ரீ க்ருஷ்ணனிடம் அனுமதி பெற்றுக்கொண்டு, ஸ்ரீ க்ருஷணனல் கொஞ்சதூரம் வழி தொடரப்பட்டு, தன் க்ருஹத்திற்கு திரும்பி வரும்பொழுது வழியில் தன்னிடத்தில் ஸ்ரீ க்ருஷ்ணன் ஒன்றும் கொடுக்காததைப்பற்றி 'பணமில்லாமையால் இப்பொழுது என்னையே நினைத்துக்கொண்டு சாந்தனயிருக்கிற இவன் பணத்தைப் பெற்றல் மிகவும் மதித்து என்னை நினைக்கவே மாட்டான் என்று எண்ணி பகவான் தனக்கு ஒன்றும் கொடுக்க வில்லையோ" என்று சிந்தித்துக்கொண்டே தன் க்ருஹத்து அருகே போய் அதைப் பார்த்தபொழுது 'இதென்ன இது யாருடைய இடம்? என்னுடையதே ஆயின் அது எங்கனம் இத்தகையதாயிற்று? என்று சிந்தித்துக் கொண்டிருக்கையில் புருஷர்களும் ஸ்த்ரிகளும் அவரை ஸங்கீதத்தோடும் வாத்யங்களோடும் எதிர் கொண்டார்கள். அவருடைய பார்யை நகைகளெல்லாம் போட்டுக்கொண்டு தாதிகளால் சூழப்பட்டு அவரை க்ருஹத்திற்குள்

வரும்படி அழைத்தாள். உடனே அந்த தம்பதிகள் ரத்னமயமான ஸ்தம்பங்களின் ஸமூஹங்களோடு கூடின தேவேந்தரபவனம் போன்ற அவர்களுடைய க்ருஹத்திற்குள் நுழைந்தார்கள். அதன்பிறகு எல்லாவற்றையும் பார்த்து விட்டு 'ஒரு காரணமுமில்லாமல் இந்த ஸ்திதி தமக்கு எப்படி நேரிட்டது' என்று சிந்தித்தார். மீளவும் 'பாக்யமற்றவனும் ஸர்வ காலமும் தரித்ரனுமாயிருக்கிற எனக்கு இந்த ஸம்பத்து நேரிட்டதற்குக் காரணம் உபயவிபூதி நாயகனும், யாதவ ச்ரேஷ்டனுமாகிய ஸ்ரீ க்ருஷ்ண தர்சனமே ஒழிய மற்றொன்றும் காரணமாக அமையாது. அந்த மஹானுபாவனே எனது ஜன்மந்தோறும் ஹித முறைக்கும், ஸுஹ்ருத்தும், ப்ரீதிக்கிடமான நண்பனும், ஆபத்துக்களில் பாதுகாக்கிற மித்ரனுமாவனாக. அவனுக்கே நான் ஜன்மங்கள் தோறும் தாஸனாயிருப்பேனாக. என்று இவ்விதம் அந்த அந்தணர் சிந்தித்துக்கொண்டு முன்போலவே தன் வர்ணாச்ரம தர்மங்களை அனுஷ்டித்துக் கொண்டுவந்து பிறகு நித்ய முக்தர்களுக்கு ஸ்தானமான வைகுண்ட லோகத்தை அடைந்தார்.

மேலே சொன்ன சரித்திரம் விரிவுக்கு பயந்து கொஞ்சமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனபோதிலும் இதுவே நமக்குப் போதுமானது. இந்த மாதிரி நடப்பது யாராலும் முடியாது. அவருக்கும் பெருமாள் உதவியால் தான் நடக்க முடிந்திருக்கும். இவரை அடியேன் ஆசார்ய பக்தி ச்ரேஷ்டன் என்று சொன்னது சரியாகப் பொருந்தும் என்று எடுத்துக்கொள்ள வேண்டும்.

அடுத்தபடியாக பகவத் பக்தனை ப்ரஹ்லாதனைப்பற்றி கவனிப்போம். இவன் தைத்ய (ராக்ஷஸர்கள்) குலத்தில் பிறந்திருந்தாலும், பெருமாளிடத்தில் அதுவும் அவன் தாயார் வயிற்றிலிருக்கும் பொழுதிலிருந்து அவனுக்கு நாரதர் உபதேசித்தைதக் கேட்டு பக்திபண்ண ஆரம்பித்தான். இப்படி பண்ணியது மிகவும் விசேஷம். ஏனென்றால் வேறே ஒரு பக்தரும் இந்த மாதிரி செய்ததாகத் தெரியவில்லை. ஆனால் அவன் ஆயுஸ் நடுவில் பெருமாளிடத்திலேயே பக்தி பண்ண முடியாமல் போய் அவருடன் சண்டையும்போடும்படியாயிற்று. அது அவன் பாகவதாபசாரப்பட்டதனால் அப்படியாயிற்று. அந்த அபசாரம்: அவன் அரசு புரிந்துகொண்டு இருக்கும் பொழுது ஒரு பாகவதர் அவனிடம் வந்தபொழுது அவரை ஒன்றும் உபசரிக்காமலிருந்து விட்டான். அதனால் அவர் உனக்குப் பெருமாளால் இந்தப் பதவி (அரசு புரிவது) வந்தது. ஆகையால் அவர் பேரிலே உனக்கு விரோதம் ஏற்படட்டும் என்று சாபம் கொடுத்துவிட்டுப் போய்விட்டார்.

இந்தச் சாபம் கழிந்த பிறகு அவன் முன்போல் பெருமாளிடத்தில் பக்தி பண்ணிக் கொண்டிருந்து பின் நல்ல கதியை அடைந்தான். ஆகையால் ப்ரஹ்லாதனுடைய பக்தி ஒருவித மல்லவா?

இன்னமொரு விதமான பக்தியை சிரஞ்சீவியான ஸ்ரீராம பக்தனை ஹனுமானுடைய சரித்திரத்தால் தெரிந்து கொள்ளலாம். அவர் சரித்திரம் பின்வருமாறு:-

"புஞ்சிகஸ்தலே யென்னும் அப்ஸரஸ் சாபத்தால் அஞ்சனையென்னும் வானர ஸ்த்ரீயாகிக் கேசரி என்பவனை மணந்திருந்தாள். ஒருநாள் வாயு இவளது நிஜவுருக்கண்டு மோகிக்க அவனது அம்சத்தால் பிறந்தவன் ஹநுமான். இவன் பிறந்து வருகையில் சூரியனை இராகு பற்ற அவனை பழமென்று கண்டு கவரப் போகையில் இந்திரன் தன் வஜ்ராயுதத்தால் அடிக்க அநு (தாடை) முறியப்பட்டவன். இதைப் பார்த்து வாயு கோபித்து ஸ்தம்பித்திருக்க பிரமன் முதலிய தேவர் வந்து அநு முறிந்ததால் அநுமான் எனப் பெயரிட்டு பிரம்மாத்திரத்தாலும் தேவேந்திராத்திரத்தாலும் சாவில்லா வரந்தந்தனர். இவன் சுக்ரீவன் என்னும் வானரத் தலைவனுக்கு நண்பனாய்த் திரிந்து கொண்டு இருந்து இருடிகள் ஆச்ரமத்திற்குச் சென்று அவர்களுக்கு மனவருத்தத்தைத் தரும் காரியத்தைச் செய்து கொண்டிருந்தான். இதனால் இருடிகள் கோபித்து உனக்கு உன்னை புகழுங்கால் தவிர மற்றக் காலங்களில் இராமன் உன்னைக் காணுமளவும் உன் பலம் தோன்றாதிருக்க வெனச் சபித்தனர். இவ்வாறு தன் பலம் தோன்றாது திரிந்து கொண்டிருக்கையில் இராமன் வநவாசம் வந்த காலத்து மரத்தின் மீதிருந்து இராம லக்குமணரைக் கண்டு தந்தை சொற்படி திருமாலவதாரமெனத் தேறி பிராமண உருக்கொண்டு வந்து பணிந்தனன்". அதன் பிறகு ராம சகவாசம் ஏற்பட்டு பெரிய ராமபக்தனாயினன். (அவனுடைய மீதி சரித்திரத்தை ஸ்ரீமத் ராமாயணம் மஹாபாரதம் முதலிய கிரந்தங்களிலிருந்து தெரிந்து கொள்ளலாம்). அதாவது ஸ்ரீராமனை தர்சித்த பிறகு

தான் அவன் பக்தனாயினனென்று கொள்ள வேண்டும். அதாவது ப்ரஹ்லாதனைப்போல் பிறவி (ஆரம்பம்) முதல் பக்தனாக ஆகவில்லை அவன். அதுவும் ஸ்ரீராமர் ஒருவரிடத்தில் தான் பக்தி பண்ணிக் கொண்டிருக்கிறான். சிரஞ்சீவி பட்டம் வாங்கிக் கொண்டு ஸ்ரீராமரை ஸதா காலமும் பஜித்துக் கொண்டு லோகத்தில் ஸஞ்சரித்துக் கொண்டிருக்கிறான் இப்பொழுது.

கட்வாங்க மஹாராஜா ஒரு காலத்து தேவாசுர யுத்தத்தில் தேவர்களுக்கு உதவி புரிந்தனன். தேவர்கள் உனக்கு என்ன வேண்டுமென்று கேட்க அரசன் எனக்கு ஆயுள் என்ன என்று கேட்டனன். தேவர் உனக்கு ஒரு முகூர்த்தமே இன்னம் யென, அவன் உண்மைப்பொருளை நாடி முக்தியடைந்தனன். அதாவது ஒரு முகூர்த்தம் (48 நிமிஷங்கள்) பக்தி பண்ணி நல்ல கதியடைந்தான்.

மேலே சொல்லியிருக்கிறவர்கள் பெருமாளிடத்தில் பண்ணின பக்தி மார்க்கங்கள் வெவ்வேறு விதமாய் இருக்கிறதல்லவா? அதெல்லாம் பெருமாளுடைய காரியம். அவருடைய விளையாட்டிற்கு எப்படி பண்ணினால் ரஸிக்குமோ அப்படிச் செய்து கொள்வார்.

# கோவில்கள்

கோவில், திருமலை, பெருமாள் கோவில் என்றவைகள் வைஷ்ணவர்களுக்கு மிகவும் முக்யமானவைகளென்று சொல்லப்படுகின்றன. கோவில் என்றது ஸ்ரீரங்கத்திலிருக்கிற ஸ்ரீரங்கநாதர் கோவிலைக் குறிக்கும். திருமலை, திருப்பதி ஸ்ரீநிவாஸன் கோவிலையும், பெருமாள் கோவில் காஞ்சிபுரத்திலுள்ள ஸ்ரீ வரதராஜ பெருமாள் கோவிலையும் குறிக்கும். இவைகளுடன் கும்பகோணத்தில் கோயில் கொண்டிருக்கிற ஸ்ரீ ஆரவாமுதனையும் (ஸ்ரீ சாரங்கபாணி ஸ்வாமி) சேர்க்கலாம். கோவிலைப் பற்றி முன்பே எழுதியிருக்கிறபடியால் அதற்கு அடுத்தபடியான திருமலையைப் பற்றி இப்பொழுது பேசுவோம்.

திருமலையை திருவேங்கடம் (பாவத்தை போக்கும்) திருப்பதி என்று சொல்லுகிறார்கள் ஜனங்கள். அதில் கோவில் கொண்டிருக்கிற பெருமாளை ஸ்ரீநிவாஸன், திருவேங்கடமுடையான், வெங்கடரமணன், ஏழுமலையான், பாலாஜி இன்னம் அனேக பெயர்களால் ஜனங்கள் அழைக்கிறார்கள். அந்தப் பெருமாளை "கலௌ வெங்கடேச:", அதாவது இப்பொழுது நடக்கிற கலியுகத்தில் வெங்கடேசப் பெருமாள் (ஸ்ரீநிவாஸன்) தான் ப்ரத்யக்ஷமான தெய்வம். அதாவது எல்லாருக்கும் ப்ரத்யக்ஷமாக (கண்ணால் காணும்படி) இருந்து எல்லோரையும் (அவரை அண்டினவர்கள்) ரக்ஷிக்கிறார். அவர் மிக வரப்ரஸாதி. அதனால் இந்தியாவிலுள்ள எல்லா பாகங்களிலிருந்தும் எல்லா மதஸ்தர்களும் அநேக ஆயிரக்கணக்

காக வந்து பெருமாளை ஸேவித்து விட்டுப் போகிறார்கள். இது மாத்ரமல்லாமல் பெருமாளுக்கு ஸமர்ப்பிக்க எவைகள் ப்ரார்திக்கப்பட்டனவோ அவைகளை கோவிலில் இதற்காக வைத்திருக்கிற உண்டியில் சேர்த்துவிட்டுப் போகிறார்கள். இது அவரவர்கள் செய்கிற கார்யம் பெருமாள் தனக்கு அனுகூலம் பண்ணியதற்கு. ஆனால் இதைப் பெருமாள் பேரில் "எல்லோரிடத்திலிருந்தும் கரந்து வாங்கிவிடுகிறார்" என்று பழி போடுகிறார்கள். இதை ஸரி என்று எப்படி எடுத்துக் கொள்வது? பெருமாள் ஒருவரையும் ஒன்றும் செய்யச் சொல்வதில்லை. எல்லோரும் அவரவர்கள் இச்சைபடிச் செய்கிறார்கள். அதனால் உண்டியில் மிகதனம் சேர்ந்து கோவிலுக்கு ஏராளமான வரும்படி என்று சொல்லப்படுகிறது.

இந்தக் கோவிலில் பெருமாள் நின்ற திருக்கோலத்துடன் ஸேவை ஸாதிக்கிறார். தாயார் (அலர்மேல் மங்கை) பெருமாளுடனில்லாமல் திருமலையடிவாரத்திலிருந்து சுமார் 7 மைல் தூரத்திலுள்ள திருச்சானூர் என்ற ஊரில் கோவில் கொண்டிருக்கிறாள். இதைப் பார்த்து ஜனங்கள் அவள் ஏதோ ஒரு காரணத்தால் பெருமாளுடன் கோபித்துக் கொண்டு அந்த ஊருக்கு வந்து தனிக் கோவிலில் இருக்கிறாள் என்று சொல்லுகிறார்கள். இது ஸரியல்ல. அவளுக்கு கோபமென்பதே கிடையாது. அதுவும் பெருமாளுடன் போய் கோபித்துக் கொள்ளுவாளா? ஒருக்காலும் அப்படி செய்யமாட்டாள். ஆகையால் ஜனங்கள் சொல்வது அவளிடம் அப

சாரம் செய்ததாக ஆகும். அவள் பெருமாளை விட்டு வந்தது ஒரு காரணத்தால் என்று அடியேனுடைய ஆசாரியார் மொழிந்திருக்கிறார். அது என்ன வென்றால்: அவள் ஜனங்களெல்லாம் கஷ்டப்படு வதைப் பார்த்து மனது தாங்காமல் அவர்களைக் காப்பாற்றுவதற்காக அந்த ஊருக்கு வந்தாளாம். அதைப் பார்த்து பெருமாளும் ஜனங்களை ரக்ஷிப்ப தற்காக வைகுண்டத்திலிருந்து தாயாரிருக்கிற இடத்திற்கு வரும்பொழுது வழியில் மலையிலேயே ஏதோ காரணத்தால் இருக்கவேண்டியதாய்ப் போயிற்று. அதனால் அவர் திருமலையில் கோவில் கொண்டிருக்கிறார். அவர் ஜனங்களில் எவ்வளவு பேர்களைக் காப்பாற்றுகிறார் என்றது அவரை ஸேவித்துப் போகிறவர்களுடைய ஸங்க்யையைப் (கணக்கு) பார்த்தால் தெரியும். ஜனங்கள் ஏராள மாக வந்து பெருமாளை ஸேவித்து விட்டுப் போகிறார் கள். இது இன்றைக்கும் நடக்கிறது. அந்தக் கோவிலில் 'ஆலயப்ரவேசம்' பெரிய கோவில் களில் போல ஆகிக்கொண்டே பெருமாளிடம் அபசாரம் நடக்கிறது. அந்த மாதிரி நடப்பது பெருமாள் ஸாந்நித்யத்திற்கு (இருப்புக்கு) விரோத மாக யிருக்குமென்று நம் சாஸ்திரங்களில் சொல்லி யிருக்கிறபடியால் பெருமாள் மூர்த்திகரமேயில்லா மல் இருப்பார் (பெருமாள் அங்கேயில்லை என் றர்த்தம்). மேலே சொன்னதைப் பார்த்து ஒரு பெரியவர் இப்பொழுது பெருமாளுக்கு மூர்த்தி கரம் முழுமையுமில்லாமல் பாதி தானிருக்கிற தென்று சொல்லியிருக்கிறார். அவருடைய உருவம் கூட வரவரக் குறைந்து வந்துக் கொண்டிருக்கிற

தென்று ஒருவர் சொல்ல அடியேன் கேட்டிருக்கிறேன். இவைகளெல்லாவற்றையும் பார்த்தால் மனதுக்கு வருத்தந்தான் உண்டாகிறது. ஆனல் இவைகளெல்லாம் பெருமாள்தான் ஏதோ ஒரு காரணத்தை வைத்துக்கொண்டு செய்கிருர் என்று எடுத்துக்கொள்ள வேண்டும்.

காஞ்சீபுரத்தில் நிரைய கோவில்களிருப்பதால் அந்த ஊரை பெரிய க்ஷேத்திரமென்று சொல்ல வேண்டும். கோவில்கள் விஷ்ணு கோவிலாகவும் சிவன் கோவிலாகவும் விளங்குகின்றன. முன்னுல் அங்கே ஜைனர்கள் கோவில்களும் இருந்ததாகக் கேள்வி. விஷ்ணு கோவில்களில் ப்ரபலமானது ஸ்ரீ வரதராஜப் பெருமாள் கோவில். திருப்பதி ஸ்ரீநிவாஸனை சுப்ரமண்ய ஸ்வாமி என்று சந்தேகித்தாற்போல், வரதராஜப் பெருமாளையும் சுப்ரமண்ய ஸ்வாமி என்று சைவர்கள் ஸந்தேகிக்கிருர்கள். இதைப்பற்றி நாம் இப்பொழுது சர்ச்சை பண்ணவேண்டியதில்லை. ஏனென்ருல் மேலே சொன்ன இரண்டு பெருமாள்களும், இப்பொழுது மாற்ற மடையாமல், அதாவது சுப்ரமண்ய ஸ்வாமியாக இல்லாமல் விளங்குகிருர்கள்.

இந்தக் கோவிலில் வரதராஜப் பெருமாள் மேற்கே திருமுகமண்டலத்தோடு நின்ற திருக்கோலத்தோடு ஸேவை ஸாதிக்கிருர். பெருந்தேவித் தாயார் கோவிலுக்குள்ளேயே தனிக் கோவில் கொண்டிருக்கிருள். பிருகு மஹரிஷிக்கும், நாரதருக்கும், திருவநந்தாழ்வானுக்கும் (ஆதிசேஷன்),

கஜேந்தராழ்வானுக்கும் (கஜேந்திரன்), ப்ரம்மாவுக்கும் பெருமாள் ப்ரத்யக்ஷம்.

அழகிய சிங்கப்பெருமாளும் அரித்ரா தேவியாருடன் வீற்றிருந்த திருக்கோலத்துடன் ப்ருஹஸ்பதிக்குப் ப்ரயத்க்ஷமாய், இந்தக் கோவிலில் ஸேவை ஸாதிக்கிருர். இவர் இருக்கிற ஸந்நிதியின் மேல் மாடியில் தான் வரதராஜப் பெருமாள் குடி கொண்டிருக்கிருர்.

வரதராஜருடைய ப்ரம்மோத்ஸவம் வெகு விமர்சையாக நடக்கும். அதில் கருட ஸேவை (கருட வாகனத்தில் பெருமாள் ஏளுவது) மிகவும் விசேஷமானது. இந்தக் உத்ஸவத்தை (க்ருட ஸேவை) ஸேவிப்பதற்கு மாத்ரமே வெகு ஜனங்கள் வருவார்கள். அத்துடன் ஸ்ரீ வைஷ்ணவ ப்ராம்மணர்கள் பெருமாளுக்கு முன்னுலும் பின்னுலும் கோஷ்டியாக இருந்துகொண்டு ப்ரபந்த, வேத பாராயணம் பண்ணுவார்கள். அந்தக் காக்ஷி பார்ப்பதற்கு மிக ஸந்தோஷகரமாயிருக்கும். அப்பேர்பட்ட ஸந்நிதி இப்பொழுது என்னவிதமாக இருக்கிறது தெரியுமா? துர்தசையில் தானிருக்கிறதென்று சொல்லவேண்டும். மற்றகோவில்களைப் போல் இதுவும் அரசாங்கத்தின் வசத்தில் வந்து பெருமாளிடம் "ஆலயப்ரவேசம்" போன்ற அபசாரங்கள் ஏற்பட்டு விட்டன. அதனுல் இந்தக் கோவிலில் பெருமாள் ஸாந்நித்யம் பண்ணுகிருராவென்று ஸந்தேகப்பட வேண்டியதாயிருக்கிறது. மேலே சொன்ன ப்ராம்மணர்களை த்ரவ்யம் கொடுத்து உத்ஸவத்திற்கு வரவழைக்க வேண்டியதாயிருக்கிறது.

கும்பகோணம் என்ற ஊரிலும் காஞ்சிபுரத்தில் போல் அநேக விஷ்ணு சிவன் கோவில்கள் நிறைந்திருக்கின்றன. அத்துடன் காவேரி நதியும் ஊருக்குப் பக்கத்தில் வந்து பெருமாளை ஸேவிக்கிறாள். இன்னொரு விசேஷம் இந்த ஊரில் நடக்கிறது. அது என்னவென்றால்: "மாமாங்கக் குளம்" என்ற பெயருடன் ஒரு குளமிருக்கிறது. பன்னிரண்டு வருடங்களுக்கு ஒரு தரம் மாசி மாஸத்தில் மக நக்ஷத்ரம் (அப்பொழுது மகாமகம் என்று சொல்லப்படும்) வரும்பொழுது ஒன்பது நதிகள் (கங்கை, யமுனை, நர்மதா, ஸரஸ்வதி, கோதாவரி, காவேரி, கன்யா, பயோஷ்நி, ஸரயு) தங்களுடைய பாபத்தைப் போக்கிக் கொள்வதற்கு அந்தக் குளத்திற்கு வந்து ஸ்நாநம் செய்கிறார்களாம். அதனால் அந்தக் குளத்தில் அப்பொழுது ஸ்நாநம் செய்பவர்களுக்கு மேலே சொல்லியிருக்கிற ஒன்பது நதிகளில் ஸ்நாநம் செய்த புண்யபலன் கிடைக்குமென்று சொல்லப்படுகிறதனால் ஜனங்கள் ஏராளமாக அந்த ஸமயத்தில் வந்து அந்தக் குளத்தில் ஸ்நாநம் பண்ணி விட்டுப் போகிறார்கள்.

சாரங்கபாணி பெருமாளென்றும் ஆராவமுதனென்றும் அழைக்கப்பட்டு, கிழக்கே திருமுகமண்டலம், "உத்யோக சயநம் (இரண்டு கைகளுடன் தான்), ஹேமரிஷிக்கு ப்ரத்யக்ஷம், முதலிய ப்ரபாவத்தோடு இருப்பவர் இந்த ஊர் (கும்பகோணம்) பெருமாள்களில் முக்யமானவராக ஸேவை ஸாதிக்கிறார். உத்ஸவர் நான்கு கைகளுடன், ஒரு கையில் சார்ங்கத்தை (வில்) வைத்துக் கொண்டு ஸேவை

ஸாதிக்கிறார். தாயாரும் (கோமளவல்லித்தாயார்) பெருமாள் ஸந்நிதி பக்கத்தில் தனி ஸந்நிதியில் இருக்கிறாள்.

இந்த ஊரில் (கும்பகோணம்) அநேக கோவில்களும் தீர்த்தங்களும் நதிகளுமிருப்பதால் பெரிய க்ஷேத்ரமென்று கருதப்படுகிறது. ஆனால் இப்பொழுது இந்த க்ஷேத்ரமும் மற்ற க்ஷேத்ரங்கள் போல் துர்தசையை அடைந்திருக்கிறதென்று தான் சொல்ல வேண்டும். அதாவது. அதற்கிருந்த வைபவமெல்லாம் போயிருக்கும் ஜனங்கள் அதற்கு அபசாரம் பண்ணுவதால்.

தென்னிந்தியாவில் இன்னம் அநேக பெரிய கோவில்கள் மேலே சொன்ன பெருமாள் ஸாந்நித்ய மற்ற கோவில்கள் மாதிரி, இருக்கின்றன. அதைப் பற்றி பேசுவதில் ப்ரயோஜனமில்லை. ஆனால் பெருமாள் ஏதோ காரணத்தைப் பற்றி தான் இந்த மாதிரி கோவில்களைச் செய்திருக்க வேண்டும். அதுவும் ஜனங்களுக்கு நல்லது செய்வதற்குத்தானிருக்க வேண்டும். அவரும் வேறு வழி ஏதாவது செய்வார். ஆகையால் நாமெல்லாரும் அதை எதிர் பார்த்துக் கொண்டு பெருமாளையும் ப்ரார்த்தித்துக் கொண்டிருக்கவேண்டும். இப்பொழுது.

# பெருமாளின் தீர்த்தாவதாரமும் வனவதாரமும்

பெருமாள் புருஷாதிரூப அவதாரங்களைத் தவிர வேறு அவதாரங்களும் எடுத்திருக்கிறார். அவைகளில் புஷ்கரத்தையும் நிம்சாரையும் கணக்கிடலாம். புஷ்கரம் என்று ஒரு தடாகம் (குளம்) வட இந்தியாவில் புஷ்கர் என்ற ஊரிலிருக்கிறது. அதைப் பெருமாள் தீர்த்த ரூபியாக இருக்கிறாரென்று புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆதலால் அது மிக விசேஷமாகி, அதில் ஸ்நாநம் செய்வோருக்கு புண்யபலன் கிடைக்குமென்று சொல்லப்பட்டு, வட இந்தியாவிலிருக்கிற அநேக நபர்களும் மற்றவர்களும் கார்த்திகை மாஸம் பௌர்ணமி தினம் ஸ்நாநம் செய்கிறார்கள். இந்த வருஷம் இப்பொழுது நேற்றைய முந்தின நாள் (கார்திகை மாஸம் 7-தேதி, இங்கிலீஷ் 1961 நவம்பர் மாஸம் 22-தேதி கார்திகை பௌர்ணமி ஆனதால்) சுமார் ஐந்து லக்ஷம் பேர்கள் ஸ்நாநம் செய்தார்களாம். ஆனால் இந்தத் தொகை முன் வர்ஷங்களில் ஸ்நாநம் பண்ணினவர்களின் தொகையை விடக்குறைந்ததாம். இருந்தாலும் இந்தத் தொகை அதிகமல்லவா? இதனால் இந்தியாவிலுள்ளவர்கள் மிகவும் பக்தியுள்ளவர்களென்று நான் சொல்ல வேண்டும். ஆனால் அவர்களைப்பற்றி பரிதாபப்பட வேண்டும். ஏனென்றால் அவர்கள் நினைத்தபடிக்கு புண்ய பலத்தை அடைவார்களா என்று நான் சங்கிக்க (ஸந்தேகப்பட) வேண்டியதாயிருக்கிறது. முன்

காலத்திலிருந்த மாதிரி அந்தக் குளம் இப்பொழுது மகிமையை உடைத்தாயிருக்குமா என்ற சங்கை பிறக்கிறது. ஏனென்றால் தீர்த்தரூபியான பெருமாள் மிகவும் அபசாரப்படுத்தப்பட்டு விட்டார். இதற்கு ஸந்தேகமே கிடையாது. ஏனென்றால் வட இந்தியா (இந்த இடத்தில்) முழுமையும் துலுக்கர்களுடையவும், இங்கிலீஷ்காரர்களுடையவும் வசத்திலிருந்து அவர்கள் நடமாட்டம் அங்கே இருந்து அசுத்தமாக்கப்பட்டிருக்கிறது. இருந்தாலும் இது பெருமாளுக்குத்தான் வெளிச்சம். அதாவது தெரியும். அவர் இச்சைப்படிக்கு நடக்குமென்று நாம் எடுத்துக்கொள்ள வேண்டும்.

இதற்குப் பிறகு நிம்சாரைப்பற்றி கொஞ்சம் பேசுவோம். இந்த ஊர் முன்னாளில் நைமிசாரண்யம் என்ற பெயருடனிருந்தது. அதில் பெருமாள் வனரூபியாக (அதாவது ஒரு காடாக) ஸேவை ஸாதித்துக் கொண்டிருந்ததாகவும், ரிஷிகளெல்லாரும் அங்கே வந்தும், ஸபை கூடிப் பேசுவதாலும் ஒரு பெரிய திவ்ய க்ஷேத்ரமாகி விட்டதால் அவ்விடத்தை மிதித்ததனாலேயே புண்ய பலனடையலாமென்று புராணப் பேச்சு. மேலே சொன்ன காரணத்தால் ஜனங்கள் இன்னமும் அங்கே நடமாடிவிட்டு வருகிறார்கள் புண்ய பலனை அடையலாமென்று. ஏன் அப்படி சொல்லுகிறேனென்று கேட்டால் அந்த ஊர் இப்பொழுது வனமாகவே இல்லாமல் ஸாதாரண கிராமமாயிருக்கிறது. அந்த மாதிரி இருக்கும்பொழுது அதற்கு மகிமை எப்படியிருக்கும்? இருந்தாலும் ஜனங்கள் அது பழைய பெரிய

க்ஷேத்ரமென்ற ஞாபகத்தோடு அங்கே போய்விட்டு வருகிருர்கள் ஏதாவது நல்ல பலன் அதனுல் அடையக் கூடுமானுல் வரட்டுமென்று. அதாவது இந்தியாவிலுள்ள ஜனங்கள் அவ்வளவு மூட நம்பிக்கையுள்ளவர்களாதலால் அப்படிச் செய்கிருர்கள் என்று சொல்லவேண்டும்.

பெருமாள் மேலே சொன்னவைகளை எல்லாம் கவனித்துக் கொண்டிருப்பாரகையால் அவர் ஜனங்களுக்கு ஏதாவது உதவி செய்வாரென்று எடுத்துக் கொள்ளவேண்டும்.

---

# நவதா (ஒன்பது) பக்தி

ஒவ்வொருவரும் அவருடைய ஜாதியில் பிறந் திருக்கிற ஒரு ஆசார்யரை அடைந்து அவர் மூல மாகப் பெருமாளிடத்தில் பரந்யாஸம் (சரணாகதி) பண்ணிக் கொள்ளவேண்டுமென்று அடியேனால் முன்னாலேயே எழுதப்பட்டிருக்கிறது. அந்தப்படி நடந்து கொண்டால் நல்ல கதியையும் அடையலா மென்று எழுதப்பட்டிருக்கிறது. இதனால் நல்ல கதியை அடைவதற்கு சரணாகதி மாத்ரம் பண்ணி னால் போதுமென்ற அர்த்தம் கொள்ளக் கூடாது. ஏனென்றால் நம் சாஸ்த்ரங்களில் ஒரு ப்ராம்மணன் சில கர்மங்களை அவச்யமாகச் செய்ய வேண்டு மென்று சொல்லப்பட்டிருக்கிறது. அந்தக் கர்மங் களை எல்லாரும் கட்டாயம் செய்தாக வேண்டும். அவைகளைப்பற்றி அவரவர் ஆசாரியர் அவரவ ருக்குச் சொல்லிக் கொடுப்பார். ஆசார்யர் சொல் படி எல்லாரும் நடந்து கொள்ள வேண்டும்.

பெருமாளிடத்தில் பக்தி பண்ணிக் கொண்டே யிருக்க வேண்டும், பரந்யாஸம் பண்ணிக் கொண்ட பிறகு. இது மேலே சொன்ன கர்மங்களிலொன்று. பக்தி எப்படி பண்ணுவதென்றால் ஒன்பது வித ாகப் பெருமாளிடத்தில் பக்தி பண்ணலாம் என்று ்சால்லப்பட்டிருக்கிறது. இப்பொழுது நடக்கிற ியுகத்தில் (காலத்தில்) பெருமாளையே பாபிகள் ந்து விடும்படி சாபம் கொடுக்கப்பட்டிருக்கிறது. நகமாக எல்லாரும் பாபிகளாகத்தானிருப்பார் , இப்பொழுது. அப்படியிருக்கும்பொழுது பெரு

மாளிடத்தில் எப்படி பக்தி பண்ண ஸாத்யமாகும் என்று கேட்டால், ஸாத்யமாகும் என்று பதிலளிக்கலாம். பெருமாள் தன்னிடத்தில் மாத்ரம் பக்தி பண்ணுகிறவர்களைக் காப்பாற்றுவேன் என்று ஸ்ரீபகவத் கீதையில் பேசியிருக்கிறார். ஆகையால் அவர் எப்படியாவது அவரிடத்தில் பக்தி பண்ணினவர்களைக் காப்பாற்றுவார், நாம் மாத்திரம் அவரொருவரிடத்தில் பக்தி பண்ண வேண்டும்.

ஸ்ரீமத் பாகவதத்தில் சொன்ன ஒன்பது வித பக்தி பின்வருமாறு:— ச்ரவணம், ஸ்மரணம், கீர்த்தனம், பாத ஸேவனம், அர்சனம், வந்தனம், தாஸ்யம், ஸக்யம், ஆத்ம நிவேதனம்.

1. ச்ரவணம்: காதால் கேட்கிறது. அதாவது பெருமாளுடைய கதையைச் சொல்லச் சொல்லிக் கேட்பது. இந்த விதத்தை யார் அனுசரித்தார் (உபயோகித்தார்) என்றால் பரிக்ஷித்து மஹாராஜா கீழே சொல்லியிருக்கிற மாதிரி என்று பதில் சொல்லலாம்.

அர்ஜுனனுடைய பிள்ளையான அபிமன்யுவின் பிள்ளை பரிக்ஷித்து அவன் தாயான உத்தரையின் கர்பத்திலிருக்கும் பொழுது பாண்டவர்களுடைய ஆசார்யரான த்ரோணாசார்யருடைய பிள்ளையான அச்வத்தாமாவால் கரிக்கட்டையாகச் செய்யப்பட்ட பிறகு ஸ்ரீ க்ருஷ்ணன் மறுபடியும் அவனை உயிர்ப்பித்து, தர்மபுத்ரரால் (அர்ஜுனன் தமயன்) ராஜ்ய பட்டாபிஷேகம் பண்ணப்பட்டு ஒரு நாள் காட்டிற்கு வேட்டைக்குச் சென்று, அங்கே

# நவதா (ஒன்பது) பக்தி

ஒவ்வொருவரும் அவருடைய ஜாதியில் பிறந்திருக்கிற ஒரு ஆசார்யரை அடைந்து அவர் மூலமாகப் பெருமாளிடத்தில் பரந்யாஸம் (சரணுகதி) பண்ணிக் கொள்ளவேண்டுமென்று அடியேனுல் முன்னுலேயே எழுதப்பட்டிருக்கிறது. அந்தப்படி நடந்து கொண்டால் நல்ல கதியையும் அடையலாமென்று எழுதப்பட்டிருக்கிறது. இதனுல் நல்ல கதியை அடைவதற்கு சரணுகதி மாத்ரம் பண்ணினுல் போதுமென்ற அர்த்தம் கொள்ளக் கூடாது. ஏனென்ருல் நம் சாஸ்த்ரங்களில் ஒரு ப்ராம்மணன் சில கர்மங்களை அவச்யமாகச் செய்ய வேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. அந்தக் கர்மங்களை எல்லாரும் கட்டாயம் செய்தாக வேண்டும். அவைகளைப்பற்றி அவரவர் ஆசாரியர் அவரவருக்குச் சொல்லிக் கொடுப்பார். ஆசார்யர் சொல்படி எல்லாரும் நடந்து கொள்ள வேண்டும்.

பெருமாளிடத்தில் பக்தி பண்ணிக் கொண்டேயிருக்க வேண்டும், பரந்யாஸம் பண்ணிக் கொண்ட பிறகு. இது மேலே சொன்ன கர்மங்களிலொன்று. பக்தி எப்படி பண்ணுவதென்ருல் ஒன்பது விதமாகப் பெருமாளிடத்தில் பக்தி பண்ணலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இப்பொழுது நடக்கிற கலியுகத்தில் (காலத்தில்) பெருமாளையே பாபிகள் மறந்து விடும்படி சாபம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அநேகமாக எல்லாரும் பாபிகளாகத்தானிருப்பார்கள், இப்பொழுது. அப்படியிருக்கும்பொழுது பெரு

மாளிடத்தில் எப்படி பக்தி பண்ண ஸாத்யமாகும் என்று கேட்டால், ஸாத்யமாகும் என்று பதிலளிக்க லாம். பெருமாள் தன்னிடத்தில் மாத்ரம் பக்தி பண்ணுகிறவர்களைக் காப்பாற்றுவேன் என்று ஸ்ரீபகவத் கீதையில் பேசியிருக்கிறார். ஆகையால் அவர் எப்படியாவது அவரிடத்தில் பக்தி பண்ணினவர்களைக் காப்பாற்றுவார், நாம் மாத்திரம் அவரொருவரிடத்தில் பக்தி பண்ண வேண்டும்.

ஸ்ரீமத் பாகவதத்தில் சொன்ன ஒன்பது வித பக்தி பின்வருமாறு:— ச்ரவணம், ஸ்மரணம், கீர்த்தனம், பாத ஸேவனம், அர்சனம், வந்தனம், தாஸ்யம், ஸக்யம், ஆத்ம நிவேதனம்.

1. ச்ரவணம்: காதால் கேட்கிறது. அதாவது பெருமாளுடைய கதையைச் சொல்லச் சொல்லிக் கேட்பது. இந்த விதத்தை யார் அனுசரித்தார் (உபயோகித்தார்) என்றால் பரிக்ஷித்து மஹாராஜா கீழே சொல்லியிருக்கிற மாதிரி என்று பதில் சொல்லலாம்.

அர்ஜுனனுடைய பிள்ளையான அபிமன்யுவின் பிள்ளை பரிக்ஷித்து அவன். தாயான உத்தரையின் கர்பத்திலிருக்கும் பொழுது பாண்டவர்களுடைய ஆசார்யரான த்ரோணாசார்யருடைய பிள்ளையான அச்வத்தாமாவால் கரிக்கட்டையாகச் செய்யப்பட்ட பிறகு ஸ்ரீ க்ருஷ்ணன் மறுபடியும் அவனை உயிர்ப்பித்து, தர்மபுத்ரரால் (அர்ஜுனன் தமயன்) ராஜ்ய பட்டாபிஷேகம் பண்ணப்பட்டு ஒரு நாள் காட்டிற்கு வேட்டைக்குச் சென்று, அங்கே

ஒரு மிருகத்தைத் துரத்திக்கொண்டு போக, 'அது மறைய, அவ்விடம் மௌனமடைந்திருந்த சமீக ருஷியைக்கண்டு மிருகம் எப்படிபோயிற்றெண, அவர் பேசாதிருந்தது கண்டு, அவ்விடம் இறந்து கிடந்த பாம்பொன்றை எடுத்து அந்த ருஷியின் கழுத்தில் சூட்டி நீங்கினான். அவ்வரசன் செய்கைகளை அருகிருந்த இருடியராலுணர்ந்த அம்முனிவரின் குமாரன் (சிருங்கமுனி) "இத் தீமை புரிந்தவன் இன்று ஏழாம்நாள் தக்ஷகனால் (பாம்பு) இறக்க" என்று சாபமிட்டனன். அதன்பிறகு இவன் அந்த ஏழு நாட்களில் வேத வ்யாஸருடைய பிள்ளையான சுகரால் பெருமானுடைய கதையைச் சொல்லுகிற ஸ்ரீமத் பாகவதத்தைச் சொல்லக் கேட்டு இறந்துபோய் நல்ல கதியை அடைந்தான்.

**பாத ஸேவனம் :** பெருமானுடைய பாதங்களை ஸேவிப்பது (பூஜிப்பது). இந்த விதத்தை ஸ்ரீ மஹாலக்ஷ்மி க்ஷீராப்தியில் பெருமாள் சயினித்திருக்கும்பொழுது அவருடைய பாதங்களை (திருவடிகளை) பிடித்து ஸேவை பண்ணுகிருள். இந்தக் காக்ஷியை படங்களில் எழுதி விற்பனை செய்கிறார்கள்.

ஸ்ரீராமருடைய பாதுகைகளையும் வாங்கிக் கொண்டு போய் அவைகளை ராஜ்ய பாரம் பண்ணச் சொல்லி சேவைபண்ணினான் பரதன்.

**அர்ச்சனம் :** பெருமானை பூஜை பண்ணுவது. இந்த விதத்தை பரதன் ஸ்ரீராமருடைய பாதுகைகளுக்கு பூஜை பண்ணி தழுவினான் ஒவ்வொருவர் அகத்தில் பெருமானை ஆராதிப்பது அர்ச்சனை என்பதில் சேரும்.

**வந்தனம் :** வணக்கம் அதாவது பெருமாளிடத்தில் வணங்குவது. அக்ரூரர் (யது வம்சத்தவர், சவபல்கன் குமாரர், தாய் காந்தினி, கம்சன் மந்திரி கம்சன் வேண்டு கோளால். நந்த கோபனிடம் சென்று தனுர்யாகச் செய்தி கூறி பலராம க்ருஷ்ணர்களை கம்சன் இருக்குமிடத்துக்கு அழைத்துக் கொண்டு போனவர்) நந்த கோபனிருக்கிற இடத்திற்குப் போய் அங்கே க்ருஷ்ணன் நடமாடிய இடம் இது என்று பூமியில் விழுந்து வணங்கினுர். இதை வந்தன விதமென்று சொல்லலாம்.

**ஸக்யம் :** ஸகாவாக (தோழன்) யிருப்பது. பெருமாளுக்கு ஸகி பாவத்தை அனுஸரிப்பது. இந்த விதத்தை யார் அனுஸரித்தார் என்று தேட வேண்டியதில்லை. ஏனென்ருல் அர்ஜுனன் தானே பெருமாளிடத்தில் (க்ருஷணன்) அவர் அவனுக்கு விஸ்வரூப தர்சனக் காக்ஷி அளித்தபொழுது "நான் தேவரீரை என்னுடைய ஸகா வென்று எண்ணியிருந்தேன் தெரியாத்தனமாக இது வரையில்" என்று கூறுகிருன். (ஸ்ரீமத் பகவத் கீதை), அதனர்த்தம் என்னவென்ருல் நாமிருவரும் ஒருவருக்கொருவர் ஸகாவாக விருந்தோம், என்பது.

**ஸ்மரணம் :** த்யானம் செய்வது அதாவது பெருமானைத் த்யானம் பண்ணி, நல்லகதி அடைவது. இந்த விதத்தை லோகத்தில் எல்லாரும் தழுவுகிருர்களென்று சொல்ல வேண்டும். அவர்களில் த்ருவன் செய்ததை முக்யமாகக் கருத வேண்டும். அவன் பின் வருமாறு செய்தான்:—

த்ருவன் உத்தான பாதன்—சுநீதியின் பிள்ளை. ஒரு சமயம் சுருசி (அவனுடைய மாற்றுந் தாய்) யுடன் கூடியிருந்த தன் பிதாவின் மடியில் உட்காரப் போக, சுருசி அவனைப்பார்த்து "நீ என்னுடைய பிள்ளையில்லாமல் சுநீதியின் பிள்ளையாதலால் உனக்கு உன் பிதாவின் மடியில் உட்காருவதற்கு அதிகாரம் கிடையாது. ஆதலால் உட்காரக் கூடாது" என்று சொன்னதின் பேரிலும், அவனுடைய பிதாவும் இதைப் பற்றி ஒன்றும் சொல்லாததன் பேரில், அவன் தன் தாயிடம் நடந்தவைகளை யெல்லாம் சொல்லி, அவளால் பெருமாளை ப்ரார்திக்கச் சொல்லப்பட்டு காட்டுக்குப் போய், நாரதரால் உபதேசிக்கப்பட்டு தவம் (ஸ்மரணம்) பண்ணினான். அப்புறம் பெருமாள் அவன் பேரில் ப்ரீதி அடைந்து அவனிடம் வந்து, ஆசீர் வதித்து விட்டு அவனை நல்ல பதம் அடையும்படிச் செய்தார். அவன் பால்ய தசையிலிருக்கும் பொழுது செய்த கார்யம் மேலே சொன்னது.

**தாஸ்யம்:** ஸேவை. பெருமாளுக்கு தாஸனு (வேலைக்காரனாக) யிருப்பது. ஸ்ரீராமருடைய தம்பியான லக்ஷ்மணனுக்கு இந்த தாஸன் பட்டம் கொடுப்பார்கள். ஆனால் அவன் அந்த மாதிரியிருந்தது அதிசயமில்லை. ஏனென்றால் அவன் ஆதி சேஷனுடைய (ஆதி சேஷன் எப்பொழுதும் கைங்கர்ய (தாஸ்ய) மான, பெருமாள் உட்கார்ந்திருக்கும் பொழுது ஆஸனமாயும், அவர்போகும் பொழுது வாஹனமாயும், அவர் சயனித்திருக்கும் பொழுது படுக்கையாயுமிருப்பவைகளை செய்து கொண்டிருக்

கிறவர்) அம்சம். இன்னொருவன் அந்த தாஸ பட்டத்தை அடைந்தவனாயிருக்கிறான். அவன் ஹனுமானென்றவன். அவன் என்ன செய்து அந்தப் பட்டத்தை அடைந்தான் தெரியுமா? அது கீழே சொல்லப்பட்டிருக்கிறது: அவன் வாயு புத்ரன். குரங்கு ஜாதியில் பிறந்த போதிலும் அவனுக்கு குரங்கு புத்தியில்லாமல், பெரிய வ்யாகரண பண்டிதனாகி, ஸ்ரீராமரை தர்சித்தது முதல் அவருக்கு பெரிய தாஸனாகி (அவன் சரித்திரம் ஸ்ரீமத் ராமயணம் சுந்தரகாண்டத்தில் காணலாம்) ஸ்ரீ ராமரைத் தவிர வேரே ஒரு பெருமாளையும் ஸேவிக்கிறதற்கு இஷ்டபடுகிறதில்லை. அவனுடைய பக்தி என்னமாயிருக்கிற தென்பதைப்பற்றி ஒரு கதை பாகவதர்களால் சொல்லப்படுகிறது. அது என்னவென்றால்: ஸ்ரீ ராமர் தனக்கு ராஜ்ய பட்டாபிஷேகமான பிறகு அங்கே வந்திருந்தப் பிரபுக்களுக் கெல்லாம் ஸன்மானம் செய்தபிறகு தன் பரம பக்தனான ஹனுமானை ஆலிங்கனம் பண்ணுவதே பெரிய ஸன்மானம் என்று எண்ணி ஆலிங்கனம் பண்ணி, பிறகு ஒரு முத்து ஹாரத்தை ஸ்ரீ ஸீதா தேவியிடம் கொடுத்து அதை ஹனுமான் கழுத்தில் போடச் சொல்ல அவளும் அப்படியே செய்தாள். அப்பொழுது ஹனுமான் என்ன பண்ணினான் தெரியுமா? அவன் முத்து ஹாரத்தை உடைத்துப்பார்த்து அந்த முத்துக்களில் ஸ்ரீராமனைக் காணாமையால் அந்த ஹாரத்தை தூர எறிந்துவிட்டானாம், தனக்கு வேண்டாமென்று. இப்பொழுது அடியேனுக்கு ஹனுமானைப்பற்றி ஒரு

சித்ரம் (படம்) எழுதப்பட்டு கிடைத்திருக்கிறது. அதில் பின்வருமாறு வரையப்பட்டிருக்கிறது: ஹனுமார் ஒரு தடாகத் (குளம்) தின் அருகில் முட்டிப்போட்டுக் கொண்டு உட்கார்ந்து கொண்டிருக்கையில், ஒரு தாமரை புஷ்பத்(அந்த குளத்திலிருந்து பறித்தது) தின் நடுவில் ஸ்ரீ ராமர், ஸ்ரீ ஸீதா, ஸ்ரீ லக்ஷ்மணர் ஆகிய மூன்று பேர்களுடைய சித்திரத்தோடிருக்கிற காக்ஷியைப் பார்த்து புன்னகைப் படுகிறார். அந்தப் புஷ்பத்தில் ஸ்ரீ ராமருடைய உருவத்தைப் பார்த்ததனால் அதைத் தூரப் போடாமல் கையிலேயே வைத்துக் கொண்டிருக்கிறார் போலும். ஹனுமான் அப்பேர்பட்ட பக்தன். அவன் சிரஞ்சீவிபட்டம் வாங்கிக் கொண்டு எப்பொழுதும் ஸ்ரீ ராமனையே பஜனம் பண்ணி, பூமியில் சஞ்சரித்துக் கொண்டு ஸ்ரீராமனுடைய கதையைச் சொல்லிகிற இடங்களில் போய் அதைக் கேட்டு ஆனந்தம் அடைகிறான்.

**கீர்த்தனம் :** சொல்லுதல். அதாவது பெருமானுடைய கதையைச் சொல்லுதல். இந்த மாதிரி வேத வ்யாஸர் பெருமாள் கதையை ஸ்ரீமத் பாகவதத்தில் சொல்லியிருக்கிறார்.

**ஆத்ம நிவேதனம் :** ஆத்மாவை ஸமர்ப்பித்தல் அர்பணம் செய்தல்). அதாவது பெருமாளிடத்தில் ன்னையே ஸமர்ப்பித்தல். இந்த விதத்தை ஸ்ரீ வஷ்ணவர்கள் சரணாகதி பண்ணித் தழுவுகிறார் r. ஆனால் அது அப்ரத்யக்ஷமான (கண்ணில் னாத) கார்யமாக விருக்கிறது. ஒருவன் இந்தக் ார்யத்தை ப்ரத்யக்ஷமாக (கண்ணுக்குத் தெரிந்தே

செய்திருக்கிருன். பலி என்பவன், பரம பக்தனுன ப்ரஹ்லாதனுடைய பேரன். அவன் தபஸ் செய்து, பலிஷ்டனுக ஆகி இந்திர லோகம், ஸ்வர்கம் முதலிய வைகளை ஜெயித்து சக்கிரவர்த்தியாக இருந்தான். இந்திரன் பெருமாளிடம் அதைப்பற்றி முறையிட அவர் காச்யபருக்கு அதிதியிடம் வாமனராய் (திரு) அவதரித்துப் பலியின் யாக சாலைக்குப் போய், மூன்றடி மண்யாசித்தார். இது விஷ்ணுவின் மாயையென்று அசுரப் புரோகிதரான சுக்கிராச்சாரி யார் தடுத்தார். அதை பலி கேளாமல் வாமனர் யாசித்தபடி தந்தனன். அந்த வாமனன் ஈரடியால் மூவுலகளந்து, ஓரடி வைக்க இடம் பெருமலிருக்க பலிச்சக்ரவர்த்தி தன் சிரத்தைக் காட்டினன் (அதா வது தன்னையே கொடுத்தனன்). அச்சிரத்தை வாம னர் கிரகித்து பலிக்கு சாவர்ணி மன்வந்தரத்தில் இந்திரனுக வரம் தந்து இந்திரனுகும் வரையில் பாதாள உலகத்தில் சகல போகங்களை அனுபவித் திருக்கும்படி செய்யப்பட்டான் பலி.

மேலே சொன்ன ஒன்பது வித பக்தியைத் தவிர இன்னமொருவித பக்தியைஇந்தக் கலிகாலத் தில் வேத வ்யாஸர் எல்லாரும் உபயோகப்படுத்தா லர்மென்று சொல்லியிருக்கிருர். அது நாம ஸங் கீர்த்தன மென்பது. அதாவது பெருமாளுடைய நாமத்தை ஸதா காலமும் பாடிக் கொண்டிருப்பது.

எல்லாரும் ஒரு ஆசார்யரை அடைந்து அவரை மேலே சொல்லி யிருக்கிற ஏதாவது ஒரு வித பக்தி யை சொல்லிக்கொடுக்கச் சொல்லி அதைத்தழுவ வேண்டும்.

---

# சரணுகதி

சரணுகதி என்பதற்கு அர்த்தம் "அடைக்கலம் புகுகை". அதாவது ஒருவரிடம் போய் அவரைத் தனக்கு உதவி பண்ணும்படிக் கேட்டுக்கொள்வது. லோகத்தில் எல்லோரும் அநேகமாக யாராவது ஒருவரிடம் சரணுகதி பண்ணித்தான் கார்யங்களை முடித்துக் கொள்ளவேண்டும். ஆகையால் சரணுகதி என்ற கார்யம் ஸகஜமாய் லோகத்தில் நடக்கக்கூடியது. ஆனால் சரணுகதி என்றதற்கு மேலே சொல்லியது ஸரியான அர்த்தமில்லை. பின் எது ஸரியான அர்த்தம் அதற்கு என்ருல் பெருமாளிடம் சரணுகதி பண்ணுவது. அதுவும் மோக்ஷம் அடைவதற்கு சரணுகதி பண்ணவேண்டும். வைஷ்ணவ வடகலையார்கள் செய்கிற பரந்யாஸம் அல்லது சரணுகதி என்று சொல்லப்படுகிற கார்யம் போல் பெருமாள் ஸ்ரீமத் பகவத்கீதையில் அர்ஜுனனுக்குச் சரணுகதி பண்ணும்படி உபதேசம் செய்திருக்கிருர். அது பின் வருமாறு :—

" ஸர்வதர்மான் பரித்யஜ்ய
 மாமேகம் சரணம் வ்ரஜ ।
அஹம் த்வா ஸர்வபாபேப்யோ
 மோக்ஷயிஷ்யாமி மாசுச : ||

[கீதை 18 அத்யாயம் 66 ஸ்லோகம்]

அர்த்தம்:—எல்லா தர்மங்களையும் விட்டு விட்டு என்னை ஒருவனையே சரணமடை. நான் உன்னை எல்லா பாபங்களிலிருந்தும் விடுவிக்கிறேன். துக்கப்படாதே.

தாத்பர்யம்:—தர்மங்களையும் என்றால் விதித்திருக்கிற (அதாவது சாஸ்த்ரங்களில் நித்யம் கட்டாயமாக ஒருவன் செய்யவேண்டும் என்று சொல்லியிருக்கிற) கர்மங்களின் பலத்தையும், மற்ற எல்லா கர்மங்களையும் என்றது. விதித்திருக்கிற கர்மங்களின் பலன்கள் என்று ஏன் அர்த்தம் கொள்ள வேண்டுமென்றால் கர்மங்களின் பலன்களை விட்டு விட்டால் கர்மங்கள் பிரயோஜனப்படாது. அப்பொழுது அவைகள் பண்ணாமல் போனமாதிரியாகும். அத்துடன் சாஸ்த்ரங்களில் சொன்னபடி (நித்ய) கர்மங்களைச் செய்ததுமாகும்.

பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி என்றது பாபங்களிலிருந்து விடுவிக்கிறேன், அப்பொழுது மோக்ஷம் போகலாம், பாபங்களோடு போகமுடியாததால்.

ஆகையால் மேலே சொல்லியிருக்கிற சுலோகத்தின் அர்த்தம் பின்வருமாறு:—

விதித்திருக்கிற நித்யகர்மங்களின் (தர்மங்கள்) பலன்களையும் மற்ற எல்லாக் கர்மங்களையும் (தர்மங்கள்) விட்டுவிட்டு என்னை ஒருவனையே அடை. நான் உன் பாபங்களைப் போக்கி உன்னை மோக்ஷத்திற்கு அனுப்புகிறேன். துக்கப்படாதே.

மேலே சொல்லியிருக்கிற பெருமாளிடம் செய்கிற சரணாகதி தான் சரணாகதி என்கிற வார்த்தைக்குச் சிரேஷ்டமான அர்த்தம். இந்தமாதிரி சரணாகதி பண்ணினவர்களைப் பெருமாள் மோக்ஷத்திற்கு அனுப்பிக் கொண்டிருக்கிறார். சரணாகதி பண்ணாத

ஒருவரையும் அவர் மோக்ஷத்திற்கு அனுப்பியிருக் கிறுர். ஆனுல் அது ஒரேதடவை தான் செய்த தாகத் தெரிகிறது. அது எப்பொழுதென்ருல் ஸ்ரீ ராமன் ஜடாயுக்கு செய்திருக்கிருர். ராவணன் ஸ்ரீ சீதாதேவியைத் தூக்கிக்கொண்டு போகும்பொழுது ஜடாயு அவனை தடுத்து அவனுடன் போர்புரிந்து, அவனுல் இரக்கைகள் சேதிக்கப்பட்டு (அறுக்கப் பட்டு) பூமியில் விழுந்து ஸ்ரீராமன் அங்கே வருகிற வரையில் ப்ராணனை விடாமல் தரித்துக் கொண் டிருந்து, ஸ்ரீராமனைப்பார்த்து, ராவணன் ஸ்ரீ ஸீதா தேவியைத் தூக்கிக்கொண்டுபோன சமாசாரத்தை அவரிடம் தெரிவித்துவிட்டு, பிறகு ப்ராணனை விட்டார். ஸ்ரீராமன் அப்புறம் அவரை நீ மோக்ஷத் திற்குப்போ என்று சொல்லிவிட்டு அவருடைய உடலை தகனம் செய்தார்.

இன்னமொரு விசேஷம் மேலே சொன்னதி லிருக்கிறது. அது ஸ்ரீராமன் தன்னை சாதாரண மனிதன்போல் காட்டிக் கொண்டு தனக்கு தெய்வத்தன்மை யிருக்கிறதென்று காட்டிக் கொள் ளாமல் போனுலும் ஜடாயுக்கு செய்த காரியத்தால் தான் பெருமாளென்று வெளிப்படுத்திவிட்டார். ஸ்ரீமத் ராமாயணம் சரணுகதி சாஸ்த்ரமென்று சொல்லப் பட்டிருக்கிறது. அதாவது ஸ்ரீராமனிடத் தில் அநேக சரணுகதிகள் பண்ணப்பட்டிருக்கிறதை ஸ்ரீமத் ராமாயணம் சொல்லுகிறது. இன்னம் மற்ற பெருமாளுடைய அவதாரங்களில் சரணுகதிகள் நடந்திருக்கிறன்றன. அவைகளில் முக்கியமானது நான்கு (விபீஷணன் சரணுகதி, ப்ரஹலாதன் சரணு

கதி, திரௌபதி சரணுகதி, கஜேந்திரன் சரணுகதி). அவற்றை இங்கு விசாரிப்போம்.

**விபீஷண சரணுகதி :—** லங்காதி பதியான ராவண னுடைய இரண்டாவது தம்பியான விபீஷணன் ஸ்ரீராமர் ராவணனுடைய லங்கையை எதிர்க்கப் போனபோது அவரிடம் போய் "என்னுடைய தமய னிடம் ஸ்ரீ ஸீதாதேவியை இவ்விடத்தில் (லங்கை யில்) வைத்துக் கொள்ளாமல் ஸ்ரீராமரிடத்திற்கு அனுப்பிவிடு என்று சொன்னதற்காக என்னை அவன் உதைத்து ஊருக்கு (லங்கைக்கு) வெளியே போகும்படித் துரத்திவிட்டான். ஆகை யினுல் நான் இப்பொழுது இங்கேவந்து தங்க ளுடைய பாதார விந்தங்களை அடைய விரும்புகி றேன்" என்று ஸ்ரீராமருடைய வேலைக்காரர்களிடம் சொல்லி அந்த சமாசாரத்தை ஸ்ரீராமரிடம் தெரி விக்கச் சொன்னுன். அப்புறம் ஸ்ரீராமர் அவனை ஏற்றுக் கொண்டார். ஆனுல் ஸ்ரீராமரின் பக்கத்தி லிருந்த ஹனுமானைத்தவிர மற்ற சுக்ரீவன் முத லானவர்கள் "விபீஷணன் சத்ருவான ராவணனைச் சேர்ந்தவனுகையால் அவனைச் சேர்த்துக் கொள்ளக் கூடாது" என்று சொன்னபோதிலும் ஸ்ரீராமர் "அவன் (விபீஷணன்) என்னிடம் சரணமடைந்தா னுகையால் அவனைச் சேர்த்துக் கொள்ளலா" மென்று அவன் செய்த சரணுகதியை அங்கீகரித் துக் கொண்டார்.

**ப்ரஹ்லாத சரணுகதி :—** ஹிரண்ய கசிபு என்ற அஸுரனுடைய பிள்ளை ப்ரஹ்லாதன். அவனு டைய தாய் அவனை கரு உண்டாயிருக்கும்பொழுது

நாரதர் அவன் தாய்க்கு உபதேசம் பண்ணியதைக் கேட்டு பெரிய பெருமாள் பக்தனாக ஆகிவிட்டான் (அதாவது பெருமாளிடம் சரணாகதி பண்ணிவிட்டான்). அவன் தகப்பன் தான் சொல்லச் சொன்ன வார்த்தைகளைக் கேளாததனால் அவனை மிகவும் இம்சித்த போதிலும் பெருமாள் அவனைக் காப்பாற்றினார். அவனும் எப்பொழுதும் ஹரிநாமத்தையே சொல்லிக்கொண்டிருந்து "பெருமாள் எங்குமிருக்கிறார்" என்று சொன்னதைக்கேட்டு அவன் தகப்பன் "அவர் எதிரிலிருக்கிற தூணிலிருக்கிறாரா காண்பி" என்று சொன்னவுடன் பெருமாள் தூணை வெடித்து தலை சிங்கமும் மனித உடலோடும் வெளியில்வந்து அவன் தகப்பனை சம்ஹாரம் பண்ணிவிட்டார். இங்கே பெருமாள் தன் பக்தன் வார்த்தையைக் காப்பாற்றினார்.

திரௌபதி சரணாகதி :—பாண்டவர்களில் பெரியவரான தர்மபுத்திரர் துர்யோதனாதிகளோடு சூதாடி திரௌபதியை அதற்குப் பந்தயமாக வைத்துத் தோற்றுப்போனார். அப்பொழுது துர்யோதனன் தம்பியான துச்சாஸனன் திரௌபதியை துர்யோதனன் ஸபையில் அழைத்துக் கொண்டுவந்து மான ıங்கம் பண்ணுவதற்காக அவளுடைய புடவையை அவிழ்த்துவிட யத்தனித்தான். அப்பொழுது அவள் தன் புடவையை கையால் பிடித்துக்கொண்டு ருமாளை (ஸ்ரீகிருஷ்ணனை)த் தன்னை காப்பாற்றும் ப் பிரார்த்தித்தாள். ஆனால் பெருமாள் ஒன்றும் யாமல் இருந்தார் (அதாவது உதவிசெய்யாமல் ந்தார்). அப்புறம் சொஞ்சம் நாழிகள் ஆனபிறகு

அவள் தன் கை புடவையைப் பிடிப்பதைவிட்டுவிட்டு பெருமாளைச் சரணாகதி பண்ணினாள். உடனே பெருமாள் அவளைக் காப்பாற்றினார். எப்படி என்றால் அந்தப் புடவை வளர்ந்துகொண்டு போகும்படிச் செய்தார். அதாவது புடவையை இழுக்க இழுக்க நீண்டு கொண்டேவந்தது. அதாவது அவிழ்க் முடியாமல் போய்விட்டது. அப்புறம் துச்சாஸனன் களைத்துப்போய் புடவை இழுப்பதைவிட்டு விட்டான் தன்னால் ஸாத்யப்படாதென்று. இங்கே திரௌபதி முதலில் பண்ணின சரணாகதியை ஏன் பெருமாள் ஏற்றுக் கொள்ளவில்லையென்றால், அவள் பெருமாளிடத்தில் மாத்திரம் விச்வாசம் கொள்ளாமல் தன்கையினிடத்திலும் (அவள் புடவையை கையால் பிடித்துக் கொண்டிருந்தாள்)நம்பிக்கை கொண்டாள். அதாவது பெருமாளைத்தவிர இன்னொன்றினிடத்திலும் (தன்கை) சரணாகதி பண்ணினாள். பெருமாள் தன்னிடத்தில் மாத்திரம் சரணாகதி பண்ணுகிறவர்களை ரக்ஷிப்பாராகையால்.

**கஜேந்த்ர மோக்ஷம்**:—பாண்டிய தேசத்தரசனாக இந்த்ரத்யும்னனென்று ஒருவனிருந்தான். அவன் பெருமாளுடைய பக்தன். ஒரு ஸமயம் அவன் பெருமாளை த்யானம் பண்ணிக் கொண்டிருக்கும்பொழுது அகஸ்தியரிஷி அவனிடம் வந்தார். அதை அவன் கவனிக்காமல் தன் கார்யத்திலேயே அமர்ந்து விட்டான். அதனால் அகஸ்தியர் அவனை யானையாகப் பிறக்கும்படி சபித்துவிட்டார். அவன் இந்தச் சாபத்தை ஏற்றுக் கொண்டு யானையாகப் பிறந்தான் அடுத்த பிறவியில். ஆனால் அவனுக்கு பூர்வம் (முன்

ஜன்மத்தில்) எப்படி இருந்தான் என்ற, ஸ்மரணை மாத்திரம் இருந்தது. அவன் ஒரு காட்டில் தன் பந்துக்களோடு வசித்துக் கொண்டிருந்தபொழுது அங்கேயிருந்த தடாகத்திற்கு (குளம்) தாகசமனத் திற்காக (தண்ணீர் குடிப்பதற்காக) ப்போய் தண்ணீர் குடித்தான். அப்பொழுது அந்தக் குளத்தி லிருந்த முதலை அவன் காலைப் பிடித்துக் கொண்டு விட்டது. பிறகு யானை தன்காலைப் பிடித்துக் கொண்ட முதலையைத் தண்ணீருக்கு வெளியில் கொண்டுவந்தால் அது தன்காலை விட்டுவிடு மென்று பிரயத்னம் பண்ணிற்று. முதலை யானையை தண்ணிருக்குள் இழுத்துக்கொண்டு போனால் அது செத்துப் போய்விடும், அப்பொழுது அதை சாப் பிடலாம் என்ற எண்ணத்துடன் அதைத் தண்ணீ ருக்குள் இழுக்கப்பார்த்தது. இந்தமாதிரி யானையும் முதலையும் 1000 வருஷம் சண்டைபோட்டு, யானைக்கு பலம் குறைந்து போகவே அதற்கு பெருமாள் ஞாபகம் வந்து பெருமாளிடத்தில் சரணாகதி பண் ணிற்று. இதைக் கேட்டு பெருமாள் ஸ்ரீ வைகுண் த்திலிருந்து ஓடிவந்து தன் சக்ராயுதத்தினால் தலையைக் கொன்று யானையைக் காப்பாற்றினார். கு தன் பக்தனை யானையை மோக்ஷத்திற்கு னுப்பினார். அந்த முதலை முன் ஜன்மத்தில் ஹூஹூ என்ற கந்தர்வனாயிருந்து ஒரு ரிஷிசாபத் தால் முதலை ஜன்மத்தை அடைந்து இப்பொழுது பெருமாளால் கொல்லப்பட்டு தன் சாபம் நீங்கி தன் இடத்திற்கு போயிற்று.

மேலே சொன்ன நான்கு விஷயங்களிலிருந்து என்ன தெரிகிற தென்றால் பெருமாள் தன்னிடம் அதுவும் தன்னை மாத்திரம் சரணுகதி பண்ணின வர்களைக் கட்டாயமாகக் காப்பாற்றுவார் அவர் ஸ்ரீமத்பகவத் கீதையில் (பகவத்கீதை 9வது அத்யாயம்) சொல்லியிருக்கிறபடி. ஆகையால் எல்லாரும் அவரவர்களுடைய ஆசார்யரை தங்களுக்குப் பெருமாளிடத்தில் முழு சரணுகதியை (பரந்யாஸம்) ஸமர்ப்பிக்கும்படி ப்ரார்த்திக்க வேண்டும்.

---

# பரதன் சரணாகதி

ஸ்ரீமத் வால்மிகி ராமாயணம் சரணாகதி சாஸ்த்ர மென்று சொல்லப்படுகிறது, ஜனங்களால். அதில் அநேகம் பேர்கள் பெருமாளைச் சரணாகதி பண்ணி யிருப்பதைப் பற்றி பேசப்பட்டிருக்கிறது. அந்த சரணாகதிகளில் ஸ்ரீ ராம மூர்த்தியின் சஹோதரனான பரதன் செய்தது ஒன்றாகும். அது மிகவும் விசேஷ மானது. அது கீழ் வருமாறு :—

ஸ்ரீ சக்ரவர்த்தித் திருமகனுக்கு (ஸ்ரீராமமூர்த்தி) யௌவராஜ்ய பட்டாபிஷேகம் செய்வதாகத் தீர்மா னிக்கப்பட்டு, பிறகு தீர்மானம் மாற்றப்பட்டு, அவரை வனவாஸம் செய்யச் சொல்ல, அவர் தன் னுடைய தர்ம பத்னியான ஸீதா தேவியுடனும், தன் ஸஹோதரனான லக்ஷ்மணனோடும் ஊரை விட்டு வனத்துக்குப்போனார். இந்தக் கார்யம் நடக்கும பொழுது தசரதசக்ரவர்த்தி (ஸ்ரீ ராமனுடைய பிதா) ஆசார்யன் திருவடியை அடைந்தார். உடனே தன் பாட்டனார் (தன் தாயார் கைகேயின் பிதா) ஊருக்குச் சென்றிருந்த ஸ்ரீ ராமனுடைய அடுத்த சஹோதர னான பரதன் அயோத்யைக்கு வரவழைக்கப்பட்ட தும், அவன் ஊருக்கு வந்ததும் தன் தாயாரிட மிருந்து எல்லா சங்கதிகளையும் கேள்விப்பட்டு, துக்க ஸாகரத்தில் முழுகி, பிறகு தன் பிதாவின் சரம கைங்கர்யங்களை விமர்சையாகச் செய்து முடித் தான். அப்புறம் தனக்கு தன் தாயார் ஸம்பாதித்து வைத்திருந்த ராஜ்யம் தசரத மஹா ராஜாவின் மூத்த குமாரனான ஸ்ரீ ராமருக்கே உரியதாதலால்,

# பரதன் சரணுகதி

ஸ்ரீமத் வால்மிகி ராமாயணம் சரணுகதி சாஸ்த்ர மென்று சொல்லப்படுகிறது, ஜனங்களால். அதில் அநேகம் பேர்கள் பெருமாளைச் சரணுகதி பண்ணி யிருப்பதைப் பற்றி பேசப்பட்டிருக்கிறது. அந்த சரணுகதிகளில் ஸ்ரீ ராம மூர்த்தியின் சஹோதரனை பரதன் செய்தது ஒன்ருகும். அது மிகவும் விசேஷ மானது. அது கீழ் வருமாறு:—

ஸ்ரீ சக்ரவர்த்தித் திருமகனுக்கு (ஸ்ரீராமமூர்த்தி) யௌவராஜ்ய பட்டாபிஷேகம் செய்வதாகத் தீர்மா னிக்கப்பட்டு, பிறகு தீர்மானம் மாற்றப்பட்டு, அவரை வனவாஸம் செய்யச் சொல்ல, அவர் தன் னுடைய தர்ம பத்னியான ஸீதா தேவியுடனும், தன் ஸஹோதரனை லக்ஷ்மணனேடும் ஊரை விட்டு வனத்துக்குப்போனர். இந்தக் கார்யம் நடக்கும பொழுது தசரதசக்ரவர்த்தி (ஸ்ரீ ராமனுடைய பிதா) ஆசார்யன் திருவடியை அடைந்தார். உடனே தன் பாட்டனர் (தன் தாயார் கைகேயின் பிதா) ஊருக்குச் சென்றிருந்த ஸ்ரீ ராமனுடைய அடுத்த சகோதர ஞன பரதன் அயோத்யைக்கு வரவழைக்கப்பட்ட தும், அவன் ஊருக்கு வந்ததும் தன் தாயாரிட ிருந்து எல்லா சங்கதிகளையும் கேள்விப்பட்டு, துக்க ஸாகரத்தில் முழுகி, பிறகு தன் பிதாவின் சரம கைங்கர்யங்களை விமர்சையாகச் செய்து முடித் தான். அப்புறம் தனக்கு தன் தாயார் ஸம்பாதித்து வைத்திருந்த ராஜ்யம் தசரத மஹா ராஜாவின் மூத்த குமாரனை ஸ்ரீ ராமருக்கே உரியதாதலால்,

அதை வாங்கிக்கொள்ள மாட்டேனென்று சொல்லி, எல்லோரையும் அழைத்துக் கொண்டு ஸ்ரீ ராமன் வஸித்துக் கொண்டிருந்த இடத்திற்குப் போய் ஸ்ரீராமனைப் பார்த்துக் கீழே விழுந்து தண்டனிட்டான். ஸ்ரீராமன் அவனைத் தழுவி எடுத்துக் கொண்டு யோக க்ஷேமத்தைப் பற்றி விசாரித்தார். அப்பொழுது அவன் கைகூப்பி வினயத்துடன் பின்வருமாறு பதிலளித்தான் :—

" அண்ணா ! நமது பிதா கைகேயீயின் வார்த்தையைக் கேட்டு மூத்த புத்ரனை தங்களுக்கு ந்யாயமாகக் கிடைக்கவேண்டிய ராஜ்யத்தை இளையவனை எனக்குக் கொடுத்துவிட்டு புருஷோத்தமனை தங்களைக் காட்டிற்கனுப்பினர். ஒருவரும் செய்யத் துணியாத கார்யத்தை இப்படிச்செய்து, ப்ரியமான புத்ரனை விட்டு பிரிந்த சோகத்தால் பீடிக்கப்பட்டு அந்த மஹானுபாவர் ஸ்வர்கத்திற்குப் போய்விட்டார். என் தாயான கைகேயீயால் ஏவப்பட்டு தன் கீர்த்தியை எந்நாளும் அழித்த இந்த மஹா பாபத்தைக் கட்டிக் கொண்டார். இந்த பாதகத்தைச் செய்யும்படி தூண்டிவிட்ட அந்த ஸ்த்ரீ— என் தாய்—தான் ஆசை வைத்த ராஜ்யத்தையும் அடையவில்லை. தன் கணவனையும் கொன்று விதவையானாள். தன் எண்ணங்கள் யாவும் வீணாகி லோகத்தில் அழியாத அபகீர்த்தியையும் பாபத்தையும் ஸம்பாதித்தோமே என்ற துக்கம் அவளை வாட்டுகிறது. இனி மஹாகோரமான நரகத்தில் தள்ளப்படுவாள். கைகேயீயின் வயிற்றில் பிறந்ததால் அவனுக்கு நேர்ந்த அபவாதத்திற்கு

நானும் ஆளானேன். இப்படி மஹாபாபியின் வயிற்றில் பிறந்து ந்யாயமாக என் அண்ணனுக்குக் கிடைக்கவேண்டிய ராஜ்யத்தை கிடைக்காமல் செய்து அவரை காட்டிற்குத் துரத்தி அவருடைய ராஜ்யத்திற்கு ஆசைப்பட்டேனென்று லோகத்தாரால் நிச்சியிக்கப்பட்டு என் பிதாவின் மரணத்திற்கும் காரணமான நான் எல்லா விதத்தாலும் கெட்டேன். தங்களைத் தவிர எனக்கு வேறு கதியில்லை, தங்களையே சரணமடைந்தேன். தாங்களே என்னைக் காப்பாற்ற வேண்டும். தேவேந்திரன் தன் அமராவதியில் அபிஷேகஞ் செய்யப்பட்டது போல் தாங்களும் அயோத்யைக்குத் திரும்பி வந்து தடைபட்ட அபிஷேகத்தைப் பூர்த்தி செய்து, தங்களுடைய ராஜ்யத்தைக் கைகொண்டு எங்களெல்லோரையும் க்ஷேமமாக பரிபாலனஞ் செய்து என்னையும் கடைத்தேற்ற வேண்டும். இதோவிருக்கும் ப்ரஜைகளும் கணவனையிழந்து அநாதைகளாகப் பரிதவிக்கும் ராஜ ஸ்த்ரீகளும் தங்களை ப்ரார்த்திக்க வந்திருக்கிறார்கள். அநுக்ரஹஞ் செய்யவேண்டும். நம் வம்சத்தில் இதுவரையில் அனுஷ்டிக்கப்பட்டுவரும் தர்மம் இதே. என்னை எல்லா விதத்திலும் காப்பாற்றத் தாங்கள் ஸமர்த்தர். ராஜ்யத்தை ஒப்புக் கொள்ள வேண்டும். தங்களுடைய க்ஷேமத்தையே ப்ரார்த்திக்கும் எங்கள் மனோரதங்களை நிறைவேற்ற வேண்டும். ஆகையால் என்னிடத்தில் கிருபை செய்து என்ப்ரார்த்தனையை அங்கீகரிக்க வேண்டும் இதோ இருக்கும் மந்திரிகள் ப்ரதானிகள் மற்றுமுள்ளத் தலைவர்கள் ப்ரஜைகள் செய்யும் ப்ரார்த்தனையைத் தாங்கள் தள்ளிவிட முடியுமா?'' என்று

கண்களில் நீர்பெருக பரதன் ப்ரார்த்தித்து ராமனு டைய திருவடிகளில் தன் தலையை வைத்து நமஸ் கரித்தான்.

பிறகு ஸ்ரீராமன் பரதனைத் தூக்கி எடுத்து அணைத்து, "நீ மஹா குலத்தில் பிறந்தவன் ஸாத்விக குணங்களால் அலங்கரிக்கப்பட்டவன்; தேஜஸ்ஸுள்ளவன்; வ்ரதங்களை அனுஷ்டித்தவன். உன்னைப் போன்றவன் ராஜ்யத்திற்கு ஆசைப்பட்டு கனவிலாவது அண்ணனுக்குத் துரோகம் செய்வானு? பராக்ரமசாலியான உன்னிடத்தில் தோஷம் கொஞ்சமேனும் இருப்பதாக எனக்குத் தோன்ற வில்லை. உன்னைப் பெற்ற தாயை அறியாத்தனத் தால் நிந்திப்பதும் ஸரியல்ல. நமது மூத்தோர்கள் தனது இஷ்டமான மனைவிகளிடத்திலும் மகன்களி டத்திலும் அன்பு வைக்கிருர்கள். நாம் அதை தடுக்க முடியாது. பார்யைகள் கணவன்களுக்குக் கட்டுப்பட்டிருப்பது போல் மகன்களும் சிஷ்யர்களும் கட்டுப்பட்டவர்களென்றே பெரியோரின் கருத்து. நீயும் அதை ஒப்புக்கொள்ள வேண்டும். ராஜ்யத் தில் ஸகல ஸுகங்களை அனுபவிக்கும்படி என்னைச் செய்யவும், காட்டில் மான் தோல் மரவுரியுடன் இருக் கச்செய்யவும் நமது பிதாவுக்கு அதிகாரமுண்டு. பிதா விடத்தில் புத்ரன் எவ்வளவு பக்தியையும், கௌர வத்தையும் வைக்கவேண்டுமோ அப்படியே தன் தாயி டத்திலும் வைக்கவேண்டும். தர்மாத்மாக்களான பெற்றோர் சேர்ந்து "நீ வனத்திற்குப் போயிரு" என்று என்னைக் கட்டளை இட்டிருக்க அதை எப் படி மீறுவேன்? நீ ராஜ்யத்தை ஒப்புக்கொண்டு

அயோத்தியில் ஆளவேண்டும். நான் பதினன்கு வருஷங்கள் வரையில் முனிவேஷத்துடன் வஸிக்க வேண்டுமென்று நமது பிதா எல்லோர்க்கும் முன் ஏற்பாடு செய்து அப்படியே நம்மையும் கட்டளையிட்டுப் பரலோகம் போனார். அந்த தர்மாத்மா உனக்கு ப்ரமாணம்; உன்னை ஆளும் அரசன்; லோகத்திற்கும் உனக்கும் குரு; ஆகையால் நமது பிதா பிரித்துக் கொடுத்த பாகத்தை நீ பெற்றுக் கொண்டு அனுபவிக்கவேண்டும். நானும் எனக்குக் கொடுத்த பாகத்தை இந்த தண்டகாரண்யத்தில் பதினன்கு வருஷங்கள் வரையில் அனுபவிப்பேன். எல்லோராலும் பூஜிக்கப்பட்டவரும் தேவேந்திரனைப் போன்றவரும் நமக்குப் பிதாவான தசரதர் எனக்குச் செய்த உத்தரவே இவ்வுலகிலும் மேல் உலகிலும் எனக்கு மிகுந்த க்ஷேமத்தை உண்டாக்கும். என் பிதாவின் உத்திரவின்றி லோகங்கள் யாவற்றிற்கும் அதிபதியாயிருப்பதையும் விரும்பமாட்டேனென்றார்.'' அப்புறம் பரதன் (மறுபடியும்), ஜாபாலி மஹரிஷி, வஸிஷ்டர் முதலியவர்களாலும் ஸ்ரீராமனைத் திருப்ப முடியவில்லை.

"பிறகு ரிஷிகள் ராவண வதம் சீக்ரமாக நடக்க வேண்டுமென்று, ஒன்று சேர்ந்து பரதனைப் பார்த்துக் "குழந்தாய்!" உத்தம குலத்தில் பிறந்தவனே! ஹா புத்திமானே! சுத்தமான நடத்தை உள்ளனே! எல்லையற்ற கீர்த்தி சாலியே! உன் பிதாற்கு ஸௌக்யங்கிடைக்க வேண்டுமென்று உனக்கு ண்ண மிருந்தால் ராமனுடைய வார்த்தைப்படி .. கைகேயியிடத்தில் கடன் வைத்துக் கொள்ளாம

லிருந்ததால் தசரதர் ஸ்வர்கத்தை அடைந்தார். அப்படியே ராமனும் தசரதரிடத்தில் கடன் வைத்துக் கொள்ளக் கூடாதென்று விரும்புகிறு" மென்று சொல்லிவிட்டு தங்களிடத்திற்குப் போனுர்கள்.

பரதன் பிறகு, தனக்கும் ராமனுக்கும் எப்போதும் ஹிதத்தையே விரும்பும் வஸிஷ்ட மஹர்ஷியின் கட்டளையை அனுஸரித்து, ராமனைப் பார்த்து. "அண்ணு! தங்கள் அலங்கரிக்கப்பட்ட இந்த மரவடிகளில் தங்களுடைய பொன்னடிகளைச் சாற்ற வேண்டும், இவைகள் ஸகல லோகங்களுக்கும் மங்களத்தை உண்டுபண்ணக் கூடியதுகள்" என்று ப்ரார்தித்தார். அப்பொழுது ராகவன் தான் செய்த ப்ரதிஞையையும் பரதன் செய்த சரணுகதியையும் பூர்த்தி செய்ய விரும்பி அப்படியே அந்த பாதுகைகளில் தன் திருவடிகளை வைத்து அவைகளை பரதனுக்குக் கொடுத்தார். (பரம குருக்கள் தங்களுடைய திருவடிகளை உத்தம சிஷ்யர்களின் தலையில் வைத்து அனுக்ரஹம் செய்வது ஸம்ப்ரதாயம். தங்களுடைய ஞானம் சக்தி யாவும் அவர்களிடத்தில் குடி கொள்ளும். இதற்கு "திருவடி தீக்ஷை" யென்று பெயர். இப்பொழுதும் ஆசார்யனுடைய திருவடி ஸம்பந்தம் பெற்ற பாதுகைகளை பூஜையில் வைப்பதும் அவைகளைக் கழுவின தீர்த்தத்தை ப்ரோக்ஷித்துக் கொள்வதும் பெரியோர்களின் ஆசாரம். மஹாபலியின் தலையில் மஹாவிஷ்ணு தன் திருவடியை வைத்ததற்கு ரஹஸ்யார்த்தம் இதே) அந்த ராஜகுமாரன் அவைகளுக்கு ப்ரதக்ஷிண

நமஸ்காரம் செய்து "இந்தப் பதினன்கு வருஷங்கள் வரையில் ஜடை, மரவுரி, மான்தோல் முதலிய தபஸ்வி வேஷத்தைத் தரித்துப் பழங்களையும், கிழங்குகளையும் வேர்களையும் உண்டு, நகரத்திற்கு வெளியிலிருந்து தங்களுடைய வரவை எதிர்பார்த்துக் கொண்டிருப்பேன். ராஜ்யாதிகாரம் யாவற்றையும் தங்களுடைய திருவடிகளில் ஒப்புவிப்பேன். பதினன்கு வர்ஷங்கள் முடிந்து பதினைந்தாவது வர்ஷம் முதலாவது நாளில் தங்களை நான் தர்சிக்காவிட்டால் நெருப்பில் விழுவே"னென்று கோர ப்ரதிக்ஞை செய்தார். அதைக் கேட்டு ராமன் அப்படியே செய்கிறேனென்று பரதனையும் சத்ருக்னனையும் பிரியத்துடன் தழுவிப் "பரத! உன் தாயான கைகேயியை ஜாக்கிரதையாகக் காப்பாற்று. அவளிடத்தில் கோபிக்காதே. என் மேலும் ஸீதை மேலும் ஆணை" என்று சொல்லி அவர்களுக்கு விடை கொடுத்தார்.

பிறகு பரதன் அந்தப் பாதுகைகளை தன் தலையில் பக்தியுடன் வைத்துக்கொண்டு அயோத்திக்கு வந்து, அங்கேயிராமல் அந்த நகர் பக்கத்திலிருக்கிற நந்திக்ராமத்திற்குப் போய், அங்கே ஒரு ஆச்ரமம் கட்டி அதில் ராமனுக்கு பதிலாக பாதுகைகளை ப்ரதிஷ்டை பண்ணி (ராஜ்ய பட்டாபிஷேகம் பண்ணி) ராஜ்யபாரம் யாவற்றையும் அவைகளிடத்தில் ஒப்புவித்து தானும் ராமன் மாதிரியாக மரவுரியையும் க்ருஷ்ணாஜினத்தையும் உடுத்திக்கொண்டு, எப்பொழுதும் ராமனுடைய ஸ்மரணையோடியிருந்தான். ராமன், பதினன்கு வர்ஷங்களான பிறகு

வந்து அவருக்கு தரிசனம் கொடுத்தார். பாதுகைகள் ராமனிடம் சேர்க்கப்பட்டன பரதனால்.

மேலே சொன்ன பரதனுடைய கார்யத்தின் விசேஷமென்ன வென்றால்: பெருமாள் (ஸ்ரீராமன்) சரணாகதி பண்ணின பரதனுக்குத் தன் அர்ச்சாவதாரமான பாதுகைகளைக் கொடுத்து பக்தியோகத்தை அனுசரிக்கச் சொன்னார். அதே மாதிரி பதினான்கு வர்ஷங்கள் செய்து, அவன் ஸித்தி அடைந்தான். அதாவது ராமன் அவனுக்குப் ப்ரத்யக்ஷமானார். இந்த மாதிரி சரணாகதி வேறு ஒருவருக்கும் நடந்ததாகத் தெரியவில்லை. ஆகையால் அது விசேஷமானதல்லவா?

---

# ஸாளக்ராம பூஜை

பெருமாளுக்கு நைவேத்யம் (உணவு) பண்ணுமல் அதைச் சாப்பிடக் கூடாது என்று நம் சாஸ்த்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. அதன் அர்த்தமென்னவென்ருல் ஒவ்வொருவரும் தின்பண்டங்களைப் பெருமாளுக்குச் சமர்ப்பித்துவிட்டு (கொடுத்துவிட்டு) பிறகு அவைகளைப் பெருமாள் பிரஸாதமாகச் சாப்பிடவேண்டும். அந்த மாதிரி செய்தால் அந்தப் பண்டங்கள் உடலுக்கு ஒன்றும் கெடுதி செய்யாது. நைவேத்யம் பண்ணுவதை நாம் தினமும் பெருமாளைச் சேவிக்கும்பொழுது வைத்துக் கொள்ளலாம். அதாவது நாம் பெருமாளை தினம் சேவித்தாக வேண்டும். ஏனென்ருல் அப்பொழுதுதான் நமக்கு அவர் உதவிபுரிவார். அவரும் ஸ்ரீமத் கீதையில் "தன்னை மாத்திரம் வேறே ஒருவரையுமில்லாமல் பூஜிக்கிறவர்களின் யோக க்ஷேமங்களை பார்த்துக் கொள்ளுகிறேன்" என்று அர்ஜுனனுக்கு உபதேசம் செய்திருக்கிருர். மேலே சொன்ன பெருமாள் வாக்யத்தில் "தன்னை மாத்திரம் வேரே ஒருவரையுமில்லாமல்" என்றதற்கு அர்த்தம் என்னவென்ருல், ஜனங்கள், தேவதைகளில் சேர்ந்தவர்களையும், தைவத்தன்மை உடையவர்களென்று எண்ணப்பட்டவர்களையும் தான் சாதாரணமாகப் பூஜிக்கிருர்கள். இவர்களை யல்லாமல் தன்னை (பெருமாளை) மாத்திரம் ஆராதனம் (பூஜை) பண்ணவேண்டும். அதாவது தன்னை பூஜை பண்ணினுலே போதுமானது. தான்மற்றவர்கள் கொடுக்கப்போகும் பலங்

களை விட அதிகமாக கொடுப்பாராதலால். பெருமாளும் தன்னை யாராவது அழைப்பார்களோ என்று காத்துக்கொண்டிருக்கிருராம். ஆனுல் அவர் அழைக்கப்படுகிற தில்லையாம். அதற்கு கலியுக தோஷம் காரணமாகும் என்று சொல்லலாம். அதாவது கலியுக தர்மம் பெருமாளை ஸேவிக்கக்கூடாது என்பது. அதைத் தழுவித்தான் கலியுகத்தில் இருப்பவர்கள் அனுசரிப்பார்கள்.

ஸ்ரீமத் கீதோபதேசம் (அர்ஜுனனுக்கு பெருமாள் பண்ணினது) வேதத்தை ஒப்புக் கொள்ளுகிறவர்களுக்கு. கிருஸ்தவர்கள், துருஷ்கர்கள், பௌத்தர்கள் முதலியவர்கள் வேதத்தை ஒப்புக் கொள்ளாமல் அவரவர்களுடைய குருக்கள் சொல்லிக் கொடுத்த விஷயங்களைக் கைப்பற்றுகிருர்கள். அதாவது அவர்களுடைய கர்மங்கள் எப்படி எப்படி செய்யச்சொல்லப்படுகிறதோ, அதைச் செய்கிருர்கள். ஆனுல் அவர்களுடைய கர்மம் வேதத்தை ஒத்துக்கொள்ளச் சொல்லாததால் அவர்களும் வேதத்தை ஒப்புக்கொள்வதில்லை.

இது அவர்களுக்குப் பெருமாள் வேண்டுமென்றே அவர்கள் முன் ஜன்மங்களில் செய்த பாவத்திற்காகப் பண்ணிவைத்தது இவர்களைத் (மேலே சொன்னவர்கள்) தவிர இன்னம் வேதத்தை ஒப்புக்கொள்கிற சைவர்கள் மாதிரி சில பேர்களிருக்கின்ருர்கள். அவர்கள் தங்களுடைய குருக்கள் ஸ்ரீமத் கீதைக்கு எப்படி அர்த்தம் சொல்வார்களோ அதைக் கைப்பற்ற வேண்டும்.

பெருமாளை அநேக விதமாக ஆராதனம் பண்ண லாம். அது என்னவென்றால், மானஸீகமாக ஆராதனத்தை செய்வது. அதாவது பெருமாள் ரூபத்தை மனசில் த்யானம் (சிந்தித்தால்) பண்ணி அதற்கு பூஜை செய்வது. கோவிலுக்குப் போய் பெருமாளை ஸேவிப்பது இரண்டாவது விதம். கோவில்களில் பிரதிஷ்டை பண்ணியிருக்கிற பெருமாளை தர்சனம் பண்ணி அவருக்கு பூஜை செய்யச் சொல்வது. மூன்றாவது விதமாவது ஸாளக்கிராமங்களை (பெருமாள் அந்த சிலைகளில் வசிக்கிறார்) தங்கள் அகங்களில் (வீட்டில்) வைத்துக்கொண்டு பூஜை செய்வது. இதுதான் எல்லாவற்றையும் விட மேலானது (கீழ் சொல்லியிருக்கிற காரணங்களால்). நான்காவது விதம் பஜனைக் கூடங்களில் பெருமாள் படங்களை வைத்துக்கொண்டு எல்லோரும் சேர்ந்து பஜனை பண்ணுவது.

மானஸிக பூஜை மிகவும் கஷ்டமானது. அது யோகிகளுக்குத் தான் தகுதியாயிருக்கும்.

பஜனை செய்வது இது எல்லாரும் (ஜாதி வித்யாசமில்லாமல்) சேர்ந்து செய்வதால் ஸரியாக வராது. இதில் தகாதவர் ஸகவாஸம் ஏற்படும். இது இப்பொழுது கலியுகத்தில் அதிகமாக நடமாடுகிறது. இதிலிருந்து அது எப்படியிருக்கும் என்று தெரிந்து கொள்ளலாம்.

சாளக்ராம பூஜை :—ஸாளக்கிராமமென்ற ஒரு சிலை இந்தியாவின் வட கிழக்கிலிருக்கிற கண்டகீ என்னும் நதியில் அகப்படுகிறதாம். ஒவ்வொரு சிலைகளி

லும் பெருமாளுடைய வெவ்வேரு மூர்த்தங்களிருக்கிறதாம். அவர்வர்களுக்கு வேண்டிய பெருமாள் மூர்த்தங்களிருக்கிற சாளக்கிராமத்தை சரியாகப் பரிக்ஷை பண்ணிய பிறகு அதை அகத்தில் வைத்துக் கொண்டு பூஜை செய்யலாம். அதுவும் தானே செய்யலாம். அதற்கு பூஜாவிதியும் மிகவும் சுலபமாக இருக்கும். ஸாளக்கிராமத்துக்குப் பதிலாக பெருமாள் விக்ரகத்தை அகத்தில் வைத்துக் கொண்டு ஆராதனம் செய்யலாம். ஆனல் ஆராதனம் சரியாகச் செய்யவேண்டும். இல்லாவிட்டால் கெடுதி சம்பவிக்கும். ஸாளக்கிராம பூஜை அப்படி அல்ல. ஒரு நாள் பூஜை செய்ய முடியாமல் போனலும் பாதகமில்லை. அப்புறம் ஸாளக்கிராமத்திற்கு பால் அபிஷேகம் செய்தால் போதும்.

**கோவிலிலிருக்கிற பெருமாள் பூஜை**:—இதற்கு ஒரு இடத்தில் கோவிலைக்கட்டி அதன் கர்பகிருஹத்தில் பெருமாளை ப்ரதிஷ்டை செய்கிறது. இடத்தை மந்திரங்களால் சுத்தம் பண்ணி ஒரு பெருமாள் பிம்பத்தை (எந்தப் பெருமாள் ரூபம் வேண்டுமோ அதை) அதற்கு தகுந்த மந்தரங்களைச் சொல்லி ஸ்திரமாகயிருக்கும்படிச் செய்தல். அந்த மாதிரி செய்தால் பிம்பத்திற்கு மூர்த்திகரம் வரும் என்று நம் சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த மாதிரி செய்த பெருமாளை ஸேவிக்கலாம். ஆனல் இங்கே பெருமாளை ஆராதனம் பண்ண முடியாது. அதற்கு (பெருமாளுக்கு ஆராதனம் பண்ணுவதற்கு) யார் கோவிலில் அதிகாரிகளால் நியமிக்கப்

பட்டிருக்கிறரோ, அவர்தான் அதைச் செய்யவேண்டும். மற்றவர்கள் அவரை பூஜை செய்யச் சொல்ல வேண்டும். இப்பொழுது கோவில்களெல்லாம் அசுத்தமாகப் போய்விட்டது. ஏனென்ருல் சர்க்காரால் கோவிலுக்குள்ளே பிரவேசிக்கக்கூடாத ஹரிஜன் என்று பெயரிடப்பட்டவர்களை (சில பேர்களை கோவிலுக்குள்ளே போகக் கூடாதென்றும், போனுல் அது அசுத்தம் ஆகிவிடுமென்றும் அப்பொழுது அங்கே இருந்த பெருமாள் ஓடிப் போய்விடுவாரென்று சாஸ்திரங்களில் சொல்லப் பட்டிருக்கிறது) உள்ளே பிரவேசிக்க அனுமதி கொடுக்கப்பட்டதனுல் அவர்கள் உள்ளே போய்க் கொண்டு வருகிருர்கள். இதைப்பார்த்து நம் பெரியோர்கள் ஸபைகூடி இனிமேல் ஒருவரும் கோவிலுக்குளளே போகக்கூடாது என்று தீர்மானம் பண்ணி இருக்கிருர்கள். ஆகையால் இப்பொழுது கோவிலுக்குப்போய் பெருமாள் பிம்பத்தை ஸேவிக்கக்கூடாது. ஆனுல் இந்தக் காலத்தில் பெரியோர்கள் சொல்லுகிறதை கேட்கிற தில்லையாதலால் எல்லோரும் கோவிலுக்குப்போய்க்கொண்டிருக்கிருர்கள். அவர்கள் சொன்னுலும் கேழ்க்கமாட்டார்கள். அவர்களைப் போகாமல் தடுக்கவும் முடியாது. ஆகையால் மற்றவர்கள் கோவிலுக்குப் போவதை விட்டுவிட்டு வேறுவிதமான பெருமாள் ஸேவையைக் கைப்பற்ற வேண்டும். அது என்னவென்ருல் அவரவர் அகத்திலேயே ஸாளக்ராமத்தை வைத்துக் கொண்டு பூஜை செய்ய வேண்டும். அது தானுக அல்லது மற்றவர்களை வைத்துக்கொண்டு செய்தால் நலமாகும்.

## பகவன் நாம ஸங்கீர்த்தனம்

இப்பொழுது நடக்கிற காலத்தில் எல்லோரும் பகவன் நாம ஸங்கீர்தனம் பண்ணவேண்டும். ஏனென்றுல் அது நல்ல பலனைக்கொடுக்கும் அந்தக் காரியம் எப்பொழுதுமே (எல்லா காலத்திலும்) செய்யப்பட்டால் மிகவும் விசேஷ பலனைத்தரும். ஆனுல் அது அஸாத்யமான காரியம், எல்லோராலும் செய்ய முடியாது. அப்பொழுது என்ன செய்ய வேண்டுமென்றுல் பகவன் நாம ஸங்கீர்தனம் பண்ண முடியாத காலங்களில் பெருமாளுடைய நினைவு வரும்படியான காரியங்களைச் செய்ய வேண்டும். அப்படிப்பட்ட கார்யங்கள் என்னவென்றுல்:- பெருமாளைப்பற்றி சொல்லியிருக்கும் க்ரந்தங்களைப் (புஸ்தகங்கள்) படிப்பது; பெருமாளைப் பற்றி கதா காலக்ஷேபம் பண்ணுவது, (தானே அல்லது பிறரால் பெருமாளைப்பற்றி சில பேர்களுக்குச் சொல்லச் செய்வது), பெருமாளைப்பற்றி கானம் (ஸங்கீதம்) பண்ணுவதைக் கேட்பது, எல்லோரும் சேர்ந்து பெருமாளை பஜனம் (வணங்குதல்) பண்ணுவது பஜனைக் கூடத்தில்; கோவிலுக்குப் போய் பெருமாளை ஸேவிப்பது முதலியன.

**க்ஷேத்ராடனம்** :—புண்ய இடங்களான க்ஷேத்ரங்களுக்கு போயிவிட்டு வருவது.

**தீர்த்தாடனம்** :—புண்ய நதிகள், தடாகங்கள் குளங்கள் ஸமுத்ரங்கள் முதலிய இடங்களுக்குப் போய் ஸ்நானம் செய்வது; திருப்பதி முதலான வெளியூர்

களுக்குப் போய் அவ்விடத்தில் இருக்கின்ற பெருமாளை ஸேவித்து விட்டு வருவது, இந்த மந்திரி கார்யங்களை அவரவர் ஆயுஸ்ஸில் ஒரு தரமாவது செய்யவேண்டும். மேலே சொல்லியிருப்பதற்கு என்ன தாத்பர்யம் என்றால் எல்லாரும் எந்த விதமான காரியத்தைச் செய்தாவது பெருமாளைப்பற்றி நினைத்துக் கொண்டிருக்க வேண்டும் அவரவர்கள் ஆயுஸ் முடிகிறவரையில். இந்த விஷயத்தைப் பற்றி அவரவர்களுடைய ஆசார்யர்கள் அவரவர்களுக்கு உபதேசிப்பார்கள் (கற்பிப்பார்). ஆகையால் ஒவ்வொருவரும் முதலில் ஒரு ஆசார்யாரை சரணம் அடைய வேண்டும். அவருக்குத்தான் யார் யாருக்கு என்ன உபதேசம் பண்ண வேண்டும் என்று தெரியும். ஆகையால் அவரைத்தான் முதலில் எல்லாரும் வணங்க வேண்டும். பிறகு பெருமாளை பூஜிக்க வேண்டும்.

மேலே சொல்லியிருக்கிறது மட்டும் போதுமான கார்யமா இந்த கலியுகத்தில் இருக்கிற லோக வாசிகள் நல்லகதி அடைவதற்கு, என்று கேட்டால், போதாதது தான். ஏனென்றால் பெருமான் ஒவ்வொருவரும் லோகத்திலிருக்கிற வரைக்கும், சில கார்யங்களைச் செய்தே ஆகவேண்டுமென்று கட்டளையிட்டிருக்கிறதை நம் சாஸ்திரங்கள் வெளியிட்டு இருக்கின்றன. அந்தக்காரியங்களைப் பற்றி ஆசார்யார்களே தங்களுடைய சிஷ்யர்களுக்கு உபதேசிப்பார்கள் (கற்பிப்பார்). ஆகையால் அதைப்பற்றி இங்கே ஒன்றும் சொல்லப்படவில்லை.

# லோக ச்ருஷ்டி.

மஹாபக்தன் பெருமாளைப் பற்றி வ்யாஸங்களை எழுதியிருக்கிருன். அவைகளில் அவருடைய லீலா விசேஷத்தைப்பற்றி சில விடங்களில் கொஞ்சம் குறிப்பிட்டிருக்கிறது. இப்பொழுது அதைப்பற்றி இங்கே கொஞ்சம் விரிவாக எழுதுவோம்.

லீலை என்பது விளையாட்டு என்று அர்த்தமாகும். விளையாட்டு என்னத்திற்காக, என்ன ப்ரயோஜனம் அதனுல் அடையப்படுகிறது. ஒரு கார்யம் செய்வது ஏதாவது ப்ரயோஜனத்தை உத்தேசித்து தான் செய்யப்படுவதால், என்று கேட்டால் :—அதை காண்பதே சுகத்தை தரும். அது ஒரு நாடகமாக பூலோக மேடையில், பூலோகத்திலிருப்பவைகளை நடிப்பவர்களாக வைத்துக் கொண்டு நடத்தப்படுகிறது. அந்த நாடகம் பெருமாளுக்கு மிக சுகத்தை உண்டுபண்ண வேண்டும். இல்லாவிட்டால் அதை ஏன் நடத்துவார்? நடத்த மாட்டார்.

பெருமாள் பூர்ணமானவர் என்று சொல்லப்படுவார். அதாவது அவரிடத்தில் லோகத்தில் என்ன என்ன விஷயங்களிலிருக்கின்றனவோ அவைகளெல்லாம் அவரிடத்தில் குடிகொண்டிருக்கின்றன. ஆகையால் லோக நாடகம் நடத்துவதற்கு எல்லா ஸாமன்களும் அவரிடத்திலேயே இருந்தபடியால்

அவருக்கு அந்த நாடகத்தை வெகு ஸுலபமாக நடத்த முடிந்திருக்க வேண்டும்.

பெருமாள் மேலே சொன்ன கார்யத்தைச் செய்வதற்கு தன்னுடைய வ்யூக அவதாரங்களை எடுத்துக் கொண்டார். முதலில் வாஸுதேவன் என்ற அவதாரத்தை தன்னுடைய ஆறு குணங்களோடு (ஞானம், பலம், ஐச்வர்யம், வீர்யம், சக்தி, தேஜஸ்) எடுத்து, பிறகு வரிசையாக வாஸுதேவனிடமிருந்து ஸங்கர்ஷணனையும், ஸங்கர்ஷணனிடமிருந்து ப்ரத்யும்னனையும், ப்ரத்யும்னனிடமிருந்து அநிருத்தனையும் உற்பத்தியாகச் செய்தார். "மேலே சொன்ன நாலு பேர்கள் (வாஸுதேவன், ஸங்கர்ஷணன், ப்ரத்யும்னன், அநிருத்தன்) பெருமானுடைய பூர்ணாவதாரம். அதற்குப் பிறகு தன்னுடைய பூர்ணாவதாரம் எடுப்பதை, கீழ்லோகமெல்லாம் அசுத்தமா யிருப்பதால் போகக்கூடாது என்று நிறுத்திக் கொண்டார் பெருமாள் என்று அடியேனுடைய ஆசார்யார் அடியேனுக்கு மொழிந்திருக்கிறார். ஆகையால் பெருமாள் வேறே ஒரு உபாயத்தை எடுத்துக் கொண்டார், தன்னுடைய லோக நாடகத்தை நடத்துவதற்குப் போனும். அது என்னவென்றால் :—

அவர் முதல் முதலில் பூலோகம் என்ற நாடகமடையை சிருஷ்டித்தார். அதாவது உண்டு பண்ணினார். அது மாத்ரமல்லாமல் இன்னும் ஆறு லோகங்களான நாடக மேடைகளையும் உண்டு பண்ணினார். ஏனென்றால் பூலோகத்திலிருக்கிறவர்

களைத் தவிர இன்னம் அனேகமான நடிகர்களுக்காக. ஆகமொத்தம் ஏழு லோகங்கள். அதில் பூலோகத்தை நடு நாயகமாக (நடுவில்) வைத்து சிருஷ்டிக்கப்பட்டன பெருமாளால்.

பிறகு மேலே சொன்ன நாடக மேடைகளில் நடிப்பதற்கு நடிப்பவர்களை சிருஷ்டிக்க ஏற்பாடு செய்தார். அது:—பெருமாள் தன்னுடைய நாபியிலிருந்து உண்டான கமலத்திலிருந்து (தாமரைப்பூ) ஒரு புருஷனை வெளிக்கிளப்பினார். இவர்தான் ப்ரம்மா என்று அழைக்கப் பட்டிருக்கிறார் ஜனங்களால். இவர் முதலில் ஐந்து சிரசுகளை (தலைகளை) உடைத்தாயிருந்து பிறகு ஒரு சிரசு வெட்டப்பட்டு நாலு சிரசுகளுடன்தான் இருக்கவேண்டியதாயிற்று, தன் ஆயுஸ் முழுவதும். அதனால் அவருக்கு குறை வந்ததாகத் தெரியவில்லை. இவரை என்னத்திற்காக பெருமாள் வெளிக்கிளப்பினாரென்றால் லோகங்களான நாடகமேடைகளில் நடிப்பவர்களை சிருஷ்டித்து அவைகளை நடிக்கத் தயார் செய்வதற்கு. அந்தக் கார்யத்தை செய்து பூர்த்தி பண்ணுவதற்கு பெருமாள் இவருக்கு எல்லா சௌகர்யங்களையும் கொடுத்தார். அதாவது அவரே இவருடைய சரீரத்திற்குள் அந்தர்யாமி (உள்ளே யிருப்பது) யாக விருந்து எல்லாவற்றையும் நடத்தினார். இப்படிச் செய்தது பெருமாளுடைய வ்யூகாவதாரத்தில் ஒருவரான அநிருத்தன் என்பவர். இவர் [மற்ற வ்யூக அவதாரர்களான வாஸுதேவர், ஸங்கர்ஷணர், ப்ரதயும்னர் என்றவர்கள் பூலோகத்திற்கு வாராமலேயிருந்து விட்டவர்கள்.]

பூலோகத்திற்கு வந்து க்ஷீராப்தியிலிருந்து கொண்டு ப்ராம்மாவுக்கு வேதத்தைக் கற்பித்து அதில் சொல்லியிருக்கிறபடி, லோகங்களிலிருக்கிற எல்லாவற்றையும் ஸ்ருஷ்டி பண்ணச் சொல்லி அவைகளை நடிகர்களாக ஏற்பாடுபண்ணச் சொன்னார். ப்ரம்மாவானவர் பெருமாளுடைய (அநிருத்தன்) கட்டளையை சிரசில் வஹித்துக் கொண்டு லோகங்களில் ஸ்ருஷ்டி கார்யத்தை (ஆத்மாக்களுக்கு சரீரம் கொடுப்பது லோகத்தில் நடிப்பதற்கு) பூர்த்தி செய்தார். இந்தக் கார்யத்தை தான், ராஜஸ குணத்தை வைத்துக் கொண்டு பண்ணினார். முதலில் தாமஸ குணத்தோடிருக்கிற ஸ்தாவரங்களையும் (புல், பூண்டு, விருக்ஷங்கள், கல், மண்), தன்னுடைய கீழ்பாகத்திலிருந்து உண்டு பண்ணினார். பிறகு தன்னுடைய ராஜஸ குணத்தை வைத்துக் கொண்டு ஜங்கமங்களை உண்டு பண்ணினார். பிறகு தன்னுடைய மேல் பாகத்திலிருந்து ஸத்துவ குணங்களோடு கூடின தேவதைகளைக் கிளப்பினார். அடுத்தபடியாக ப்ரம்மாவின் நடுப்பாகத்திலிருந்து (இதனால் அவர்கள் நடு நாயகமாக விருக்கிற பூமி (பூலோகம்) யில் வைக்கப்பட்டார் போலும்) ஸத்வ, ராஜஸ, தமோ குணங்களோடு கூடின மனுஷ்யர்களை உற்பத்தி பண்ணினார். மிகவும் தாமஸ குணத்தோடு கூடின ராக்ஷஸர்களை ப்ரம்மா தன்னுடைய கீழ் பாகத்திலிருந்து உற்பத்தி பண்ணினார்.

பிறகு சிருஷ்டித்தவைகளையெல்லாம் எந்த எந்த லோகத்தில் வைக்க வேண்டுமோ அந்த

மாதிரி எல்லாவித ஸௌக்கியங்களோடு வைத்தார். அவைகளைக் காப்பாற்றும் பொறுப்பை பெருமாள் தானே எடுத்துக் கொண்டு அந்தக் கார்யத்தை செய்வதற்கு திருமூர்த்திகளில் ஒருவரான விஷ்ணு என்ற தன் அவதாரத்தை எடுத்து அந்தக் கார்யம் அவரால் நடத்தப் பெறுகிறது.

சிருஷ்டித்தவைகளெல்லாம் நாசம் அடைவதற்கு ஒரு ஏற்பாடு செய்தார் ப்ரம்மா. அது என்னவென்றால். தான் தாமஸ குணத்தோடு (அந்தக் நாசம் அடையும்படி செய்கிற கார்யம் தாமஸ குணத்தோடு இருக்கும்பொழுது தான் செய்யக்கூடுமாதலால்) இருந்தபொழுது ருத்ரனை (சிவனை) சிருஷ்டித்து அந்தக் கார்யத்தைச் செய்ய அவரை நியமித்தார். ருத்ரனும் அந்தக் கார்யத்தைச் செய்வதற்குப் பெருமாளுடைய வ்யூஹாவதாரத்தில் ஒருவரான ஸ்ரீ சங்கர்ஷணரை த்யாநம் பண்ணிக்கொண்டு யமன் மூலமாக அந்தக் கார்யத்தை நடத்துகிறார். அதனால் அவர் (சிவன்) ஸம்ஹார கர்தா என்றுபெயர் வாங்கியிருக்கிறார்.

ப்ரம்மா தன் மனஸிலிருந்து ஸநகாதிகளை (ஸநக, ஸநாதன, ஸநந்தன, ஸநத் குமாரன்) ஸிருஷ்டித்து ப்ரஜாவிருத்தி செய்ய சொன்னதை அவர்கள் தாங்கள் அந்தக் கார்யத்தில் ப்ரவேசிக்க மாட்டோம் என்று சொன்னதன் பேரில் வேறு ரிஷிகளை சிருஷ்டித்து அவர்களுக்கு பத்னிகள் உண்டுபண்ணி ப்ராஜா உற்பத்தி கார்யத்தைச் செய்யச் சொல்ல, அவர்களும் அப்படி ப்ராஜா விருத்தி செய்தார்கள்.

அவர்களுடைய ஸந்ததிகள் தான் இப்பொழுது பூமியில் வாழ்ந்து கொண்டிருக்கின்றன.

மேலே சொல்லியிருக்கிற ப்ரம்ம சிருஷ்டி (ப்ரம்மாவால் செய்யப்பட்ட சிருஷ்டி கார்யம்) மிகவும் அஸாத்யமான கார்யமாதலால் இத்துடன் இந்த வ்யாஸத்தை நிறுத்திக் கொள்ளுகிறேன். வேண்டுமானால் இதைப்பற்றின விஷயம் ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் கொஞ்சம் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருப்பதை வாசித்துத் தெரிந்து கொள்ளலாம். இந்த விஷயம் (சிருஷ்டி) எல்லாரும் அவசியமாகத் தெரிந்துக் கொள்ள வேண்டும், பெருமாள் தான் தன்னுடைய லீலாவிஷயங்களை யெல்லாம் மற்றவர்கள் மூலமாக நடத்துகிறாராதலால்.

---

# யுகங்கள்

பெருமாள் உத்யோகஸ்தர்களையும், சிப்பந்திக்களையும் வைத்துக் கொண்டும், தானும் பூமியில் அவதாரங்களெடுத்தும் பூலோகத்தை அரசு புரிகிருரென்று மஹா பக்தன் முன்பே எழுதியிருக்கிருன். அந்தக் கார்யத்தை நடத்துவதற்கு ஒரு அளவு (அதாவது கார்யங்கள் ஆரம்பமாகி முடிய வேண்டுமல்லவா? அதற்கு அளவு) வேண்டும். இல்லாவிட்டால் கார்யங்கள் ஒன்றுக்கொன்று "சண்டை" போட வேண்டியிருக்கும். அதைத் தடுப்பதற்கு அளவு (அதாவது எவ்வளவு சமயங்களில் கார்யங்கள் நடக்க வேண்டும் என்பது) ஏற்படுத்த வேண்டும். அந்தக் காலத்தைப் பெருமாள் நிர்ணயம் பண்ணி, அதை நான்கு பாகங்களாக பிரித்திருக்கிருர். அந்த பாகங்களாவன :— கிருத அல்லது சத்ய யுகம், த்ரேதாயுகம், த்வாபரயுகம், கலியுகம். கலியுக பாகம் ஒன்ருனல், த்வாபரயுகத்தின் பாகம் இரண்டாகவும், த்ரேதாயுகத்தின் பாகம் மூன்ருகவும், கிருதயுகத்தின் பாகம் நான்காகவுமிருக்கும் கால அளவு. அவைகளை இப்பொழுது நடக்கிற மனித வர்ஷங்களாக ஆக்கிக் கொள்ள வேண்டும். இதைப்பற்றி நமது சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. அதைப்பார்த்து தெரிந்து கொள்ளலாம்.

இப்பொழுது ஒவ்வொரு யுகத்திலும் பூலோகத்தில் என்ன என்ன விசேஷங்கள் நடக்குமென்பதைப்பற்றி விசாரிப்போம்.

முதலில் க்ருதயுகம் தான் ஸ்ருஷ்டி ஆனபிறகு நடக்கும். அதற்கு ஸத்யயுகமென்று இன்னொரு பெயர். அதாவது அந்த யுகத்தில் நடப்பதெல்லாம் ஸத்யமாக அதாவது நமது சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறபடி ஒன்றும் தவறாமல் எல்லாக் கார்யங்களும் நடக்கும். அப்பொழுது, அதாவது ஸ்ருஷ்டிக்கப்பட்டவைகளெல்லாம் தங்கள் தங்கள் கார்யங்களை நமது சாஸ்திரங்களில் விதித்தபடிக்குச் செய்வது. அவைகள் பெருமாளுக்குப் மிக பிரியமுள்ளவைகளாக ஆகும். ஏனென்றால் அவைகள் பெருமாள் சொல்படி (அதாவது பெருமாளால் செய்யப்பட்ட சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறபடி) குறை ஒன்றுமில்லாமல் நடந்து கொள்ளுங்கள். மேலும் இந்தயுகம் புதிதாக ஆரம்பிக்கப்படுமாகையால் (எப்பொழுதும் ஆரம்பத்தில் எல்லாம் சரியாக நடக்கும்). இந்த யுகத்திலிருப்பவைகளுக்கு ஆயுஸ் (ஜீவிக்கிற காலம்) மற்ற யுகங்களிலிருப்பவைகளை விட அதிகமாகவும் (460 வர்ஷங்கள்), இதைவிட அதிகமாகயிருக்கும்படிக்கும் தபஸ் (பெருமாளை த்யானம் பண்ணுவது) செய்து, செய்து கொள்வார்கள். ரூபம் மிகப்பெரியதாய் (மற்ற யுகங்களிலிருப்பவைகளுடைய ரூபத்தைக் காட்டிலும் பெரிது) இருக்கும். அந்தக் கார்யங்களின் பலனை அடைவதற்கும் நாளாகும் (கார்யங்கள் வெகு நாட்கள் செய்யப்பட்ட பின்புதான் பலன் விதிக்கும்). அடிக்கடி ஜன்மங்கள் அவைகள் எடுக்க வேண்டிய அவச்யமிராது. ஏனென்றால் ஜன்மங்கள் முந்திய ஜன்மங்களில் பண்ணிய பாபங்களை போக்கடிப்பதற்குத் தான் எடுக்கப்படவேண்டும், மேலும் முன் ஜன்மங்களில் பாபம் ஒன்றும் செய்திருக்க

மாட்டார்கள். அப்படியிருந்தால்தான் கிருத யுகத்தில் எல்லாம் சரியாச் சொல்ல முடியும். இந்த யுகத்தில் எல்லோரும் அநேக வர்ஷங்கள் தபஸ் செய்து பெருமாளை அடையவேண்டும். தர்மம் இந்த யுகத்தில், அதை நாலு கால்களுள்ள பசு வாக்கினல் நாலுகால்களையும் உடைத்தாயிருக்கும். அதாவது குறை ஒன்றுமில்லாமலிருக்கும்.

கிருத யுகத்திற்கு அடுத்தயுகம் த்ரேதாயுகம் என்று சொல்லப்படும். இதில் தர்மப்பசு ஒரு காலில்லாமல் மூன்று கால்களுடனிருக்கும். அதாவது அப்பொழுது ஜனத்தொகையில் முக்கால்பாகம் கிருதயுகத்திலிருந்தவர்கள் போல் எல்லாவற்றையும் (அதாவது புண்ணியமாக) செய்வார்கள். மற்ற கால் பாகம் பாபம் (ஒன்றும் சரியாக செய்யாமலிருப்பது). அவர்களுடைய ஆயுஸ் கிருத யுகத்திலிருப்பவர்களுடைய ஆயுளை விட குறைவாகத் (300 வர்ஷங்கள்) தான் இருக்கும். கிருத யுகத்திலிருப்பவர்கள் மாதிரி, அவர்கள் தர்மமார்கமான யக்ஞங்களை (யாகங்கள்) முக்கியமாகச் செய்வார்கள். பெருமாளுடைய அவதாரமான ஸ்ரீராமர் கூட ராஜ்யத்தை ஆண்டுகொண்டு வந்தபொழுது ஒரு அச்வமேத யாகம் பண்ணினர் என்று வால்மீகி ஸ்ரீமத் ராமாயணத்திலெழுதியிருக்கிறார். அவர்கள் கிருத யுகத்திலிருக்கிறவர்கள் போலல்லாமல் கொஞ்சம் க்ஷீண தசையை அடைந்திருப்பார்கள்.

சதுர் யுகத்தில் மூன்ருவதான யுகம் துவாபர யுகம். இதில் தர்மத்திற்கு இரண்டு கால்கள் தானிருக்கும். அதாவது புண்யம் செய்தவர்கள் பாதியும், பாபம் பண்ணியவர்கள் பாதியும் ஜனத்தொகையில்

காணப்படும். அதாவது இந்த யுகத்தில் க்ஷீண தசையில் இருப்பவர்கள் ஜனத்தொகையில் பாதியாக இருப்பார்கள். இப்பொழுது ஜனங்கள் ஞான மார்கம், யாகம் செய்வது, பெருமாளை பூஜை செய்வது முதலியவைகளில் ஈடுபடுவார்கள். ஒரு துவாபரயுகத்தில் ஸ்ரீ க்ருஷ்ணன் தன்னையே (பெருமாளையே) இந்த்ரனுக்குப் பதிலாக பூஜை செய்யும்படி யாகத்தன் தகப்பனுரான நந்தனுக்குச் சொல்லியிருக்கிறுர்.

கலியுகம் தான் கடைசியுகம். சதுர்யுகத்தில் இப்பொழுது 27-வது தடவையாகக் கலியுகம் நடக்கிறது. இதில் முதல் பாகம் தான் தற்சமயம் நடந்து கொண்டிருக்கிறது. தர்மம் இந்த யுகத்தில் மிகவும் குறைந்து ஒரு காலுடனிருக்கும். அதாவது பாபம் பண்ணினவர்கள் தான் மிகவும் ஜாஸ்தியாக இருப்பார்கள். அதாவது இப்பொழுது ஜனிப்பவர்கள் அவர்களுடைய முன்ஜன்மங்களில் பாபங்களைச் செய்தவர்களாக இருப்பார்கள். அவர்கள் அடிக்கடி ஜன்மங்களை எடுத்துத் தங்கள் பாபங்களையெல்லாம் போக்கிக் கொண்டு நல்லகதி அடையலாம். இவர்கள் மற்ற யுகங்களிலிருந்தவர்களை விட க்ஷீண தசையை அடைந்தவர்களாகயிருப்பார்கள், பெருமாள் அவர்கள் பேரில் கருணை கூர்ந்து, அவர்களைத் தூக்கிவிடுவார். ஆனுல் அவரை யார் பஜிக்கிறுர்களோ அவர்களுக்குத் தான் ஒத்தாசை புரிவார். இந்த யுகத்தில் வெகு சுலபமாக கார்யங்களைச் செய்து பலனடையலாம். ஆனுல் காரியங்களை ஒன்றும் சரியாகச் செய்யாமல் விபரீத

மாகச் செய்ய இச்சிப்பார்கள், செய்யவும் செய்வார்கள். ஆகையால் இந்த யுகத்தில் தான் வேலை ஜாஸ்தியாகவிருக்கும் பெருமாளுக்கு. இந்த யுகத்தில் 5000 வர்ஷங்களுக்கு மேல் பெருமாளேயே மறந்து விடுவார்களாம். அதாவது போகப்போக ஜனங்களில் முக்கால் பங்கு பெருமாளே பஜிக்காமல், இதர தேவதைகளேயும் மனுஷ்யர்களேயே தெய்வத் தன்மை அடைந்ததாக எண்ணியும் பஜிப்பார்கள். புராணங்களில் கலியுகத்தில் எல்லாம் எப்படி எப்படி நடக்குமென்று எழுதியிருக்கிறதை வாசித்தால் மிகவும் பயத்தை உண்டுபண்ணும். இதெல்லாம் அப்பொழுது ஜீவித்திருப்பவர்களுக்கு. அதனல் இப்பொழுதிருக்கிறவர்கள் என்ன செய்ய வேண்டுமென்றுல், பெருமாளேப் பிரார்த்தித்து இனிமேல் ஜன்மமில்லாத படிக்காவது அல்லது சீக்கிரத்தில் சில ஜன்மங்களெடுத்து நல்ல கதியை அடையும்படிச் செய்யச் சொல்ல வேண்டும். இதற்கு ஒரு ஆசார்யருடைய ஒத்தாசையை எதிர் பார்க்கவேண்டும். அதற்கு ஆசார்யர் சரியாக அகப்படுவாரா? என்றுல், அகப்படுவார். ஏனென்றுல் அவரவர்கள் பிறந்த உடனேயே அவரவர்களுக்கு ஆசாரியர் ஏற்பாடு செய்யப்பட்டிருப்பார். எதற்கும் பெருமாளேப் பிரார்த்தித்தால் அவர் கட்டாயமாக உதவி புரிவார் இந்த விஷயத்தில்.

இத்துடன் இந்த வ்யாஸத்தைப்பற்றி எழுதுவதை மஹாபக்தன் நிறுத்த வேண்டியதாயிற்று. ஏனென்றுல் கலியுகத்தைப்பற்றி கொஞ்சம் விஸ்தாரமாக எழுதும்படி அவனுக்கு உத்தரவு ஆகியிருக்கிறது.

---

# கலியுகம்

ஒன்றுக்கு மேலிருப்பவைகள் ஒரே மாதிரியாக இருக்கக்கூடாது. ஒரு மாதிரியாயிருந்தால் ஒன்றைப்பார்த்த பிறகு மற்றொன்று கவனிக்கப்படமாட்டாது. ஏனென்றால் இதுவும் முதலில் பார்த்ததைப் போல் தானிருக்குமென்று. மேலும் வெவ்வேறு மாதிரியாக யிருந்தால் தான் நல்லவைகள் கெட்டவைகளை விட சோபிக்கும். இதற்காகத்தான் பெருமாள் லோகத்தில் எல்லாம் ஒரு மாதிரியாக இல்லாமல் கொஞ்சமாயினும் அவைகளுக்குள் வித்யாஸமிருக்கும்படிச் செய்திருக்கிறார். உதாகரணமாக, நல்லவைகள் கெட்டவைகள், வெளிச்சம் இருட்டு, புமான் ஸ்த்ரீ என்றுப்போல் ஒன்றுக்கொன்று விரோதமாக இருக்கும்படி அவர் சிருஷ்டித்தவைகள் காணும்.

மேல் சொன்ன மாதிரிதான் பெருமாள் யுகங்களென்ற காலத்தை ஏற்படுத்தியிருக்கிறார். எப்படி என்றால் முதலில் யுகங்களின் பெயர்களையே வெவ்வேறுகயிருக்கும்படிச் செய்திருக்கிறார். அதாவது நான்கு யுகங்களாகப் பிரிக்கப்பட்டு கிருத, த்ரேதா, துவாபர, கலி என்று பெயரிடப்பட்டிருக்கிறது. அந்த யுகங்களில் க்ருதயுகம் என்பது முதலிலே லோகத்தில் நடக்கும்படி செய்யப்பட்டு, அதில் நடக்கிறவைகளெல்லாம் நல்லவை கோஷ்டியில் சேர்க்கப்பட்டிருக்கும். அதாவது எல்லா விஷயங்களும் நல்லவைகளுக்கு விரோதியான கெட்டவைகளுடன் ஸம்பந்தமே இல்லாமல் அல்லது மிகவும்

குறைவான அளவு உள்ள கெட்டவைகளுடைய ஸம்பந்தம் காணும். அது முழுவதும் நல்லவைகளாகக் காணுது. ஏனென்ருல் முழுமையும் நல்லதாயிருப்பது பெருமாளென்ற ஒருவரைத்தான் சொல்லக்கூடும்.

மற்ற யுகங்கள் க்ருதயுகம் போலில்லாமல் வேறுமாதிரியாகத்தான் இருக்கும், அவைகளில் கலியுகத்தைப்பற்றி விமர்சனம் செய்ய மஹாபக்தனுக்கு உத்திரவு வந்திருக்கிறபடியால் அதைப் பற்றி விசாரிப்போம் இப்பொழுது.

நம் சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிற " ராஜ்ய லக்ஷ்மீ ஒருவனை அடைந்து விட்டாள், அதனுல் அவன் ராஜ்யத்தை ஆளுகிருன்.'' " தயாதேவி பெருமாளை அடைந்து அவரை தயையுடனிருக்கும் படிச் செய்துவிட்டாள்.'' " குழந்தை ஸ்ரீக்ருஷ்ணனை தூக்கிக்கொண்டு போகும்பொழுது காராகிருகத்திலிருந்த பாராக்காரர்களை நித்ராதேவி அடைந்து விட்டாள். அதனுல் அவர்கள் தூங்கிக்கொண்டிருந்து விட்டார்கள்.'' " மாரியாத்தா (மாரியம்மன்) ஒரு பிரதேசத்தில் விளையாடுகிருள்". (அம்மை என்ற வியாதியால் ஜனங்கள் அங்கே பீடிக்கப்படுகிருர்கள்). இந்த மாதிரி சொல்லுகிறதற்கு அர்த்தமென்னவென்ருல் எல்லா விஷயங்களுக்கும் கண்ணுக்கு தெரியாதிருக்கும்படியான, தேவதைகள் (மனுஷாளைவிட பலமுள்ளவர்கள்) என்று பெயரிடப்பட்ட வஸ்த்துக்களும் பகவத் ஸ்ருஷ்டியில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இதன் பிரகாரம் மேலே சொன்ன வாக்யங்களில் சொல்லியிருக்கிற " ராஜ்ய

லக்ஷ்மீ'' "தயாதேவி'' "நித்ராதேவி,'' "மாரியாத்தா,'' என்று சொல்லப்பட்டவைகள் தேவதைகளின் பெயர்கள். அவைகள் அப்பொழுது தங்களுடைய சலுகையைச் (செல்வாக்கு) செலுத்துவார்கள், தங்களுக்கு பெருமாளால் கொடுக்கப்பட்ட அதிகாரத்தை வைத்துக்கொண்டு. மஹாபக்தனுடைய ஆசார்யர் நோவு சாத்திக்கொண்டிருந்தபொழுது தன் உடம்பில் வலி வந்தபொழுது வலிக்காரன் தன்னை உபத்ரவிக்கிறனென்று சொல்வார். இப்பொழுது வைத்தியர்கள் ஒருவனுக்கு வ்யாதி வந்தால் அந்த வியாதியின் புழு (தேவதை) வைக் கொன்றுவிட்டால் அவனுக்கு உடம்பு ஸ்வஸ்தமாகிவிடும் என்று சொல்லுகிறுர்கள். இவைகள் மேலே சொன்ன விஷயத்திற்கு உதாகரணங்கள்.

மேலே சொல்லியிருக்கிற பிரகாரம் கலியுகத்திற்கும் ஒரு தேவதையிருக்குமல்லவா? அது யார் என்றல்:—துவாபரயுகம் முடிந்த பின் (ஸ்ரீ க்ருஷ்ணன் தன் ஜ்யோதிக்குப் போனவுடன் கலியுகம் ஆரம்பமாயிற்று என்று சொல்லப்பட்டிருக்கிறது) பிரம்மா தன் பின் பாகத்தில் கோரமாயும், கறுத்தாயுமிருக்கிற "பாபத்தை'' சிருட்டித்தார். இந்த பாபத்தின் வம்சத்தில் க்ரோதம், ஹிம்சை என்ற பெண்ணின் வயற்றில் கலியை (கலிபுருஷன்) உண்டு பண்ணிற்று. அவன் பாபத்தையே உடம்பாகப் பெற்றவன். பயம், மிருத்யு (யமன்) நரகம் இன்னும் அனேக புத்திரர்கள் அவன் வம்சத்தில் பிறந்திருக்கிறுர்கள். அதனல் அவன் குலத்தில் நல்ல நடை போய் தீமையே பரவும். விஷய மிப்படியிருக்கும்

பொழுது அவன் யாரை தன் சிப்பந்தியாக்வைத்துக் கொண்டு தன்னுட்சியை நடத்துவான்? தன் குலத்திலிருப்பவர்களைத்தான் தன் சகாயத்திற்கு வைத்துக்கொள்வான். இப்பொழுது நடக்கிற கலியுகத்தில் கலியின் ஆட்சி எப்படியிருக்கின்றதென்று பார்க்கலாம்.

கலியுகத்தின் முதல் பாகம் இப்பொழுது நடக்கிறது. அதாவது கலியின் ஆட்சி ஆரம்பமாயிற்று என்று சொல்லலாம். அதாவது அந்த ஆட்சி, குழந்தை பர்வம் அடைந்திருக்கிறது. அதாவது மனிதர்களுக்கு வயது முதிர்ந்த பிறகுதான் அவர்கள் ஸ்வரூபம் தெரியும். அதே மாதிரி கலி ஆட்சி குழந்தை வளர்ந்து கொண்டே வந்து பிறகு கலியுகத்தின் நான்காம் பாகத்தில்தான் கலி ஆட்சி எப்படியிருக்குமென்று தெரியும். அது அப்பொழுது (நான்காம் பாகம்) இருப்பவர்களுக்குத்தான் தென்படும். இப்போதிருப்பவர்கள் அப்பொழுது இருப்பது நிச்சயமில்லாததால் அதைப்பற்றி (கலி ஆட்சி முழுவதையும் பற்றி) ஒன்றும் கவனிக்க வேண்டியதில்லை. ஆதலால் இப்பொழுது கலி ஆட்சி எப்படியிருக்குமென்பதைக் கவனிப்போம்.

முன்னாலேயே சொன்னபடி விஷயங்கள் க்ருதயுகத்தில் நடந்தாப்போல் நடக்காமல் அதற்கு நேர் விரோதமாகத்தான் இப்பொழுதிலிருந்தே பூமியில் நடந்துகொண்டு வரும். அதாவது எல்லாம் இப்படி இப்படி லோகத்தில் நடக்க வேண்டுமென்று பெருமாளால் ஏற்படுத்தப்பட்ட கட்டளையை மீறி நடக்கும். இதை இப்பொழுது ப்ரத்யக்ஷமாகப் பார்க்

கலாம். இந்தியாவை விட வேறு தேசங்கள் (பூமி) ஆதிபத்யம் (ஆளுகை) அடைந்திருக்கின்றன. (அதாவது பலமுள்ளவைகளாக இருக்கிறதுகள்) இந்த மாதிரி மற்ற யுகங்களில் அவைகளிருக்க வில்லே. ஆதலால் அவைகள் முன் யுகங்களில் இருந்த மாதிரியில்லாமல் அதற்கு நேர் விரோதமாக இருக்கிறதுகள். மற்ற எல்லா விஷயங்களேப் பார்த் தாலும் அப்படியேதானிருக்கும். ஒரு வேளை சில விஷயங்கள் அப்புறம் முழு விரோதமாவதற்கு ஆரம்பம் பண்ணியிருக்கலாம். இந்த மாதிரி நடக் கிறதை எல்லோரும் ப்ரத்யக்ஷமாகப் பார்த்துக் கொள்ளலாம். மேலும் எப்பொழுதும் நல்லதை (பெருமாள் செய்யச் சொல்லிய கார்யங்களேயே) கூடிய வரையில் செய்ய வேண்டும். நல்ல விஷயங் களேப் பற்றியே காதால் கேட்கவேண்டும். மொத்த மாகச் சொல்லின் பெருமாள் ஞாபகமாகவே இருக்க வேண்டும். ஆகையால் கலியுகத்தில் நடப்பவைக ளெல்லாம் காதுக்கு இனிமையாகயில்லாமல் தானி ருக்குமாதலால், இத்துடன் விஷயங்கள் சொல்லா மல் நிருத்தப்பட்டிருக்கிறது.

கலி புருஷன் ஒன்றும் ஸரியாக லோகத்தில் நடத்தாததினுல் அவனே வெறுக்கவும் தூஷிக்கவும் கூடாது. அவன் அவனுக்கு பெருமாளால் கொடுக் கப்பட்ட கார்யங்களேச் செய்கிருன். அதை சரியாகச் செய்யாதபோனுல் அவனே பாபம் பிடித்துக்கொள் ளும். ஒரு நாடகத்தில் தோட்டி வேஷம் போடுகிற மாதிரி பெருமாள் சொன்ன காரியத்தைச் செய்து பெருமாளுக்கு உதவி புரிகிருன். அது மிகவும்

விசேஷமானதல்லவா? ஆகையினால் மஹா பக்தனின் ஆசார்யர் அவனுக்கு சொல்லியிருக்கிறார்: ஒருவன் உடம்பில் நவ (ஒன்பது) த்துவாரங்களிருக்கின்றன. அவைகளில் கடைசி (கீழ்பாகம்) யிலிருக்கிற த்வாரத்தை உடம்பிலிருக்கிற மலங்களை வெளிப்படுத்துவதனால், மிகவும் மட்டமென்று கருதுவார்கள். அது சரியல்ல. ஏனென்றால் அது ஒரு முக்கியமான காரியத்தைச் செய்கிறது. அப்படிச் செய்யாவிட்டால் மலங்கள் உடம்புக்குள்ளேயிருந்து கொண்டு உடம்புக்கே கெடுதலை அளிக்கும். அந்த மாதிரி கலி, கலியுக தர்மத்தை நடத்துகிறான். ஆகையால் அவன்மேல் குற்றம் ஒன்றும் சொல்லக் கூடாது.

இந்த யுகத்தில்தான் பெருமாளுக்கு வேலை ஜாஸ்தியாக இருக்கும். அதனால் கஷ்டப்படவேண்டியிருக்கும். என்ன செய்வது. தன் லீலைக்காக தான் செய்து கொண்ட வேலை. இருந்தபோதிலும் நாம் இந்த ஸமயத்தில் என்ன செய்ய வேண்டுமென்றால் நமக்காகப் பெருமாள் ஒன்றும் சிரமம் எடுத்துக் கொள்ளாமலிருக்கும்படியாக நடந்து கொள்ள வேண்டும். அது எப்படியென்றால் நாம் ஒரு ஆசார்யரை அடைந்து அவரை "பரந்யாஸம்" பெருமாளிடத்தில் பண்ணச் சொல்லி அப்புறம் அவர் எப்படி எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்று உபதேசிக்கிறாரோ அந்த மாதிரியாக அவரவர்கள் (புருஷர்களும், ஸ்த்ரீகளும், புருஷந்தான் ஸ்த்ரீகளுக்கு ஆசார்யன்) தங்கள் ஆயுஸ் (பூமியில் ஜீவித்திருக்கும்) வரையில் நடந்து கொள்ள வேண்டும்.

# " கலி சாது "

" கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லை" என்று லோகத்தில் ஒரு வசனம் வழங்குகிறது. அதாவது ஒருவன் அவனுடைய கையில் கிடைத்த தின்பண்டமான வஸ்துவை அவனுடைய வாய் வரையில் கொண்டு போக முடியவில்லை. அதாவது அதை சாப்பிட முடியவில்லை என்றர்த்தமாகும். இந்த மாதிரி எல்லாருக்குமே நடக்கும். இப்பொழுது லோகத்தார்க்கு கைக்கு எட்டின ஒரு விஷயம் வாய்க்கு எட்டாது போலிருக்கிறது. எல்லாரும் மிகவும் விரும்பத்தக்க விஷயமது. ஆகையால் அதைக் கேட்டால் வருத்தத்தைத்தான் உண்டு பண்ணும் எல்லார்க்கும்.

ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் பேசப்பட்டிருக்கிறது:—

" ஒரு காலத்தில் ரிஷிகளுக்குள்ளே ஒரு புண்ணியவாதமுண்டாயிற்று. அதாவது எந்தக் காலத்திலே தர்மம் கொஞ்சம் செய்யப்பட்டாலும் மகாபலனைக் கொடுக்கும். எவர் இப்படிப்பட்ட தருமத்தை எளிதிற் செய்தற்குரியர் என்பதுதான். இந்தவிஷயத்தில் சந்தேகமறவுண்மையைத் தெரிந்து கொள்ளும் பொருட்டு அந்த முனிபுங்கவரெல்லாம் வேதவியாச மகாமுனிவர் சந்நிதிக்குச் சென்றார்கள். அப்பொழுது அந்த மகாமுனிவர் கங்கா தீர்த்தத்திலே பாதி ஸ்நாநம் செய்து கொண்டிருந்தார். இதைப் பார்த்து அம்முனிகள் அவர் ஸ்நாநமாகி வருவதை எதிர்பார்த்துக் கொண்டு அந்த நதிக்கரையில் மரங்களின் கீழ் உட்கார்ந்திருந்தார்கள். அப்பொழுது

கங்கா தீர்த்தத்தில் முழுகியிருந்த மகாமுனிவர் எழுந்து, சூத்திரன் சாது, கலி சாது என்று அவர்களுக்குக் கேட்கும்படிச் சொல்லி மீண்டும் நீரில் அமிழ்ந்து எழுந்திருந்து, சாது, சாது சூத்திரனே, நீ மகா புண்ணியவானாக யிருக்கிறாய் என்று சொன்னார். மறுபடி முழுகியெழுந்து அம்மகாமுனிவர் "பெண் பிள்ளைகள் மிகவும் புண்ணியவதிகள், அவர்களைக் காட்டிலும் புண்ணிய முடையவர் யாரிருக்கிறார் என்று சொன்னார். பின்பு நீராட்டமாகி ஆசமனாதி சகல அனுஷ்டானங் களும்செய்து வீற்றிருந்த மகாமுனிவரிடத்துக்கு அம்முனிவர்கள் பணிவோடு சென்றார்கள். வந்தனஞ் செய்து நின்ற அவர்களுக்கு மகாமுனிவர் ஆசனங் கொடுத்து, எதற்க்காக வந்தீர்களென்று வினவ அந்த ரிஷிகள், சுவாமி! வேத வியாசரே! நாங்கள் ஒரு சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ள வந்தோம். அதிருக்கட்டும், தேவரீர் கலி சாது என்றும், சூத்திரன் சாது என்றும், பெண்கள் சாதுக்களென்றும், அவர்களெல்லாம் புண்ணியவான்களென்று அடிக்கடி அருளிச் செய்தீரே, அதனபிப்ராயத்தை முன்னால் கேட்க விரும்புகிறோம். பின்பு எண்ணி வந்த கார்யத்தை கேட்டுக் கொள்கிறோம். என்று சொன்னார்கள். அதைக்கேட்டு வ்யாசர் சிரித்துச் சொன்னதாவது :—" ஓ ரிஷிகளே! சாது, சாது என்று எதனால் சொன்னேனோ அதைக் கேளுங்கள். கிருதயுகத்திலே எந்தப் புண்யம் 10 வர்ஷங்களினாலே சித்திக்குமோ, அது திரேதா யுகத்திலே ஒரு வருஷத்தினாற் சித்திக்கும். துவாபர யுகத்திலே அதுவே ஒரு மாதத்தில் கிடைக்கும். கலியுகத்திலே ஒரு நாளிலே கிடைக்கும். இப்படித்

தவத்திற் காளுலும், பிரம்மசரியத்திற்காளுலும், ஜபம் முதலியவைகளுக்காளுலும், பயனை மனிதன் கலியுகத்திலே மற்ற மூன்று யுகங்களிற் பெறுவதி லும் மிக யெளிதாய் பெறுவாளுகையாலே கலி சாது என்று சொன்னேன். இன்னம் கேளுங்கள், கிருத யுகத்திலே யோக நிஷ்டையிலிருந்து தியானம் செய்வதாலும், திரேதா யுகத்திலே யாகம் செய்வ தளுலும், துவாபர யுகத்திலே அர்ச்சிப்பதாளுலும், எந்த பயனுண்டோ அது கலியில் ஸ்ரீ கேசவனுடைய திரு நாமங்களைச் சங்கீர்த்தனஞ் செய்வதிளுலே கிடைக்கும். ஓ! தருமமறிந்தவர்களே, மனிதன் இந்த கலியுகத் திலே அற்பமான வருத்தத்திளுலேயே, தரும மிகுதியை யடைவளுதலால், கலியை நான் கொண் டாடுகிறேன்."

"இனி சூத்திரன் சாது என்று சொன்னதின் விவரம் சொல்லுகிறேன். பிராமணுதிகள் விரதா னுஷ்டானம் தப்பாமலிருந்து கொண்டு, முதலில் வேதங்களை ஓதவேண்டும். பின்பு தரும வழியால் சம்பாதித்த திரவியங்களைக் கொண்டு விதிப்படி யாகங்களைச் செய்ய வேண்டும். பிராம்மணுதிகளுக்கு பகவானைப்பற்றின வார்த்தைகளைத் தவிர வீண் வார்த்தை சொல்வதும், எம்பெருமானுக்குச் சமர்ப் பிக்காத அன்னுதிகளைப் புசிப்பதும், டம்பத்துக்கும் லாபத்துக்கும் யாகாதிகளைச் செய்வதும், பாதக மாகுமாதலால், அவர்கள் எப்பொழுதும் மனே வாக்காயங்களைக் கட்டுப்படுத்திக் கொண்டிருக்க வேண்டும். அன்றியும் இரு பிறப்பாளருக்கு எதை யும் விதிப்படிச் செய்யாவிடில் குற்றமாகும். இவ்

வாறு அவர்கள் சகல காரியங்களிலும் பராதீன மாயிருப்பதனாலே அவர்கள் மிகவும் வருந்தி தாங்களடைய வேண்டிய லோகங்களை ஜெயிக்க வேண்டும். சூத்திரனோ வேதாத்யயனம், அக்னி, யக்ஞம் முதலானவைகளில்லாமல் முந்திப்ராம்மணாதிகளுக்கு சிச்ருஷை செய்வதனாலேயே, அப்படிப்பட்ட வுத்தம லோகங்களை அடைவான். ஆதலால் அவனைக் காட்டிலும் புண்ணியவான் யாருண்டு? ஓ ! முனிபுங்கவர்களே! சூத்திரனுக்கு இன்னது தின்னத்தக்கது, இன்னது தின்னத் தகாததென்றும், இது குடிக்கத் தக்கது, இது குடிக்கத்தகாதென்றும் நியமமில்லாமையாலே சூத்திரன் சாதுஎன்று சொன்னேன்"

"பெண்கள் சாதுக்கள் என்று சொன்ன காரணம் சொல்லுகிறேன். புருஷர் தங்களுக்குரிய தருமத்தினால் பொருள் சம்பாதிக்க வேண்டும். சம்பாதித்த பொருளைச் சத்பாத்திரத்தில் தானம் செய்ய வேண்டும். பல சத் கருமங்களும் செய்ய வேண்டும். இப்படியாக பொருளீட்டுவதிலும், அதைக் காப்பதிலும் எவ்வளவு பிரயாசையிருக்கிறது பாருங்கள். இதை நல்வழியிற் செலவழிப்பதிலோ இரட்டித்த வருத்தமிருப்பது நன்றாய்த் தெரிந்து இருக்கிறதன்றோ. இவ்விதங்களான பலவித கிலேசங்களினாலே ஆடவர் பிராஜாபத்தியம் முதலான லோகங்களை வெல்லுகிறார்கள். பெண்டுகளோ மனோவாக்காயங்களினாலே நம் பர்த்தாக்களுக்கு அநுகூலமாயிருந்து கொண்டு சிச்ருஷை செய்து வருவார்களாகில் அந்த புருஷர் அடையும் லோகங்களையே அடைவார்கள். இவ்விதமாய் வருத்தமில்லாமலே தங்கள் கணவர் வருந்திப்

பெறும் உலகங்களைப் பெருவார்களாகையால் மூன்றும் முறை ஸ்த்ரீகள் சாதுக்களென்றேன்."

அப்புறம் அந்த ரிஷிகள், ஓ முநிராஜரே நாங்கள் கேட்க வந்த காரியம் தேவரீர் அருளிச்செய்த அர்த்தங்களில் அடங்கிப் போயிற்று என்று சொல்லிவிட்டுப் போனார்கள். "இந்த (மேலே சொன்ன) ரகசியத்தை உமக்கும் நான் சொன்னேன். மிகவும் துஷ்டனான கலிக்கு இந்த மகாகுணமொன்றிருக்கின்றது பாரும்" என்று ஸ்ரீ பராசர மகாமுநிவர் மைத்ரேயரென்ற முநிவருக்கு ஸ்ரீ விஷ்ணு புராணம் சொல்லும் பொழுது பேசினார்.

லோகத்திலிருக்கிற ஜனங்களுக்கு ஸ்ரீ வேதவ்யாச மகாமுநிவர் மேலே செல்லியிருக்கிற விஷயத்தினால் (கலியில் எல்லாம் சுலபமாக அடையலாமென்ற விஷயம்) அவர்களுக்கு கையிக்கு எட்டியிருக்கிறது. அதாவது இப்பொழுது நடக்கிற கலியிலே பகவன் நாமாவைச் சொல்லி நல்லகதி அடையலாம். இந்த வ்யாச ஆரம்பத்தில் சொன்ன வசனப்படி கைக்கு எட்டினது வாய்க்கும் எட்டக் கூடாது. அந்த விஷயம் கீழே சொல்வதினால் ஏற்படும், அது என்னவென்றால்:—

ஒரு சமயத்தில் ஒரு ப்ராம்மணர் விஷ்ணு கவசம் என்ற மந்த்ரத்தை ஜபம் செய்து சித்தி அடைந்து அதனால் அடைந்த பலனை நரகத்திலிருந்தவர்களுக்குக் கொடுத்து அவர்களை நரகத்திலிருந்து விடுவித்துக் காப்பாற்றினார். அப்பொழுது யமதர்மராஜன் அவரிடம் வந்து சொன்னார்:—

"பிறர் துன்பத்தை ஸஹிக்காமல் நீர் பக்தியுடன் பகவன் நாமாவைக்கூறி பாபிகளெல்லோரையும் ரக்ஷித்தீர். க்ருஷ்ண நாமம் திவ்ய ஔஷதம் என்பது மிக ரகஸ்யமானது. இதை வெளிப்படுத்திஞல் எனது அதிகாரம் போய்விடும். அதற்கு இடமில்லை ஆதலால் வெளிப்படுத்தாதீர்" என்று ப்ராமமணரிடம் கூறி பெருமூச்சுவிட்டு சிந்தையிலமர்ந்தார். பிறகு சொன்ஞர்:—"தெரிந்தோ, தெரியாமலோ அதர்மாத்மாக்கள் பரவசமாக இருந்து பகவன் நாமாவைக் கூறிஞல் கூட பாபமகன்று பகவான் திருவடியை அடைகிருர்கள். இது முதல் கலியில் பகவான் நாமாவால் பாபம் அகலும் என்பதில் நம்பிக்கை இல்லாதவர்களாகட்டும். கையில் தீபத்தை வைத்துக் கொண்டே பள்ளத்தில் விழுபவர் போல் ஆகட்டும் பாபிகள். நாம மஹாத்ம்யத்தை அறியாதவர்களாகி எனது லோகத்திற்கு வரட்டும். இன்று முதல் நாமாவில் நம்பிக்கை இல்லாமல் போகட்டும். ஆயிரத்தில் ஒருவர் கலியிலும் பாப பயத்தால் பகவன் நாமாவில் பூர்ண நம்பிக்கை கொண்டு நற்கதி அடையட்டும்" (துலாபுராணம்)

மேலே சொன்ன விஷயத்தைப் பார்த்தால் லோகத்தாருக்கு. "கலி சாது" என்றது பிரயோஜனப்படாது போலிருக்கிறது. (அதாவது வாய்க்கு எட்டாது போலிருக்கிறது) அப்படித்தான் பிரயோஜனமில்லாமல் ஆக வேண்டும். ஏனென்ருல் பிரகாசிக்க வேண்டிய கலியின் தோஷம் பிரகாசிக்காது இல்லாவிட்டால்.

மேலே சொல்லியிருக்கிற யமதர்மராஜனுடைய சாபம் பாபிகளைத்தான் பாதிக்குமென்று எடுத்துக்

கொள்வதிற்கில்லை. மிகவும் கொஞ்சம் பேர்களைத் தவிர மற்றவர்களை யெல்லாம் பாபிகள் கக்ஷியில் தான் சேர்க்க வேண்டும். ஏனென்றால் அவர்களெல் லாம் இந்தக் கலியுகத்தில் பாபம் செய்தவர்களாகத் தான் இருப்பார்கள். ஆனால் ஒரு நல்ல ஸங்கதி யிருக்கிறது. அது என்ன வென்றால்:—லோக மாதாவான ஸ்ரீ மஹாலக்ஷ்மீயும், லோகத்திற்குத் தகப்பனாரான பெருமாளும் தங்களுடைய குழந்தைக ளான லோகத்திலிருப்பவர்கள் கஷ்டப்படுவதை ஸஹிக்க முடியாமல் காப்பாற்றுவார்கள் எப்படியா வது. அது எப்படியிருக்குமென்றால் கஷ்டப்படும் படியாக இருந்ததை முழுமையும் அனுபவிக்கப் படாமலும், கொஞ்சமாவது அதுவும் சுலபமாக அனுபவிக்கச் செய்வார் பெருமாள். ரொம்ப கஷ்டப் பட்டவர்களை அவர்கள் கஷ்டப்பட்டது போது மென்று அவர்களை நாசம் செய்து மறுபடியும் பிறவி எடுக்காமலும் செய்து, தானிருக்கிற இடத்தில் பின்புறத்தில் தன் கண்ணுக்குப் படாமல் (ஏனென் றால் பார்வை பட்டால் பிறவி எடுக்க வேண்டிவரும்) வைக்கப்பட்டு மஹா பிரளயமான பிறகு மற்றவர்க ளோடு சேர்க்கப்படும். அது வரையில் வைக்கப் பட்ட இடத்திலேயே கிடக்க வேண்டும். ஆனால் பிறவி மறுபடியும் எடுக்க வேண்டியிராது. அது நல்ல தல்லவா?

---

## காலம்

**कालस्य कुटिला गतिः** காலஸ்ய குடிலா கதி: என்று ஸம்ஸ்கிருதத்தில் ஒரு வசனம் லோகத்தில் சில பேர்களால் சொல்லப்படும். அதனுடைய அர்த்தமென்ன வென்றால் காலத்தினுடைய கோணலான வழி என்று. அதாவது காலமானது தன்னுடைய அதிகாரத்தைச் சரியாக நடத்தாமல் தவறானவிதமாக நடத்துதல். அதாவது காலத்தில் (ஸமயத்தில்) நடப்பவைகளெல்லாம் எப்படி எப்படி நடக்க வேண்டுமோ அப்படிக்கில்லாமல் மாறு பாடாக நடப்பது. இதற்கு சரியாக 'காலத்தின் கோளாறு' என்று தமிழில் சொல்லலாம். கோ ளாறு என்றால் குற்றம். அதாவது சரியாக நடக் காமலிருப்பது குற்றமாகும். ஒருவன் தனக்கு ஒன்றும் சரியாக நடக்காத காலத்தில் (ஸமயத்தில்) 'காலத்தின் கோளாறு' என்று நினைப்பான். அதே ஸமயத்தில் தான் வேண்டினது நடந்தால் அப் பொழுது இன்னொருவன் காலத்தை மெச்சுவான். ஆகையால் அவரவர்கள் புத்திக்கு தோற்றினபடி காலத்தைப்பற்றி நினைப்பார்கள். அப்படி நினைப் பது சரியா என்று ஆராய்வோம். அதாவது காலம் என்னது, எப்படிப்பட்டது என்று விசாரிப்போம்.

ஸ்ரீமத் பகவத் கீதையில் பெருமாள் (ஸ்ரீ க்ருஷ் ணன்) தான் அர்ஜுனனுக்குத் தன்னுடைய விச்வ ரூபத்தை காண்பித்தபொழுது அவன் நீர் யார்' என்று பெருமாளைக்கேட்டான். அவர் 'நான் காலம்' என்று பதிலளித்தார். அதாவது காலம் தன்னு டைய அம்ச பூதம் (அம்சத்தை உடைத்தாயிருக்கிற

ஜீவன்) அதாவது அது பெருமாளால் சிருஷ்டிக்கப்பட்டது. அப்படியிருக்கும் பொழுது அதன் பேரில் குற்றம் ஒன்றும் சாட்டக்கூடாது. ஏனென்ருல் அதன் சுபாவம் ஒரே மாதிரியாக அதுவும் நல்லதாக (குற்றமில்லாதபடி)த் தானிருக்கும். அது பெருமாளுடைய சிருஷ்டியாகையால்.

இந்தக்காலம் என்னது எப்பொழுது சிருஷ்டிக்கப்பட்டது தெரியுமா? பூலோக (லோகத்திலிருக்கிறவைகள் உள்பட) சிருஷ்டி நடக்கும்பொழுது இதுவும்கூட சிருஷ்டிக்கப்பட்டது. இதுவும் ஒரு தேவதை மாதிரியிருந்து 'பொழுது' என்ற காரியத்தை மேலே சொன்ன பூலோக சிருஷ்டி ஆரம்பித்தது முதல் அது முடியும் (நாசமடையும்) வரையில் நடத்திக் கொண்டு வரவேண்டும் சரியாக. ஏனென்ருல் அது பெருமாளுடையகட்டளை. அதன்படிக்குச் சரியாக நடக்காவிட்டால் பெருமாளுடைய தண்டனைக்கு ஆளாக வேண்டும். பொழுது என்பது ஸமயக்கணக்கு என்று சொல்லலாம். அதாவது எல்லா விஷயங்களும் லோகத்தில் கணக்குப் பிரகாரமாகத் தான் நடக்க வேண்டியிருக்கிறது. அதற்குக் காலம் (கணக்கு) உபயோகப்படும்படி சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறது. இந்த உபயோகமும் நல்ல விஷயத்திற்குத்தான் பிரயோஜனமுள்ளதாயிருக்குமென்பதில்லை. கெட்ட விஷயத்திற்குக் கூட (அதாவது சிருஷ்டிக்கப்பட்டவைகளுக் கெல்லாம் அனுகூலமா யில்லாமலிருப்பது) பிரயோஜனப்படும். அதாவது எப்பொழுதும் ஒரே ரீதியாக பக்ஷபாதமில்லாமல் அது நடந்து கொள்ளும். காலம் என்

பதற்கு அனேக அர்த்தங்களுண்டு. அதாவது அது அனேக விஷயங்களில் பிரயோஜனப்படுகிறது. எதற்கும் அதன் ஆரம்பத்திலும் நடுவிலும், முடிவிலும், அதாவது எப்பொழுதும் அது வேண்டியிருக்கும். ஆகையால் அது மிகவும் முக்யமானது சிருஷ்டிக்கப்பட்டவைகளுக்கு. ஆதலால் சிருஷ்டிக்கப்பட்டவைகளுக்கு இது பெருமளால் செய்யப்பட்ட அனேக விதமான உதவிகளில் ஒன்று என்று சொல்ல வேண்டும்.

லோகத்தில் சிருஷ்டிக்கப் பட்டவைகளுக்கு மேலே சொல்லியிருக்கிற உதவியைத் தவிர இன்னும் சில வேறுவிதமான (பெருமாளால் செய்யப்பட்டிருக்கிற) உதவிகளைப்பற்றி இங்கு இப்பொழுது பேசுவோம்.

முதலில் உயிருடன் (உயிர் உள்ளதாக, அதாவது ஜிவிக்கும்படியாக) உலகத்திலிருக்கிற எல்லாம் (இதை சில பேர்கள் அக்ஷேபிப்பார்கள் (தப்பு என்று நினைப்பார்கள்) அது ஸரி அல்ல, ஏனென்ருல் சிருஷ்டித்தவைகள் உயிருடன்தானிருக்கிறது அது கண்ணுக்குத் தெரியாமலிருந்தபோதிலும்). சேதனன் (அறிவு உள்ளவைகள்) அசேதனன் (அறிவில்லாதவைகள்) என்று இரண்டு வகையாகப் பிரிக்கப்பட்டிருக்கும். இரண்டாவதாக அவைகளுக்கு ஜாதிகள் ஏற்படுத்தப்பட்டு ஏதாவது ஒரு ஜாதியில் பிறவி ஏற்பட்டு அந்த ஜாதியின் கொள்கைகளை அவைகளின் வாழ்நாளில் தழுவும்படி விதிக்கப்படும். பிறகு அவைகளுக்கு கர்மங்கள்

அவைகளுடைய ஆயுஸ் (எத்தனை வயதுடன் லோகத்தில் உயிருடனிருப்பது) எந்த எந்த மாதிரி வாழ்நாளில் நடந்துகொள்வது, அவைகளின் கடைசி காலம் எப்படியிருக்குமென்பது முதலிய அவைகளுடைய சரித்திரத்திற்கு வேண்டியவைகள் எல்லாம் நிச்சிக்கப்பட்டு அந்த மாதிரி நடந்து கொள்ளும்படி செய்யப்படுங்கள் அவைகளுடைய வாழ்நாட்களில். மேலே சொன்னவைகளைப் பெருமாள் ஒருவர் தான் மாற்றலாம், வேண்டுமானால். ஆனால் பெருமாள் அப்படிச் செய்யமாட்டார். அப்படிச் செய்தாலும் அது அபூர்மாகவிருக்கும். ஏனென்றால் அவைகளெல்லாம் அவருடையக் கட்டளைகளே. சில சமயங்களில் அதாவது அவர் பிரார்த்திக்கப்பட்ட கர்மங்களை முழுபலனைக் கொடுக்க முடியாமல் செய்யக்கூடும். செய்வதுமுண்டு அது எப்படி என்றால் உதாகரணமாக ஒருவன் வியாதியால் பீடிக்கப்பட வேண்டியிருந்தால் அந்த வியாதியின் முழுபலத்தை (அதாவது தடங்கல் ஒன்றுமில்லாமலிருந்தபொழுது அந்த வியாதி எவ்வளவு ஹிம்சிக்குமோ அவ்வளவு) உபயோகப்படுத்த முடியாமல் செய்வது. அதாவது அவன் வியாதியின் பீடைகளைக் கொஞ்சமாக அனுபவித்து விடுவது. ஆனால் எல்லாரும் கர்மாவைக் கொஞ்சமாவது அனுபவித்தே தீரவேண்டும்.

மேலே சொன்னதெல்லாம் சிருஷ்டித்தவைகள் எல்லாவற்றிற்கும் பொதுவானது. சில ஜாதியில் பிறவி எடுத்தவர்களுக்கு வேறு சில கர்மாக்கள் (காரியங்கள்) செய்யும்படி விதிக்கப்பட்டிருக்கிறது. பெருமாளால். நம் வைஷ்ணவ ஜாதியில் பிறந்த

ப்ராம்மணர்களுக்கு விதிக்கப்பட்ட சில கர்மங்களைப் பற்றிப்பேசுவோம் இப்பொழுது. 24மணி நேரமுள்ள (காலம்) நாளை ஐந்து பாகங்களாக பிரித்து, ஒவ்வொரு பாகம் நடக்கும்பொழுதும் என்ன என்ன செய்யவேண்டுமென்று நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. முதல்பாகம் ப்ரம்ம முஹூர்த்தத்தில் (ஸூர்யோதயத்திற்கு ஒரு மணி முன்னால்) ஆரம்பமாகும். அதாவது அப்பொழுது பெருமாளை த்யானம் பண்ணிக்கொண்டே, படுக்கையைவிட்டு எழுந்து காலக்கடன்களை (மலம், ஜலம் விடுதல், பல்களை விளக்கல் முதலியவைகளை) முடித்துக் கொண்டு ஸ்நாநம் பண்ணிக்கொண்டு வஸ்தரத்தைப் பஞ்சகச்சமாகத் தரித்துக்கொண்டு, உத்தரீயத்தை இடுப்பில் கட்டிக்கொண்டு, த்வாதச (12) புண்ட்ரங்களை இட்டுக்கொண்டு, அவரவர்களுடைய ஆசார்யார்களை ஸேவித்துவிட்டு ஸந்த்யாவந்தன மென்ற கர்மாவை செய்யவேண்டும். (இந்தக் கர்மா மூன்று ஸந்த்யைகளிலும் செய்யவேண்டும். ஸந்த்யைகளாவது ராத்ரியும்-காலையும், காலையும்-மத்யாஹ்நமும், மாலையும்-ராத்ரியும் சேரும் சமயங்கள்) இந்த ஸந்த்யாவந்தனத்தில் வேதத்தை வடிகட்டி எடுத்த மந்த்ரமான காயத்ரீ உள்ளடங்கியிருக்கிறது. அதாவது ஸந்த்யாவந்தனம் செய்யும்பொழுது காயத்ரீ மந்த்ரத்தை ஜபித்து வரவேண்டும். அநேகம் பேர்கள் ஸந்த்யாவந்தனத்தை முழுவதும் செய்யாமல் காயத்ரீயை மாத்ரம் செய்தால் போதுமென்று சொல்வார்கள். இது ஸரியல்ல, ஸந்த்யாவந்தனம் முழுவதுந்தான் செய்தாக வேண்டும். ஏனென்றால் அந்தக் கர்மத்தில் சில முக்ய விஷயங்களிருக்கின்றன. அவைகளில் ஒன்று பின்வருமாறு.

அது என்னவென்றால் ஒரு நாளில் செய்த பாபங்களை போக்கடிக்கும் மந்த்ரம். காலையில்செய்கிற ஸந்த்யாவந்தனத்தில் சொல்லுகிற மந்த்ரம் ராத்ரியில் செய்த பாபங்களையும், மாத்யாஹ்ன ஸந்த்யாவந்தனத்தில் சொன்ன மந்த்ரம் ஸூர்யோதயத்திலிருந்து மாத்யாஹ்ன காலம் வரையில் செய்தபாபங்களையும், ஸாயங்காலத்தில் ஸூர்யாஸ்தமனத்தின் போது செய்கிற ஸந்த்யாவந்தனத்தில் சொன்ன மந்திரம் மத்தியாஹ்ன காலத்திலிருந்து ஸாயங்காலம் வரையில் செய்த பாபங்களையும் போக்கடிக்கும். இப்படி பாபங்களைப் போக்கடிக்கிற மந்த்ரம் முக்கியமானதல்லவா? ஆகையால் இதையெல்லாம் சொல்வதற்கு ஸந்த்யாவந்தனம் முழுவதும் செய்யவேண்டும்.

ஸந்த்யா வந்தனத்திற்குப் பிறகு ப்ராம்மணர்களுக்கு சில கர்மங்கள் மாத்யாஹ்ன காலத்திற்கு முன் செய்ய வேண்டுமென்று நம் சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. அவைகளை அவரவர் ஆசார்யரிடமிருந்து தெரிந்து கொள்ளலாம்.

மாத்யாஹ்ன காலத்தில் ஸந்த்யாவந்தனமும் உடனே பகவதாராதனமும், போஜனம், பிறகு கொஞ்சம் விச்ராந்தி (தூக்கம்) எடுத்துக் கொள்ளுதல், அப்புறம் புராண (ராமாயணம், பாகவதம் முதலியன) படனம் (படிக்கிறது அல்லது யாருக்காவது சொல்லுதல்). இவைகளெல்லாம் ஸாயங்காலம் வரையில் நடக்க வேண்டும், பிறகு ஸாயம் ஸந்த்யா வந்தனமும் இன்னம் சில கர்மங்கள் (இவைகளை அவரவர் ஆசிரியர் உபதேசிப்பார்). அப்புறம் போ

ஜனம், கடைசியில் சயனம் (படுக்கை). மேலே சொல்லியிருக்கிற கார்யங்களிலெல்லாம் ப்ரார்த்திக்கப்படுகிறவர்களெல்லாம் பெருமாளின் கைங்கர்யபரர்கள் (வேலைக்காரர்கள்). ஆகையால் எல்லாம் பெருமாளைச்சேரும். ஆகையால் பெருமாள்தான் நாள் முழுதும் நினைக்கப்படுவார்.

ஆகையால் மேலே சொல்லப்பட்ட கர்மங்கள் எல்லாம் எவ்வளவு நல்லது செய்கிறது பார். இதெல்லாம் பெருமாளுடைய கார்யமல்லவா? அப்பொழுது நாம் பெருமளுக்கு நன்றி பாராட்ட வேண்டும். அது எப்படி நன்றி பாராட்டுவதென்றால், மேலே சொல்லியிருக்கிற கார்யங்களை தவறாமல் செய்வதென்று சொல்லலாம். இதைப் பெருமாளும் உகப்பார். ஆகையால் எல்லாரும் ஒரு ஆசார்யரை அடைந்து மேலே சொன்ன விஷயங்களைப்பற்றி அவரைக் கேட்டு தெரிந்து கொண்டு அவர் எப்படிச் செய்யச் சொல்லுகிறாரோ அப்படி நடந்து கொள்ள வேண்டும்.

மேலே சொன்ன சங்கதிகளுக்கெல்லாம் காலம் ஒத்தாசையாயிருக்கும். ஆகையால் அதன் பேரில் குற்றம் சாட்டக்கூடாது.

---

# ஜாதிகள்

நம் இந்தியாவில் இப்பொழுது ஜனங்களில் சில பேர்களுக்கு நல்ல தசை அடிக்கிறது என்று சொல்ல வேண்டும். அவர்களை மற்ற ஜனங்கள் இது வரையில் மேல் கிளம்ப (நல்ல ஸ்திதிக்கு வர) விடாமல் அழுக்கிக்கொண்டிருந்ததாகவும், அதனுல் அரசாங்கத்தார் அவர்கள் கட்சியை எடுத்துக்கொண்டு முன்னேற்றம் பண்ண வெகு ச்ரமப்படுகிருர்கள். அவர்கள் யாரென்ருல் முன்ஞல் பஞ்சமர்கள் என்று சொல்லப்பட்டவர்களும் "மஹாத்மா" காந்தியால் புதிதான "ஹரிஜன்" என்று பெயரிடப்பட்டவர்கள். இன்னம் சில ஏழ்மையானவர்கள் என்று கருதப்பட்டவர்களும் "ஹரிஜன்" கட்சியில் சேர்க்கப்பட்டிருக்கிருர்கள் அரசாங்கத்தாரால். மேலே சொன்னதற்கு மொத்தார்த்தமென்ன வென்ருல், பெருமாள் அநியாயமாய் எல்லாரையும் ஒரே மாதிரியாக சிருஷ்டிக்காமல் சில பேர்களுக்கு பக்ஷபாதம் பண்ணியிருக்கிருராம். இந்த மாதிரி தாரதம்யம் பண்ணுவது சரியானதா என்று விசாரிப்போம்.

ப்ரம்மா முதலில் பூலோகத்தில் ஸ்ருஷ்டி ஆரம்பிக்கும்பொழுது சில பேர்கள் (ஜனங்கள்) ப்ராம்மணர்கள் என்று பெயரிடப்பட்டு ப்ரம்மாவின் முகத்திலிருந்தும், சில பேர்கள் க்ஷத்திரியர்களென்று பெயரோடு ப்ரம்மாவின் கைகளிலிருந்தும், சில பேர்கள் வைச்யர்களென்று சொல்லப்பட்டு ப்ரம்மாவின் துடைகளிலிருந்தும், சில பேர்கள் சூத்ரர்கள் என்று பெயருடன் ப்ரம்மாவின் பாதங்களிலிருந்து வெளிக்

கிளம்பினதாக நம் சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது ஜனங்கள் ப்ராம்மண க்ஷத்ரிய, வைச்ய, சூத்ரர்கள் என்ற பிரிவுகளோடு சிருஷ்டிக்கப்பட்டார்களென்று அர்த்தமாகும். இந்த சிருஷ்டியை வேண்டுமென்று ப்ரம்மா செய்யவில்லை. அவர் முதலில் தன்னுடைய முகத்திலிருந்து சில பேர்களை சிருஷ்டிக்கலாமென்று, எண்ணி அவர்களை அப்படி சிருஷ்டித்து ப்ராம்மணர்களென்று பெயரிட்டிருக்க வேண்டும். அதேமாதிரி மற்றவர்களையும் மேலே சொன்ன பிரகாரம் சிருஷ்டித்திருக்க வேண்டும். அதுவும் மனிதர்களைப் போலல்லாமல் பெருமாள் மாதிரியான அவருக்கு தன் உடம்பின் எல்லாபாகமும் ஸமமானதால் (வித்யாஸமில்லையானதால்) தன் உடம்பின் எந்த பாகத்திலிருந்து சிருஷ்டித்தாலென்ன. அது சில பேர்களை பாதகப்படுத்துகிறது என்று சொல்லக்கூடாது. மேலும் சூத்ரர்கள் ப்ரம்மாவின் பாதங்களிலிருந்து உண்டானார்களென்று சொல்வதை இழிவானதாக எடுத்துக் கொள்ளாமல் அது மிகவும் சிலாக்யம் என்று சொல்லவேண்டும். ஏனென்றால் ப்ரம்மாவின் (பெருமாளின்) திருவடியைத்தான் (பாதங்களை) மிகவும் மேலானவர்களென்று கருதப்பட்ட ப்ராம்மணர்களால் அடைவதற்கு பெருமாள் ப்ரார்த்திக்கப்படுகிறார், அது மிகவும் உத்க்ருஷ்டமான (மேலான) வஸ்துவென்று. ஆனால் இந்த சிருஷ்டியை ப்ரம்மா தன் உடம்பின் ஒரே பாகத்திலிருந்து எல்லாரையும் சிருஷ்டி பண்ணியிருக்கக் கூடாதா, அப்படி செய்திருந்தால் மேலே சொன்ன தூஷணைக்கு இடமேயில்லாமலிருக்குமே

என்று கேட்டால், அவரிஷ்டப்படித்தான் அவர் செய்வார். மேலே சொன்ன தூஷணையைப் பற்றியே ஒன்றும் தோன்றாமலிருக்கலாம் அவருக்கு. மேலும் அவர் தன் பாதங்களிலிருந்தும் சிருஷ்டி பண்ண வேண்டுமென்று தீர்மானம்பண்ணிய பிறகு எவர்களையாவது அப்படி சிருஷ்டிக்கத்தான் வேண்டும். எல்லாரும் பல்லக்கில் ஏறிக்கொள்ள வேண்டுமென்றால் எப்படி போகமுடியும். பல்லக்கை எவர்களாவது தூக்கிக்கொண்டு போக வேண்டுமல்லவா? ஆகையால் பெருமாள் பேரில் ஜனங்கள் சிருஷ்டியைப் பற்றி ஒன்றும் தூஷணம் செய்யக்கூடாது. அவரை மெச்ச வேண்டுமே ஒழிய மேலே சொல்லியிருக்கிற காரணங்களால்.

ப்ரம்மா முதலில் பூமியிலிருக்கிற எல்லா வஸ்துக்களையும் சிருஷ்டித்து அவைகள் எப்படி பூமியிலிருக்கும்பொழுது நடந்துக்கொள்ள வேண்டுமென்பதையும் தயார் பண்ணி அவைகள் சஞ்சரிக்க விடப்படுவார்கள். அப்புறம் அவைகள் அநேக ஜன்மங்களில் பாபங்களை (பெருமாளின் கட்டளையின்படி நடக்கா விட்டால் பாபங்கள் வரும். அதற்கு தண்டனையை அனுபவிக்க வேண்டும்) எல்லாம் போக்கிவிட்டு நல்லகதியை (கடைசியில் எல்லாரும் போய்ச் சேரவேண்டியயிடம், அதாவது மோக்ஷம்) அடைய வேண்டும் பிறகு ஜன்மம் எடுக்காதபடி.

ப்ரம்மா சிருஷ்டி எப்படி பண்ணுகிறார் என்றால் : பெருமாள் முதலில் பூமியை உண்டு பண்ணுகிறார். அப்புரம் ப்ரம்மாவைக் கூட்டிட்டு பூமியிலிருக்கிற

வைகளை யெல்லாம் சிருஷ்டிக்கச் சொல்லுகிறார். அந்தக் கட்டளையைப்பூர்த்தி பண்ணுகிறார் ப்ரம்மா. எப்படியென்றால்:—உதாகரணமாக ஒரு ப்ராம்மண சிருஷ்டியை கவனிப்போம்:— பெருமாளிடத்திலிருந்த அநேக ஆத்மாக்கள் (உயிர்கள்) ப்ரம்மாவிடம் கொடுக்கப்பட்டு அதில் ஒன்றுக்கு (அது முன் ஜன்மத்தில் மிக புண்யம் பண்ணியிருக்க வேண்டும் அது ப்ராம்மணனாக பிறப்பதற்கு) ஒரு சரீரம் (பூமியில் சஞ்சரிப்பதற்கு) கொடுக்கப்பட்டு ஒரு ப்ராம்மண ஸ்திரியின் கர்பத்தில் சேர்க்கப்படும். அந்தக் கரு பத்துமாஸம் வரையில் கர்பத்திலிருந்து வளர்ந்து ஒரு சிசுவாகி (குழந்தையாகி) புருஷரூபத்துடனோ அல்லது ஸ்த்ரீ ரூபத்துடனோ அதன் கர்மம் எப்படியிருக்கிறதோ அப்படிப் பிறக்கும், அதாவது அதனுடைய தாயின் வயிற்றிலிருந்து வெளியில் வரும். அது முதலில் சிசு பர்வம் அப்புறம் வரிசையாக பாலபர்வம், கௌமாரபர்வம், யௌவனபர்வம், வார்தகபர்வங்களை அடைந்துஅனுபவித்து நாசம் அடையும் (மரணமடையும்). இந்த மாதிரி செய்வதற்கு அதற்கு பூர்ணாயுஸ் (பூமியில் உயிரோடிருப்பதற்குக் காலம்) இருக்க வேண்டும். இல்லாவிட்டால் (அதாவது ஆயுஸ் குறைவாகயிருந்தால்) மேலே சொன்ன பர்வங்களை சரியாக அடையாமலே மரித்துவிட வேண்டியிருக்கும் குறைந்த காலமே பூமியிலிருக்க வேண்டுமாதலால்.

மேலே சொன்ன பிறவி ப்ராம்மண குலத்தில் ஏற்படும். அதாவது அதனுடைய தாயாரும் தகப்பனாரும் ப்ராம்மண குலத்திலேயே பிறந்திருப்பார்

கள். அந்த குலமும் அதற்குத் தகுந்தாற்போல் (அதன் கர்மபிரகாரம்) நல்லதாகவாவது (பெருமாளின் கட்டளைபடி நடப்பவர்கள்) அல்லது கெட்டதாகவாவது (பெருமாள் கட்டளையை மீறி நடப்பவர்கள்) யிருக்கும். ஆனால் அதற்குப் பிறவி மேலே சொன்ன ஒரு குலத்தில் ஏற்பட்டாலும் அந்தக் குலம் மாதிரியே (குலத்தின் குணம்) அந்த குணத்தோடு (நல்லதாகவோ அல்லது கெட்டதாகவோ) தன் வாழ்நாளை கழிக்க வேண்டுமென்று அவசியமில்லாமல் இருக்கலாம். அதாவது அது குலத்தின் வேறுபட்ட குணத்தோடு நடமாடலாம் தன் கர்மம் அந்த மாதிரியிருந்தால்.

இதற்குப் பிறகு எந்த ப்ராம்மண குலத்தில் அது பிறவி எடுக்க வேண்டுமென்ற கேள்விவரும். அதுவும் அதன் கர்மப்படிதான் நடக்கும். அதாவது அதற்கு ப்ராம்மண குலப் பிரிவுகளில் எந்தப் பிரிவு தகுதியாகயிருக்குமோ அது கிடைக்கும். இந்தக் குலப் பிரிவு மிகவும் உயர்ந்ததாகயிருந்து விட்டால் அப்புறம் அது நல்லதாகவே, பெருமாள் கட்டளைப்படி (அதாவது அந்த உயர்ந்த குலத்தில் பிறவி எடுத்த ப்ராம்மணன் எப்படி நடந்துக் கொள்ள வேண்டுமோ அப்படி) நடந்து கொண்டு நல்ல கதியை (ஜன்மக் கடைசியில் அடைய வேண்டிய மோக்ஷத்தை) அடையலாம். மேலே சொன்ன ஒசத்தியான குலம் ஏது வென்றால் வடகலையைச் சேர்ந்த வைஷ்ணவ குலம். இதனால் மற்ற வைஷ்ணவ குலங்கள் உயர்ந்ததல்ல, அதனால் அந்தக் குலங்களிலிருப்பவர்கள் மோக்ஷமடைய மாட்டார்

களா என்றால், அப்படி எடுத்துக்கொள்ளக் கூடாது, ஏனென்றால் எல்லாம் பெருமாளுடைய அதீனம். அவரிஷ்டப்படிக்குத்தான் நடக்கும்.

மேலே சொன்ன சிருஷ்டி கார்யம் இந்தக் கலியுக ஆரம்பத்தில் நடந்திருக்கும், அப்புறம் சிருஷ்டித்த வைகளுடைய கர்மப்படி நடந்து கொண்டு எவ்வ ளவோ மாறுபாடுகள் உண்டாகியிருக்கின்றன. சிருஷ்டி ஆரம்பத்தில் லோகத்தில் ப்ராம்மண, க்ஷத்ரிய, வைச்ய, சூத்ரர் என்ற நான்கு ஜாதிகளி ருந்தன. இப்பொழுது க்ஷத்ரிய வைச்ய ஜாதிகளில் லாமல், ப்ராம்மண ஜாதி அநேகப் பிரிவுகளுடனும், சூத்ரஜாதி அநேகப் பிரிவுகளுடனும் புதிதான ஹரிஜன் என்ற ஜாதியும், இன்னம் பௌத் தர், ஜைனர் என்ற மாதிரி அநேக ஜாதிகளும் வழங் குகின்றன லோகத்தில். இன்னொரு விதமான ஜாதி அதற்குப் பெயரிடப்படாமல் கிளம்பிக்கொண்டி ருக்கிறது. கலப்பு மணமானவர்களுக்கு உண்டான குழந்தையை எந்த ஜாதியில் சேர்ப்பது? அது போகப் போகத் தெரியும். ஆனால் தெரியுமோ தெரி யாதோ சொல்வதற்கும் இல்லை. ஏனென்றால் அரசாங்கத்தார்கூட ஜாதியைப் பற்றியே ஒன்றும் சொல்லக் கூடாதென்கிறார்கள். இதனால் ஜாதி முழு மையே போய் விடுமா என்றால், இதைப்பற்றி ஒன்றும் சொல்ல முடியாது, ஏனென்றால் பெருமாளு டைய இஷ்டம் எப்படியோ அப்படித்தான் நடக்கும். மேலும் ஜாதியே போக வேண்டியதாயிருந்தால், அது நடக்கிறதற்கு வெகு காலம் கழிய வேண்டும். ஆனால் பெருமாள் இந்த ஜாதியை முளையாக வைத்

துக்கொண்டு அடுத்த யுகமான க்ருதத்திற்கு ஜாதி களை உற்பத்தி பண்ண வேண்டியிருப்பதால், அவை கள் முழுமையும் மறைந்து போகாமல் கொஞ்சமா வது இந்தக் கலியுகக் கடைசி வரையில் வழங்கிக் கொண்டிருக்கும்.

அவரவர்கள் கர்ம ப்ரகாரம் ஜாதியில் பிறப்பு ஏற்படுகிறது. "ஹரிஜன்" ஜாதியில் பிறந்தவர் கள் முன் ஜன்மங்களில் அதிக பாபம் பண்ணிய தால் அந்த ஜாதியில் பிறப்பு உண்டாயிருக்கிறது. ஆகையால் அவர்கள் தங்களையே தூஷித்துக் கொள்ள வேண்டும் தங்கள் பிறப்புக்கு. ஆனால் அந்த மாதிரி செய்யப்பட்டது அவர்களுடைய நன் மைக்குத்தான் ஏனென்றால் அப்படியிருந்து அவர் கள் எப்படி நடந்துக்கொள்ள வேண்டுமோ அப்படிச் செய்து கொண்டுதான் மேலுக்குப் போக முடியும். எல்லா ஜாதியில் இருப்பவர்களும் கூட அதே மாதிரிதான் பண்ண வேண்டும். இல்லாவிட்டால் மேலுக்குப் போக முடியாது.

---

# 'ஜாதி ஒழிப்பு'

'லோகம் பலவிதம்' என்று அனேகமாக எல்லோராலும் சொல்லப்படுகிறது. அந்த வாக்யத்திற்கு அனேக அர்த்தங்களிருந்தபோதிலும் நமக்கு வேண்டியதை இப்பொழுது எடுத்துக் கொள்ளுவோம். அது என்னவென்ருல்:— லோகத்தில் ஜனங்களுக்கு ஏதாவது ஒன்றைப்பற்றி அபிப்ராயம் ஒரே மாதிரியாக இல்லாமல் வெவ்வேறு விதமாகவே இருக்கும். பெருமாள் வேண்டுமென்று தான் இப்படி நடக்கட்டுமென்று செய்திருக்கிருர். இந்த மாதிரி நடந்தால் தான் அவர் விளையாட்டு நன்ருய் (அதாவது வேடிக்கையாய்) இருக்கும் போலும்! சமீபத்தில் நம்மூரில் நடந்த ஒரு 'ஜாதி ஒழிப்பு' கூட்டத்தில் ஒருவர் 'கடவுளும் மதமும் ஒழிந்தால் ஜாதி ஒழியுமென்று' பேசினர். இன்னெருவர் 'அப்படிப் பேசுவது சரியல்ல, ஏனென்ருல் கடவுள், சமயம் (மதம்), ஜாதி இவைகளுக்கு ஒன்றுக்கொன்று ஸம்பந்தம் கிடையாது என்று சொன்னர். மேலே சொன்ன கூட்டத்தில் கலக்காத சிலபேர் 'ஜாதியை ஒழிக்கக்கூடாது, அதுயிருக்க வேண்டுமென்றும்,' இன்னம் சிலர் ஜாதியிருந்தாலென்ன, இல்லாமல் போனுலென்ன என்று எண்ணி அதைப் பற்றி கவனியாமலேயிருப்பர். ஆகையால் ஜனங்களுக்கு 'ஜாதி ஒழிப்பைப்பற்றி' அபிப்ராய பேதங்களுண்டு என்று சொல்லலாம். அதாவது ஜனங்கள் இப்போழுது ஜாதி ஒழிப்பைப் பற்றி சர்ச்சைப் பண்ணி கொண்டிருக்கிருர்களென்று எடுத்துக்

கொள்ள வேண்டும். இது இருக்கட்டும், யாரால் ஜாதி உண்டாக்கப்பட்டது தெரியுமா? எதற்காக அப்படி செய்யப்பட்டது தெரியுமா? என்கிற கேள்விகளைப்பற்றி விசாரிப்போம் இப்பொழுது :—ஜாதி என்றது ஜகத் (உலகம்) சிருஷ்டியில் சேர்ந்தது தானே. அது யார் பண்ணியிருக்கக்கூடும்? பெருமாள்தான், அதில் ஸந்தேகம் என்? மேலே ஒருவர் சொல்லியிருக்கிறார் 'கடவுளுக்கும் ஜாதிக்கும் ஸம்பந்தமில்லை' என்று, அதனால் ஸந்தேகத்திற்கு இடம் கொடுக்கிறது. அவர் அபிப்ராயத்தை அவர் வைத்துக் கொள்ளட்டும், நம் அபிப்ராயத்தை நாம் வைத்துக்கொண்டு நடந்து கொள்வோம்.

ஜாதியைப் பெருமாள் சிருஷ்டித்தாரானால் அது எதற்கு பண்ணினாரென்றால் ஜாதிகளில் இருப்பவர்கள் நல்லதை (அதாவது நல்ல கதியை) அடைவதற்கு, அவர் எல்லாம் நல்லதுதான் பண்ணுவாராகையால். அந்த நல்லகதி என்றதற்கு இங்கே அர்த்தமென்னவென்றால், இப்பொழுது இருக்கிற ஜாதியிலிருந்து அடுத்த ஜன்மத்தில் கீழ் ஜாதியில் பிறவி எடுக்காமல் மேல் ஜாதியில் பிறவி எடுப்பது. அப்பொழுது ஜாதியில் கீழ் ஜாதி, மேல் ஜாதி என்று இருக்கிறதா என்று கேட்டால், ஆம் இருக்கிறது. லோகத்திலிருக்கிற ஒவ்வொரு விதமான வஸ்துவுக்கும் ஜாதிகள் இருக்கின்றன. நாம் மனிதர்களுக்கு மாத்திரம் இருக்கிற ஜாதிகளை பற்றி இப்பொழுது பேசுவோம்.

இந்த ஜாதிகளெல்லாம் எப்படி தீர்மானம் செய்யப்படுகிற தென்ருல் அவரவர்களுடைய கர்மப்ரகாரமாக. அதாவது முன் ஜென்மங்களில் செய்த புண்ணிய பாபத்திற்கு தகுந்தாற்போல் நிர்ணயம் பண்ணப்பட்டிருக்கிறது. ஒரு ஜன்மத்தில் ஒவ்வொருவரும் புண்ணியமும் பாபமும் கலந்துதான் செய்திருப்பார்கள். ரொம்ப பாபமும் கொஞ்சம் புண்ணியமும் செய்தவர்களுக்கு நம் இந்தியாவை விட, லோகத்திலிருக்கிற வேறு தேசங்களில் இருக்கிற ஜாதிகளில் ஏதாவது ஒன்றில் பிறவி ஏற்படும். புண்ணிய பூமியான இந்தியாவில் பிறவி எடுப்பவர்களுக்கு மேலே சொன்னவர்களை விட புண்ணியம் ஜாஸ்தியாகவும் பாபம் குறைவாகவுமிருக்கும். இந்தியாவிலிருக்கிற ஹரிஜனங்களென்று (பஞ்சமர்கள்) சொல்லப்பட்டவர்கள் கீழ் ஸ்தானத்தை அடைந்தவர்கள். ஏனென்ருல் இந்தியாவிலிருக்கிற மற்றவர்களை விட பாபம் மிகவும் அதிகமாக முன்ஜென்மங்களில் செய்திருப்பார்கள். (பெருமாள் அவர்களுக்கு மிகவும் அதிக பாபம் முன் ஜென்மங்களில் பண்ணியதற்கு தண்டனையாக அப்படிச் செய்கிருர் போலும்)! வைஷ்ணவ ப்ராம்மணர்கள் தான் எல்லாரையும்விட அதிக புண்ணியத்தைச் செய்திருப்பார்களாகையால் உச்ச ஸ்தானத்தை அடைந்தவர்கள். அதாவது அவர்களுக்கு மேல் ஜாதி ஒன்றும் கிடையாது. அதனுல் அவர்கள் மோக்ஷம் (பிறவியில்லாமை) என்கிற நல்லகதியை அடைவார்கள். மேலே சொன்னதற்கு மொத்தார்த்த மென்னவென்ருல் அவரவர்கள் பிறவி எடுத்த ஜாதியிலிருந்து

கொண்டு அந்த ஜாதியின் கொள்கையை (எப்படி எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்பது) யை பிடித்து நடக்கவேண்டும். அது பெருமாளிட்ட கட்டளை. அதை ஒரு விதத்திலும் மீருமல் நடந்து கொள்ள வேண்டும். அப்படி நடக்காவிட்டால் என்ன நேரிடுமென்ற கேள்விக்கு பதில் ஒன்றும் சொல்லமுடியாது. ஆனல் பதில் ஒருவிதமாகச் (நிச்சயமாயில்லாமல்) சொல்லலாம். அது நல்ல தாகயிராது, கெடுதலாகத்தானிருக்குமென்று.

பெருமாளால் செய்யப்பட்ட ஜாதியின் கொள்கைகள், அந்த அந்த ஜாதியில் பிறவி எடுத்தவர்களுக்கு தகுந்தாற்போல் (அதாவது எப்படி நடந்து கொண்டால் அனுகூலத்தை உண்டு பண்ணுமோ அப்படி) செய்யப்பட்டிருக்கும். ஆதலால் ஜாதி என்பதை ஒரு மரத்தின் அடிபாகம் (வேர்) மாதிரியாக பாவிக்க வேண்டும், அதாவது அவ்வளவு முக்யமானது என்று. ஒரு வஸ்துவின் முக்யமான பாகத்தை ஒழித்து விட்டால் (அதாவது இல்லாமல் போகும் படி செய்தால்) அந்த வஸ்துவின் கதி என்ன வாகுமோ அப்படித்தான் 'ஜாதி ஒழிப்பினல்' லோகத்திலிருக்கிற மனிதர்களின் (லோகத்திலிருக்கிற மற்றவைகளின் கதி கூட, அவைகளுக்கும் ஜாதி இருப்பதால்) கதியும் நேரும். மேலும் 'ஜாதி ஒழிப்பு' கக்ஷி பேசுகிறவர்கள் தங்களுக்கு வர வேண்டிய பலன்களை மற்ற ஜாதிக்காரர்கள் அபகரித்துக் கொண்டு போய் விடுகிருர்கள். தங்கள் ஜாதிப்பெயரை சொல்லிக்கொண்டு, ஆதலால்

ஜாதியை ஒழித்து விட்டால் தாங்கள் நல்ல பலன்களை அடையலாமென்று அப்படிக் கூறுகிறார்கள். இப்படி பேசுகிறவர்களை அஞானிகள் (ஒன்றும் தெரியாதவர்கள்) என்று தான் சொல்ல வேண்டும். எல்லாம் அவரவர்கள் அதிருஷ்டத்திற்கு (பெருமாள் எப்படி நிச்சயித்திருக்கிறாரோ அப்படி) தகுந்தாற் போல்நடக்கிறதல்லவா! அதைத் தெரிந்துகொள்ள வில்லைபோலும்! ஒரு வேளை தெரிந்து கொண்டும் பெருமாள் பக்ஷ பாதமாக தங்களுக்கு நல்ல பலனைக் கொடுக்காமலிருக்கலாமென்று நினைத்துக்கொண்டு (பெருமாள் பேரில் பழியைப் போட்டுவிட்டு) ஜாதி ஒழிப்பு வேண்டுமென்று சொலலலாம். மேலே சொல்லியிருக்கிற ஒரு கூட்டத்தில் ஒருவர் கூட 'கடவுள் ஒழிந்தால்தான் ஜாதி ஒழியும்' என்று பேசியிருக்கிறார். ஆகையால் அவர்கள் அஞ்ஞானிகள் என்று சொல்லத்தகும். பகவத் சிருஷ்டியான ஜாதியை ஒரு பொழுதும் ஒழிக்க முடியாது. அது ஒழிய வேண்டுமென்றிருந்தால் தான் ஒழியும். ஆனால் புராணங்களில் இந்தக் கலியுகத்தை (இப்போது நடக்கிற காலம்)ப் பற்றிப்பேசும்போது 'கலியில் ஜாதியெல்லாம் மறைந்து போகும்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் ஜாதி ஒழிப்பு கக்ஷிக்கு வெற்றிவரும். அது எப்பொழுது நடக்கும் என்று சொல்ல முடியாது. இப்பொழுது உடனே நடக்குமென்றும் சொல்ல முடியாது, அது பெருமாளிஷ்டமாகையால்.

1962ம் வருஷம் எட்டு க்ரஹங்கள் (ஜ்யோதிஷத்தில் சொல்லப்பட்ட க்ரஹங்கள்) ஒன்று

சேரப்போவதாக ஜ்யோதிடர்கள் சொல்லியிருக்கிருர்கள். அது நடந்தால் என்ன பலன் உண்டாகும் என்பதை கவனிக்கவேண்டும். அதைப் பெருமாளிடத்திலேயே போட்டுவிட்டு அவர் எப்படிச் செய்வாரோ அந்த மாதிரி செய்யட்டுமென்று அவரையே எல்லாரும் பிரார்த்திப்போம்.

---

# ஸ்த்ரீ தர்மம்

திவ்ய தம்பதிகளான பெருமாளும் தாயாரும் ஒன்றுசேர்ந்து தான் லோகவ்யாபாரத்தை நடத்து கிறார்களென்று லோகாசாரியாரான ராமானுஜா சாரியரைச் சேர்ந்த வைஷ்ணவர்கள் கக்ஷி பேசுகி றார்கள். மற்ற ஆசார்யர்களைச் சேர்ந்த வைஷ்ணவர் கள் தாயாரை பெருமாளுக்கு அடுத்தபடியாகத் தான்வைக்கிறார்கள். ஆனபோதிலும் தாயார் பெரு மாளைத் தவிர மற்றவர்களுக்கு மேல் ஸ்தானத்தில் வைஷ்ணவர்களால்வைக்கப்பட்டிருக்கிறாள். தாயார் ஸ்த்ரீ என்ற பிரிவில், சேர்க்கப்பட்டிருப்பதால் லோகத்திலிருக்கிற ஸ்த்ரீகளும் தாயாரைப்போல் கௌரவிக்கப்பட அர்ஹதை உள்ளவர்களென்று எடுத்துக்கொள்ள வேண்டும். அதாவது ஸ்த்ரீகள் தங்கள்பதி (கணவன்)யால் கௌரவிக்கப்பட வேண் டும், இதனால் ஸ்த்ரீகள் தங்களிஷ்டம் போல் பதிகளி டத்தில் நடந்து கொள்ளலாமா என்றால் அப்படிச் செய்யக்கூடாது தான் அவர்கள். ஏனென்றால் ஸ்த்ரீகள் எப்படி லோகத்தில் நடந்து கொள்ள வேண்டுமென்று நமது சாஸ்திரங்களில் சொல்லப் பட்டிருக்கிறதோ, அதைஅவர்கள் தழுவவேண்டும். தாயாரான ஸ்ரீ மஹாலக்ஷ்மி, ஸ்ரீ சக்கரவர்த்தித் திரு மகனை ராமனுடைய தர்மபத்னியான ஸ்ரீ சீதா தேவி, பதிவ்ரதைகளான த்ரௌபதி, அருந்ததி முதலியவர்களும் ஸ்த்ரீ தர்மத்தை எப்படி நடத்தவேண்டு மென்பதை தாங்களே நடத்திக் காட்டியிருக்கிறார்கள். அதை ஸ்த்ரீகள் கைபற்ற

சேரப்போவதாக ஜ்யோதிடர்கள் சொல்லியிருக்கிறார்கள். அது நடந்தால் என்ன பலன் உண்டாகும் என்பதை கவனிக்கவேண்டும். அதைப் பெருமாளிடத்திலேயே போட்டுவிட்டு அவர் எப்படிச் செய்வாரோ அந்த மாதிரி செய்யட்டுமென்று அவரையே எல்லாரும் பிரார்த்திப்போம்.

---

# ஸ்த்ரீ தர்மம்

திவ்ய தம்பதிகளான பெருமாளும் தாயாரும் ஒன்றுசேர்ந்து தான் லோகவ்யாபாரத்தை நடத்து கிறார்களென்று லோகா சாரியாரான ராமானுஜா சாரியரைச் சேர்ந்த வைஷ்ணவர்கள் கலி பேசுகி ருர்கள். மற்ற ஆசார்யர்களைச் சேர்ந்த வைஷ்ணவர் கள் தாயாரை பெருமாளுக்கு அடுத்தபடியாகத் தான்வைக்கிருர்கள். ஆனபோதிலும் தாயார் பெரு மாளைத் தவிர மற்றவர்களுக்கு மேல் ஸ்தானத்தில் வைஷ்ணவர்களால்வைக்கப்பட்டிருக்கிருள். தாயார் ஸ்த்ரீ என்ற பிரிவில், சேர்க்கப்பட்டிருப்பதால் லோகத்திலிருக்கிற ஸ்த்ரீகளும் தாயாரைப்போல் கௌரவிக்கப்பட அர்ஹறதை உள்ளவர்களென்று எடுத்துக்கொள்ள வேண்டும். அதாவது ஸ்த்ரீகள் தங்கள்பதி (கணவன்)யால் கௌரவிக்கப்பட வேண் டும், இதனால் ஸ்த்ரீகள் தங்களிஷ்டம் போல் பதியினி டத்தில் நடந்து கொள்ளலாமா என்ருல் அப்படிச் செய்யக்கூடாது தான் அவர்கள். ஏனென்ருல் ஸ்த்ரீகள் எப்படி லோகத்தில் நடந்து கொள்ள வேண்டுமென்று நமது சாஸ்திரங்களில் சொல்லப் பட்டிருக்கிறதோ, அதைஅவர்கள் தழுவவேண்டும். தாயாரான ஸ்ரீ மஹாலக்ஷ்மி, ஸ்ரீ சக்கரவர்த்தித் திரு மகனை ராமனுடைய தர்மபத்னியான ஸ்ரீ சீதா தேவி, பதிவ்ரதைகளான த்ரௌபதி, அருந்ததி முதலியவர்களும் ஸ்த்ரீ தர்மத்தை எப்படி நடத்தவேண்டு மென்பதை தாங்களே நடத்திக் காட்டியிருக்கிருர்கள். அதை ஸ்த்ரீகள் கைபற்ற

வேண்டும். அந்த ஸ்த்ரீ தர்மம் பின் வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது.

ஸ்த்ரீகள் முக்யமாக எப்படி நடந்து கொள்ள வேண்டு மென்றால் அவர்களுடைய பதியை (கணவன்) தெய்வமாக எண்ணி சிச்ருஷை பண்ண வேண்டும். பதி எப்படி யிருந்தாலும் அவன் சொல் படி ஸ்த்ரீகள் நடக்கவேண்டும். இப்பொழுது லோகத்தில் ஸ்த்ரீகளெல்லாம் புருஷர்களாக (அதாவது வித்யாஸ மொன்றுமில்லாமல்) ஆகிவிடப் பார்க்கிறார்கள். அதற்கு அரசாங்கம் கூட ஒத்தாசை செய்கிறது. அது மாத்ரமல்லாமல் புருஷர்களைத் தங்கள் ஸ்வாதீனத்திற்கும் கொண்டுவரப் பார்க்கிறார்கள் புருஷர்களுடைய வேலையை தாங்களே செய்து. இப்படி நடப்பதற்கு காலத்தின் கோலாஹலம் (கூச்சல்) தான் காரணம் என்று சொல்லவேண்டும். அதாவது இந்த (இப்பொழுது நடக்கிற)க் கலியுகத்தின் தோஷம் பிரகாசிக்கிறது என்று சொல்ல வேண்டும். இந்த விஷயத்திற்கு இப்பொழுது ஆரம்ப தசை நடக்கிறது. அதாவது இப்பொழுது தான் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. அது வளர்ந்து பழுக்க வேண்டும். அப்பொழுது தான் அதன் வீர்யத்தைக் காண்பிக்க முடியும். அதற்கு இன்னும் வெகுகாலம் ஆகவேண்டியிருக்கும். ஆகையால் அதைப்பற்றி இப்பொழுது கவலைப்பட வேண்டியதில்லை. நமது சாஸ்த்ரங்களில் ஸ்த்ரீ தர்மத்தைப் பற்றி சொல்லியிருப்பது ஸங்க்ரஹமாக (கொஞ்சமாக) எழுதப்பட்டிருக்கிறது கீழே.

ஸுமங்கலி ஸ்த்ரீகளுக்கு அவர்கள் பதிகளே அருகிலிருக்கிற மஹா தேவதைகளாகின்றனர், என்று தேவதைகள் நிர்த்தாரணம் செய்திருக்கிறார் களென்று வேதம் போல் ஸ்ரீமஹா பாரதாதிகளில் சொல்லப்பட்டிருக்கிறது. பதிக்கு அவன் மனங் கோணாது சுச்ருஷை செய்து வருபவளே நல்ல லோகம் போவாளேயன்றி அதை விட்டுவிட்டு ஒரு ஸ்திரி எவ்வித ஸத்கார்யங்களை அநுஷ்டித்து வந் தாலும் அவளுக்கு நல்லுலகமென்பதே கிடையாது. அவர்களுக்குத் தனியாக யஜ்ஞம், வ்ரதம், உபவா ஸம் ஒன்றும் சாஸ்திரங்களில் ஏற்படுத்தவில்லை யென்று மநு கூறுகிறார். இவளுக்கு இகபர லோ கங்களில் ஸுகத்தை தரும் தெய்வம் போன்றவனா கிருன் பதியானவன். கல்யாணமானதும் பதியின் க்ருஹத்திற்கு வந்த நாள் முதல் அவளது ஆயுஸ் முழுதும் அவனது அநுமதிக்கு (உத்தரவுக்கு) விருத்தமாக வீட்டில் எதுவும் தன் மனம் போனபடி செய்து வருவது கூடாது. ஒரு ராத்ரி மாத்ரம் கூட பதியை விட்டுப் பிரிந்திருப்பவள் பதிவ்ரதையென் னும் கோஷ்டியில் சேர்ந்தவளாகிறாளில்லை. பால் யத்தில் பிதாவினதீநத்திலும், யௌவநத்தில் பர்த்தாவின் வசத்திலும், அவன் காலாந்தரத்தில் புத்ரவசத்திலும்மிருந்து வரவேண்டியதே யன்றி ஒருக்காலும் இவர்கள் ஸ்வதந்த்ரமாயிருப்ப தென் பதே கூடாது. அமங்கலியானவள் தன் பிதா அல்லது புத்ரன், அவனுமில்லாவிடில் தனது ப்ரா தாவின் க்ருகத்திலாவது தானிருக்க வேண்டுமே யன்றி விவிக்தமாய் (தனியாய்) வாசம் செய்வதென்

பது கூடாது. அவள் இருகுலங்களின் (பிறந்தது, புகுந்தது) பெயரை கெடுத்தவளாகிறாள். அபவாதத்திற்கு இடமாவதால் லோகம் நிந்திக்கிறார். தாசவர்கம் (வேலைக்காரர்) இருந்தாலும் பர்த்ரு சுச்ருஷையை அவர்கள் செய்ய இடங்கொடாது. தான் செய்து வருவதே தான் இவளுக்கு ஸ்வரூபமாகும். எந்த க்ருஹத்தில் தம்பதிகள் ஏகமத்யமாய் சண்டை கூச்சலின்றி ஒரே மனதாய் ஒத்து சந்தோஷமாய் வாழ்கிறார்களோ அந்த க்ருஹத்தில் ஸ்ரீ மஹாலக்ஷ்மியானவள் தன் பூர்ண கலைகளுடன் நித்யவாசம் செய்கிறாள். அது ஸ்வர்க்கம் போலாம். அதின்றி வேறு மாதிரியாக இருப்பது ப்ரத்யக்ஷ நரகமுமாகிறது. புருஷன் குரூபி, துர்நடத்தை, ரோகம், குடியன், கோபம், வார்த்தகம் (கிழத்தனம்), ஊமை, குருடு, செவிடு, தரித்திரன், லோபி, பயங்காளி, வஞ்சகன் முதலிய எவ்விதமாகயிருந்தாலும் அவன் தைவத்திற்கு ஸமமானதால் உத்தமிக்கு ஸர்வ ப்ரகாரத்தாலும் பூஜ்யனேயாகிறான். கணவன் ஒருவனே கதியென்றிருக்க வேண்டும்.

பதி புஜித்த பிறகு தானுண்பதும் அவனது சந்தோஷ, துக்க காலங்களில் தானும் அப்படியே அவைகளைக் கொண்டாடுவதும் அவன் தூங்கின பிறகு தான் உறங்குவதும் அவன் விழித்தெழுந்திருக்கும் முன்னர் தான் எழுந்து கொள்வதுமாயிருப்பவள் பதிவ்ரதை லக்ஷணமுடையவளாவாள்.

வைதிக காரியத்தில் அநுகூலமாயிருப்பதும் (ஸஹதர்மசாரிதவ என்று ஜனங்கள் [illegible]

சீதையை விவாஹம் செய்து கொடுத்த காலத்திற் கூறினது போல்) க்ருஹக்ருத்யங்களை சரியாகவும் செய்ய வேண்டும். பதியின் அநுமதியின்றி வெளியே கோயில் கல்யாணம் முதலிய இடங்களுக்குப் போகக் கூடாது. ஸ்த்ரீ, சூத்ரர்களுக்கு ஜபம் தபஸ், தீர்த்த யாத்திரை, ஸந்யாசம், மந்த்ரம், தேவ பூஜையாகிய இவைகள் கிடையாது. இதை அநுஷ்டிப்பவர் பாதித்யம் பெறுவர். (இழிந்தவராகின்றனர்). மஞ்சள் பூசிக் குளிப்பது, குங்குமந்தரிப்பது, சிந்தூரந் தரிப்பது, கண்ணுக்கு மை இட்டுதல், ரவிக்கை, தாம்பூலம், தலைவாரிக் கொள்ளல் தலை கை காது இவைகளில் சுபாபரணங்களைத் தரித்தல் முதலியன புருஷனுக்கு ஆயுஸ் அபிவிருத்தி செய்கின்றன. வித்யை, தானம் வேறெந்த புண்ய கர்மத்திலும் ஸத்ரீ களுக்கு அதிகாரமில்லை. நன்னடத்தை சத்யம் தர்ம (புராண) ச்ரவணம் (கேட்பது) இவைகளோடு பதி சுச்ருஷையே ஸ்வரூபமாகும். பதிக்கு பத்னியா னவள் பாதி உடம்பென்று வேதம் உத்கோஷிக் கிறது. ஆகையால் அவன் போனபடிதான் நடக்க வேண்டும். குடும்ப நிர்வாகம் இருவருக்குமே பொதுவானது. அவனுக்கு மாறுபாடக இருக்கக் கூடாது. ஸ்த்ரீகள் கெட்டால் தர்மங்கெட்டு தேவபித்ரு காரியங்கள் வீணாகி இருக்கிறவர்கள் இறந்தவர்கள் பிறக்கப்போகிறவர்கள் யாவருக்கும் நரகப்ராப்தியாய் விடுகிறது. ஆகையால் அவள் கெடாதபடி புருஷன் கவனித்து வரவேண்டும்.

பதி செய்யும் புண்யத்தில் பாதி பத்னிக்கும் பாக முண்டாதலால் வைதிக ச்ரத்தையும் பதியின் ஸஹ

துக்கங்களும் இவர்களைச் சேர்த்ததாகும். உதயத்திற்குப் பின்பே ஸுமங்கலிக்கு ஸ்நாந காலம். அதற்கு முன்பு வீட்டில் சில வேலைகளைச் செய்து கொள்ள வேண்டும். கர்ப்பிணியின் தர்மங்கள் சொல்லப்பட்டிருக்கிறது சாஸ்த்ரங்களில்.

அப்புறம் விதவா தர்மம் :—புருஷனை இழந்தவள் மாதா, பிதா, புத்ரர் சகோதரர் மாமனார் மாமியார் இவர்களை அண்டியிருக்க வேண்டும். விதவை கூந்தலை முடிவது பதியை நற்கதி பெறாது கட்டி விடுகிறது. ஆகையால் தலையை முடியாமலிருப்பதற்காக வபநம் செய்து கொள்ள வேண்டும். ப்ரதி தினமும் ஒரே வேளை புஜித்து வரவேண்டும். பரலோகத்திலிருக்கும் பதியின் ஹிதார்த்தம் ப்ரதி தினம் பர்த்தா அவனது பித்ரு, பிதாமஹர்களது நாமகோத்ரங்களைச் சொல்லி எள்ளும் தண்ணீருமாய் தர்பணம் செய்து வரவேண்டும். இனாந்தோறும் விஷ்ணு பூஜை ஜபம் பகவத்யாநங்கள் இவைகளைச் செய்து காலங்கழித்து வரவேண்டும். ஸதா பர்த்தாவின் ஸ்மரணையிலிருந்து கொண்டிருக்க வேண்டும். உப்பு, உப்பு ஸம்பந்தப்பட்டது இத்திப்பு, தாம்பூலங்களை விடவேண்டியது. வெற்றிலையோ, பாக்கோ தனியாக புசிக்கப்படுவது மாம்ஸாஹாரத்திற்கும், சேர்ந்துட்கொள்வது ஸுராபானத்தோடும் ஒக்கும். ஸ்த்ரீகள் பதியின் அனுமதியின் பேரில் வ்ருதாதிகளை அநுஷ்டிப்பது குற்றமாகாது. ரவிக்கையில்லாத ஸுமங்கலியையோ, ரவிக்கையோ தலையிலே மயிரையோ உள்ள விதவையையோ

பார்த்து விட்டவன் உடனே ஸசேல ஸ்நாநம் செய்தால்தான் சுத்தமாகிறுன்.

ஸ்த்ரீக்கு நற்கதிக்கு புத்ரன் வேண்டுமென்கிற அவச்யமே கிடையாது. பதி சுச்ரூஷையால் அதை அடைவதற்கு யோக்யதை உண்டு.

---

# அஷ்டக்ரஹ சந்திப்பு

இப்பொழுது லோகத்தில் பார்க்கலாம் பலபேர்கள் (ஒன்றுக்கு மேலிருந்தால் பலபேர்கள் என்று எடுத்துக் கொள்ள வேண்டும்) சேர்ந்து செய்கிற கார்யம் உருப்படுவதில்லை (அதாவது விளங்குவதில்லை). அந்தப்பலபேர்களுக்கு அபிப்ராய பேதங்களிருக்கும். அப்பொழுது எந்த அபிப்ராயத்தைத் தழுவி அந்தக்காரியம் செய்வதென்பது ஏற்படாது. அதனுல் காரியம் சரியாகச் செய்யப்படாமல் போய் கெட்டுவிடும்.

நமது சாஸ்த்ரங்களில் ஒரு பிரிவு ஜோதிடம் (ஜோஸ்யம்) என்று இருக்கிறது. அதனுல் ஜனங்கள் வருங்காலத்தில் என்ன நடக்கலாமென்பதைப்பற்றித் தெரிந்து கொள்ளலாம். ஆனுல் ஒரு சாபம் காரணமாக இந்தக்காலத்தில் அந்த சாஸ்த்ரத்தை சரியாக உபயோகப்படுத்திக் கொள்ள முடியாது. அதைக் கைகொள்ளாமல் அதிலிருந்து சில விஷயங்களை மாத்ரம் எடுத்துக் கொள்வோம், நம்முடைய கார்யத்திற்கு அவைகள் வேண்டியிருப்பதால். நம்முடைய காரியம் கீழே சொல்லப் பட்டிருக்கிறது.

ஜோதிடத்திலிருந்து சில விஷயங்கள் என்று சொன்னவைகள் பின்வருமாறு:—9 பேர்கள் (வானத்திலிருக்கிற க்ரஹங்கள் என்று சொல்லப் படுகிறவர்கள்) ஜனங்களுக்கு தங்களுடைய திருஷ்டி (பார்வை) யினுல் சில நல்ல (அநுகூலமான)

அல்லது கெட்ட (அனுகூலமில்லாத) பலன்களைக் கொடுக்க அதிகாரம் பெற்று அவைகளைக் கொடுத்துக் கொண்டும் ஆகாயத்தில் எந்த வழியில் போக வேண்டுமோ அந்த வழியில் சஞ்சரிக்கிறார்கள். அநேகமாக மேலே சொன்னவர்களில் 2 பேர்களாவது ஒரு சமயத்தில் சேர்ந்திருப்பார்கள். அப்போது சேர்ந்தவர்களில் யார் பலவானாக இருக்கிறானோ அவனுடைய பலன்தான் உபயோகப

1962ம் வருஷம் பிப்ரவரி மாதத்தில் சொன்ன 8 பேர்கள் ஒரே இடத்தில் சேர தாகவும், மற்ற ஒருவருடைய பார்வை 8 பேர்கள் மேல் விழும் என்றும் ஜோதிடக்க கணக்குப் போட்டுப்பார்த்து (அதாவது சேர்வார்களென்று) நிர்ணயித்திருக்கிறார்கள யப்படுத்தி யிருக்கிறார்கள்). இந்தமாதிரியான வம் மிகவும் அபூர்வமாக நடக்குமென்று சொ றார்கள். ஒரு பெரியவர் கூட மஹாபாரத சொல்லியிருக்கிற பாரதயுத்தம் நடக்கும்பொ மேலே சொன்னமாதிரி 9 பேர்கள் சேர்திருக் மென்று சொல்லியிருக்கிறார். இந்த மாதிரி 9பே ளும் சேர்திருந்தால் என்ன பலன் கிடைக்க கூ மென்று பார்ப்போம்.

மேலே இந்த வ்யாஸாரம்பத்தில் சொன்ன மாதிரி பலபேர்கள் அதுவும் ஒருவருக் கொருவர் பகை காட்டி கொள்ளுகிறவர்கள் சேரப்போவ தால் அவர்கள் செய்யப்போகிற கார்யம் சரியாக (நல்லதாக யில்லாமல் கெட்டதாகத்தான் முடியும்.

அதாவது லோகத்திற்கு கெடுதிதான் நடக்க வேண்டும். இந்தக் கெடுதி எல்லோருக்குமே வருமா என்ற கேள்வி வருகிறது. அதற்கு ஸமாதானம் எப்படியிருக்கலாமென்று விசாரிப்போம் இப்பொழுது.

லோகத்தில் நடக்கிறவைகளெல்லாம் பெருமாளதீனம். அதாவது அவைகளெல்லாம் தங்கள் கார்யங்களை தாங்களே செய்யாமல் பெருமாளால் செய்யும்படி ஆட்டிவைக்கப்படுகிறார்கள் என்று சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ப்ரகாரம் பார்த்தால் 1962ம் வருஷம் நடக்கப் போகிற ஸம்பவமும் பெருமாளால்தான் நடத்தப்படவேண்டும். பெருமாள் நடத்துவதாயிருந்தால் ஏதாவதொருகாரணத்தை உத்தேசித்துதான் செய்வார். அந்தக் காரணமும் ஜனங்களுடைய நல்லத்திற்குத்தானிருக்கும். 1962ம் வருஷம் நடக்கப்போகிற ஸம்பவம் மிகவும் அபூர்வமென்று சொல்லப்படுவதால் பெருமாள் எதற்காக அதை நடக்கும்படியாகச் செய்ய வேண்டும்? ஏதோ ஒன்று நடக்கக் கூடாதென்று நமது சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட விஷயம் இப்பொழுது லோகத்தில் நடந்து கொண்டிருக்க வேண்டும், அதைத்துலைப்பதற்காக 1962ம் வருஷம் நடக்கப்போகிற அபூர்வமான சம்பவத்தை உபயோகப்படுத்த வேண்டும். மேலே சொன்ன விஷயம் என்னவிதமாக இருக்கலாமென்றால் அது ஸாதாரணமாக இல்லாமல் விசேஷமாகத்தானிருக்கும். விசேஷமான காரியத்தில் தான் பெருமாள் ப்ரவேசிப்பார். அப்பேர்ப்பட்ட காரியம் என்னவென்று

பெருமாள் ஸ்ரீமத் பகவத்கீதையில் சொல்லியிருக்கி ருர். அது என்னவென்றுல், ஸாதுக்களை ரக்ஷிப்பதற்கும், துஷ்டர்களை சிக்ஷிக்கவும், தர்மத்தை லோகத்தில் நிலை நாட்டுவதற்கும் யுகங்கள் தோறும் பூமியில் தான் அவதாரம் எடுத்தல். 1962ம் வருஷம் நடக்கவேண்டிய கார்யத்திற்கு பெருமாள் தானே வராமல் மேலே சொன்ன ஸம்பவத்தை அனுப்புவார் அதுவே போதுமானதென்று. ஆகையால் 1962ம் வருஷம் நடக்கும் ஸம்பவத்தில் ஸாதுக்கள் (நமது சாஸ்திரம் சொல்படி நடப்பவர் கள்) ரக்ஷிக்கப்படுவார்கள். (அவர்களுக்கு கெடுதி ஒன்றும் வராது). துஷ்டர்கள் (சாஸ்த்ரம் சொல்படி நடக்காதவர்கள்) கஷ்டங்களை அடைவார்கள். தர் மங்கள் பூமியில் நிலை நாட்டப்படும் என்று சொல்ல வேண்டும். ஆனல் பெருமாள் என்னமாதிரி செய் வாரோ ஒன்றும் சொல்லமுடியாது. ஆகையால் எல்லோரும் பெருமாளை எல்லோருக்கும் நல்லது செய்யும்படி ப்ரார்த்திக்க வேண்டும்.

---

## ஆதி தைவிகம்

லோக நாடகத்தில் நடிப்பவைகளுக்கு அநேகம் கருவிகள் உதவிக்குக் கொடுக்கப்பட்டு அவைகள் நாடக மேடைகளான லோகங்களுக்கு நடிப்பதற்கு அனுப்பப்படுகின்றன. அதாவது அந்த நடிகர்கள் தாங்கள் நடிக்கும்போது மேலே சொன்ன கருவிகளையெல்லாம் உபயோகப்படுத்திக் கொள்ள வேண்டுமென்ற ஆஞை, தங்கள் சிருஷ்டி கர்த்தாவிடமிருந்து அவர்களுக்கு, ஆதலால் அந்தக் கருவிகளில் ஒன்றும் தள்ளிவிடபடக் கூடாது.

மேலே சொன்ன கருவிகளில் ஸுகமென்றது ஒன்ருகும். ஸுகமென்ருல் வேதனையில்லாதது. இந்த ஸுகத்தை எல்லா நடிகர்களும் உபயோகப் படுத்திக் கொள்ள வேண்டும். இந்த ஸுகம் தான், அதுவும் அது மாத்திரந்தான், லோகத்தார்களால் உபயோகப்படுத்திக் கொள்ள (ஆடையா) இச்சிக்கப்படுகிறது. ஆனல் இந்த ஸுகமென்ற கருவி துக்கம் (வேதனை) என்ற கருவியோடு சேர்ந்து பிணைக்கப்பட்டிருக்கிறது. அதாவது ஸுக - துக்கக் கருவியாக இருக்கிறது. அதாவது சில சமயம் ஸுகத்தையும் சில சமயம் துக்கத்தையும் உபயோகப்படுத்திக் கொள்ள வேண்டும் லோகத்தார்கள். இந்த ஸுக- துக்கக் கருவி மூன்று விதமான காரணங்களால் உண்டாக்கப்படும். அந்தக் காரணங்கள் : (1) ஆதி தைவிகம் (2) ஆதி பௌதிகம் (3) ஆத்யாத்மிகம் என்று சொல்லப்படும்.

**ஆதி தைவிகம் :** தைவத்தால் (பெருமான் அல்லது பெருமாள் ஸம்மந்தமான) செய்யப்படும் காரியம். அதாவது பெருமாளால் (இப்படி அவர் செய்வதில்லை) அல்லது அவருடைய சிப்பந்திகளாலே அவர் செய்யச் சொல்லி செய்யப்படுவது.

**ஆதி பௌதிகம் :** பிராணிகளால் செய்யப்படுவது.

**ஆத்யாத்மிகம் :** தனக்குத் தானே செய்து கொள்வது. அதாவது தானே காரணமாயிருப்பது. மேலே சொன்ன காரணங்கள் அவரவர்கள் முன் ஜன்மங்களில் செய்த கர்மவினைகள், அதாவது முன் ஜன்மங்களில் அதிக புண்யமான (நம் சாஸ்த்ரங்களில்செய்யச் சொன்ன மாதிரி) கார்யங்கள் செய்திருந்தால் ஸுக - துக்கக்கருவியில் ஸுக பாகத்தை அதிகமாகவும் துக்க பாகத்தை குறைவாகவும் அனுபவிக்க (உபயோகப்படுத்த) வேண்டியிருக்கும். முன் ஜன்மங்களில் செய்த கார்யங்கள் அதிக பாபகங்களாகவும் (சாஸ்த்ரங்களில் சொல்லப்படாத மாதிரி) புண்யமான கார்யங்கள் குறைவாகவும் இருந்தால் அதற்குத் தகுந்தாற் போல் துக்கத்தை அதிகமாகவும ஸுகத்தை குறைவாகவும் அனுபவிக்க வேண்டியிருக்கும்.

லோக ச்ருஷ்டி கர்த்தா, ப்ரம்மா (பெருமாளுடைய சிப்பந்தி) லோகத்தார் நல்ல (ஸரியான) வழியில் நடப்பதற்கு ஆதி தைவிகம், ஆதி பௌதிகம், ஆத்யாத்மிகம் என்றவைகளை அஸ்த்ரமாக (ஆயுதமாக) வைத்துக் கொண்டிருக்கிறார். அவை

களை எந்த எந்த காலத்தில் உபயோகப்படுத்த வேண்டுமோ அப்பொழுதுதான் உபயோகப்படுத்து வார். அதுவும் ஆதி தைவிகமென்ற துக்க பாகம் லோகத்தார்கள் மிகவும் பாபத்தைச் செய்த பொழுதுதான் உபயோகப்படுத்த ஏற்பாடு செய்யப்பட்டிருக்கும். அதாவது அந்த ஸந்தர்ப்பத்தில் அது நடக்கும். அந்த மாதிரி ஸந்தர்பம் லோகத்தில் வந்திருக்கிறது இப்பொழுது. அது என்னவென்ருல் ஜனங்கள் ஆஸ்திக்கிய (தெய்வ பக்தி) த்தை இழந்து நாஸ்திக்யத்தை (தெய்வமில்லையென்பது) தழுவி வருகிருர்கள். அதைத் திருத்த பெருமாளால் 1962 பிப்ரவரி மாதம் 3-ம் தேதி அன்று நடக்கப்போகிற அஷ்டக்ரஹங்களின் (சூரியன், குரு, சனி, சுக்கிரன், புதன், செவ்வாய் சந்திரன், கேது) சேர்க்கை மகரராசியில் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இந்த அஷ்டகிரஹங்கள் சேர்க்கையைப்பார்த்து அது என்ன கெடுதியைக் கொடுக்குமோ என்று பயந்து, ஆஸ்திக்யத்தை தழுவஆரம்பிப்பார்கள் என்ற காரணத்தை உத்தேசித்து அந்த க்ரஹங்கள் சேர்க்கை நடத்தப்படுகிறதுபோலும். அதேமாதிரிதான் இப்பொழுது நம் தேசத்தில் நடக்கிறது. அநேக இடங்களில் க்ரஹ-சாந்தி என்ற கர்மா செய்யப்படுகிறது க்ரஹசேர்க்கைக் கெடுதியைத் தடுப்பதற்கு. இதனுல் நல்ல பலந்தான் கிடைக்கும். ஆனுல் லோகத்திற்கெல்லாம் நல்ல பலனே கிடைக்கும் என்று சொல்வதற்கில்லை. ஏனென்ருல் சில இடங்கள் கெடுதியை இந்த ஸமயத்தில் அடைந்தாக வேண்டுமென்று

முன்னாலேயே நிர்ணயிக்கப்பட்டிருக்கும். அவைகள் நடந்து தான் ஆகும்.

பெருமாள் எதைச் செய்தாலும் அது நல்லதிற்குத் தானிருக்குமாதலால், மேலே நடக்கப்போகிறதாகச் சொன்ன விஷயத்திற்குப் பிறகு நல்லது தான் நடக்கும். ஆகையால் ஜோஸ்யர்கள் இந்த க்ரஹசேர்க்கையைப்பற்றி சொல்லியிருக்கிற "இந்த க்ரஹங்கள் சேர்க்கை கெடுதல் ஒன்றும் செய்யாது" என்ற வார்த்தை பொய்யாகாமலிருக்கலாம். அதாவது அந்த மாதிரியாகவே நடக்கலாம். எதற்கும் இந்த ஸமாசாரத்தைப்பற்றி பேசுவதை அது கழிந்தபிறகு வைத்துக் கொள்ளுவது நல்லது. ஆகையால் மேலே சொல்லியிருக்கிற மாதிரி இந்த அஷ்டக்ரஹங்கள் சேர்க்கையான அபூர்வமான ஸம்பவம் (இந்த மாதிரியான க்ரஹங்கள் சேர்க்கை மஹா பாரதயுத்தம் நடக்கும்போது இருந்ததாக ஒரு பெரியவர் சொல்லியிருக்கிறார்) லோகத்திற்கு துக்கத்தைத்தான் விளைவிக்க வேண்டியது என்று எடுத்துக் கொள்ள வேண்டும். ஆனால் பெருமாள் ஒருவர்தான் அதை நடக்காமல் மாற்றமுடியும். ஆகையால் எல்லோரும் பெருமாளை மேலே சொன்ன க்ரஹச் சேர்க்கை சேஷ்டை நடவாமலிருக்கும்படிச் செய்து நல்லது நடக்கும்படி ப்ரார்த்திக்க வேண்டியது இப்பொழுது அவச்யமான கார்யமாகும்.

---

## பாஷை

ஜகதீச்வரனுன பெருமாள் தானே ஜகந்நாடகத்தை நடத்துகிருரென்ற விஷயம் அடியேனுல் முன்னுலேயே கொஞ்சம் விளம்பரப் படுத்தப்பட்டிருக்கிறது. அந்த நாடகம் வெகு ஆச்சர்யமாக நடைபெருகிறதென்று சொல்லவும் வேண்டுமா? அந்தக்காரியம் அவரொருவராலே தான் அப்படி நடத்தப்பட முடியும்.

மேல் சொல்லியிருக்கிற அந்த நாடகத்தில் நடிப்பவர்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் கருவிகள் அநேகம் உண்டு. அவைகளில் பாஷை என்பது ஒன்ருகும் (பாஷை என்ருல் பேச்சு என்ற அர்த்தமாகும் அதை உபயோகப்படுத்தித் தன்னுடைய மனதிலிருக்கும் விஷயத்தை வெளிப்படுத்தலாம்) அந்த பாஷை சிருஷ்டித்த எல்லாவற்றிற்கும் இயற்கை (தன்மை). அதாவது அது லோகத்தில் சிருஷ்டிக்கப்பட்ட மனிதர்களைத்தவிர மற்ற ஸ்தாவர (புல், பூண்டு, செடிகள்) ங்கள், ஜங்கமங்கள் (பிராணிகள்), இன்னம் மற்ற என்ன என்னவை சிருஷ்டிக்கப் பட்டிருக்கிறதுகளோ அவைகளுக்கும் இயற்கையாயுள்ளது. ஸ்தாவர ஜங்கமங்கள் பேசுவதில்லையே எப்படி பாஷை அவைகளுக்கும் கருவியாகும் என்று கேட்டால், லோகத்தில் சிருஷ்டித்தவைகளுக்கெல்லாம் உயிர், ஜாதி, பாஷை முதலியவைகளுண்டு. ஜாதியும் பாஷையும் வெவ்வேறு விதமாயிருக்கும். ஒவ்வொரு ஜாதியில் பிறந்திருக்கிறவைகள் அவைகளுக்கு ஏற்படுத்தியிருக்கிற பாஷையில் பேசிக்கொள்ளும். எறும்புகள் பேசிக்கொள்ளு

வதைப்பற்றி ஒரு ஸம்பவம் ஸ்ரீமத் ராமாயணத்தில் வெளியிடப்பட்டிருக்கிறது. அது என்னவென்றால் :—(ஸுமந்த்ரர் கைகேயியைக்கண்டிக்கிற கட்டம் இது)—முன்பு ஒரு ஸமயத்தில் ஒரு கந்தர்வன் உன் பிதாவுக்கு ஒரு வரத்தைக்கொடுத்தான். அதன் மஹிமையால் எல்லா ஜந்துக்களின் பாஷையையும் ஸுலபமாய் அவர் அறியமுடியும். ஒரு நாள் இரவில் அவர் கட்டிலில் உன் தாயுடன் படுத்துக் கொண்டிருக்கும் பொழுது சுவற்றிலிருந்து அதன் கீழே ஓடிக் கொண்டிருந்த எறும்புகள் பேசியதைக்கேட்டு ஆச்சர்யம் தாங்காமல் அடிக்கடிச் சிரித்தார். அதைக்கேட்டு உன் தாய் அவர் எதிரா தன்னைப்பார்த்தே கேலியாகச் சிரிக்கிறாரென்று கடுங்கோபமடைந்து, இப்பொழுது எதற்காகச் சிரித்தீர்? உண்மையைச் சொல்லு" மென்றாள். "சொல்லுவதில் யாதொரு ஆக்ஷேபமில்லை. ஆனால் அதைச் சொன்ன நிமிஷத்திலேயே என் தலை சுக்கலாக வெடித்து இறைப்பே" னென்றார் அச்வபதி. அவள் "ஸரி, ஸரி: நீர் சிரித்ததற்குக் காரணம் எனக்குத் தெரியும். அதைச் சொல்லக் கூடாதென்றே இப்படி சாக்குப் போக்குச் சொல்லி என்னை ஏமாற்றப் பார்க்கிறீர். நீர் இருந்தாலும் ஸரி, இறந்தாலும் ஸரி; என்னைப்பார்த்து சிரித்த காரணத்தை ஒளிக்காமல் இப்பொழுதே சொல்லத்தான் வேண்டும். இல்லாவிட்டால் உமக்கெதிரில் உயிரை விடுவே"னென்றாள். இப்படிப் பிடிவாதம் பிடித்தவளைப் பார்த்துக் கேகய ராஜனுக்கு ஒன்றும் தோன்றவில்லை. தனக்கு வரத்தைக் கொடுத்த கந்தர்வனிடத்திற்குப் போய்

நடந்த ஸங்கதியைத் தெரிவித்து, "ஸ்வாமி! இதற்கு என்ன செய்யலா மென்று கேட்டார். அவன் "அவள் சாகட்டும், நாசமாகட்டும்; நீர் ஒரு நாளும் அவளுடைய வார்த்தைக்குக் கட்டுப்பட்டு அனர்த்தத்தைத் தேடிக்கொள்ள வேண்டா"மென்ருன். பிறகு உன் பிதா கவலை தீர்ந்து உன் தாயை தகுந்தபடி தண்டித்து தள்ளிவிட்டார். பக்ஷிகளெல்லாம் கத்திக்கொண்டிருக்கும். அப்பொழுது அவைகள் தங்கள் இனத்தோடு பேசிக்கொண்டிருக்கும். முன்காலத்தில் பசுக்கள் பேசிக்கொண்டிருந்ததாகவும், ஒரு ஸமயம் ஒரு பசு தன் எஜமானனிடம் வருங்காலத்தைப்பற்றி தெரிவித்ததனுல் அது வாயால் பேசாமலிருக்கும்படி சாபமிடப்பட்டு இப்பொழுது பேசுகிறதில்லை என்று சொல்வதை அடியேன் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனுல் பாஷை ஒவ்வொரு ஜாதிக்கும் வெவ்வேறு மாதிரியாகயிருக்கும். அதாவது சிருஷ்டிக்கப்பட்டவைகள் தங்கள் ஜாதி பாஷையை உபயோகித்துக் கொள்ளவேண்டும். இன்னெரு ஜாதி பாஷையில் பேசினுல் ஸரிவராது. அதாவது அதன் பேரில் குற்றம் சாட்டுவதற்கு இடம் கொடுக்கும். உதாரணமாக, ஒரு பத்ரிகை ஆசிரியர் தன் பத்திரிகைக்கு தன் பாஷையில்லாத ஆங்கில பாஷையில் Kataka என்று பெயரிட்டிருக்கிருர். இந்த Kataka என்ற பதம் நான்கு விதமாக (கடக, கடாக, காடக, காடாக) உச்சரிக்கப்படலாம். அதாவது அந்த பதத்திற்கு எது ஸரியான உச்சரிப்பு என்று தெரியாமல் போய் அதைப்பற்றி பரிஹாஸம் பண்ணுவதற்கு இடம்

கொடுத்து, ஒருவராலே பரிஹாஸமும் பண்ணப் பட்டதை அடியேன் கேட்டிருக்கிறேன். இது தன் பாஷையை விட்டு விட்டு அன்ய பாஷையைத் தழு வியதின் பயனென்றுதான் சொல்லவேண்டும்.

பாஷையைப்பற்றி ஒன்றும் குறை கூறக் கூடாது, "காக்காவிற்கு தன் குஞ்சு பொன் குஞ்சு" என்ற மாதிரி, அந்த அந்த ஜாதிக்கு அந்த அந்த பாஷையைப் பெருமாள் ஏற்பாடு செய்திருக்கிறார். ஆகையால் ஒவ்வொரு ஜாதிக்கும் கொடுக்கப்பட்டி ருக்கிற பாஷையைப்பற்றி ஒன்றும் சொல்லக் கூடாது. அதாவது அப்படிச் செய்வதால் அது செய்யக்கூடாத பாபகார்யமாகும்.

---

# ஜோஸ்யம், தலைவிதி, புருஷகாரம்.

ஜோஸ்ய விஷயங்களைப்பற்றி பேசும் பத்திரிகையில் ஒருவர் "ஜோஸ்யம், தலைவிதி, புருஷகாரம்" என்ற தலைப்பில் ஒரு வியாஸத்தை பிரசுரித்திருக்கிறார். அதனுடைய சுருக்கம் பின்வருமாறு:—

"எல்லாம் கர்மாதீனமென்று [அதாவது லோகத்தில் ஒவ்வொருவருக்கும் அவரவர்கள் முன் ஜன்மங்களில் பண்ணின கர்மா ப்ரகாரம் அவர்களுக்கு எல்லாம் நடக்கிறது] எல்லோரும் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். இது எல்லோருக்கும் அவர்களுடைய தலைவிதி என்று சொல்லப்பட்டு, அந்த பிரகாரம் எல்லோரும் நல்லதையோ கெட்டதையோ அனுபவித்தே தீரவேண்டும். நடக்கிற ஜன்மத்தில் ஜோஸ்யத்தினால் (ஜோதிடம்) ஒவ்வொருவருடைய ஜாதகத்தை கவனித்துப் பார்த்து அவர்களுடைய சென்ற கர்மா (தலைவிதி) வையும், அவர்களுக்கு வரப்போகிற கர்மாவையும் அறிந்து கொள்ளலாம்.

புருஷகாரம் அதாவது ப்ரயத்னம் (இது வ்யாஸம் எழுதினவருடைய அர்த்தம்) இல்லாமல் ஒரு கார்யமும் நடவாது, அதாவது எல்லாக் கார்யங்களும் அவரவர்களே ப்ரயத்னப்பட்டு ஸாதித்துக் கொள்ள வேண்டும். இந்த புருஷகாரம் செய்வதற்கு எல்லோருக்கும் சக்தி உண்டு, இல்லாவிட்டால் சாஸ்த்ரங்களில் இதைச் செய். இதைச் செய்யாதே என்று சொல்லப்பட்டிருக்காது. இந்தப்புருஷகாரத்தை வைத்துக் கொண்டு, ஜோஸ்யம் பார்த்து, கர்மாக்களைத் தெரிந்து கொண்டு முன்

ஜாக்கிரதை பண்ணிக் கொள்ளலாம். ஆகையால் ஜோஸ்யம் மிகவும் உபயோகமுள்ளது.''

மேலே சொல்லிய வ்யாஸத்தில் பேசினதை ஆராய்சி பண்ணினுல் அது ஸரியல்ல வென்று தான் சொல்லவேண்டும், பின்வரும் காரணங் களால் :—

சாஸ்தரங்களில் சொல்லிய "தேனவிறு த்ருண மபி நசலதி'' என்ற வாக்யம் ஒன்றே போதுமான ஸமாதானம் ஆகும் மேலே சொன்ன வ்யாஸத் திற்கு. "தேன விறு த்ருணமபி நசலதி'' என்ருல் "அவனில்லாமல் (அதாவது பெருமாளுடைய சகாயமில்லாமல்) ஒரு துரும்பு கூட அசையாது!'' அதாவது லோகத்திலுள்ளவைகளுக்கு ஸ்வாதீன மொன்றும் கிடையாது. எல்லாவற்றையும் பெரு மாள் தான் நடத்துகிருர். அது எப்படியென்ருல் "ப்ரம்ம லிபி (அவைகளின் கர்மா) யையும் நிர்ண யித்து அதன் பிரகாரம் நடந்து கொள்ளும்படி ஏற் பாடு செய்து விடுகிருர். அதே ப்ரகாரம் எல்லாம் நடந்துக் கொள்கிறது. மேலே சொன்ன ப்ரம்மா என்றது பெருமாளைத்தான் குறிக்கும்.

சிருஷ்டித்தவைகள் தாங்கள் நடந்து கொள்வ தற்கு உதவி புரிய பெருமாள் சாஸ்திரங்களை ஏற் படுத்தியிருக்கிருர். சாஸ்த்ரங்களெல்லாம் எச்ச ரிக்கை (கவனமாக இருக்குமாறு குறிப்பிடுதல்). அதனுல் அதில் சொல்லப்பட்டவைகளை கட்டளை என்று எடுத்துக் கொள்ளக் கூடாது. அதாவது

இன்னது செய்தால் அதற்கு இன்ன பலன் கிடைக்குமென்று எடுத்துக் கொள்ள வேண்டும்.

கர்மாக்கள் தான் கார்யங்களின் பலன். இதை எல்லாம் அனுபவித்தே தீரவேண்டும். ஆனால் சில கார்யங்களை சிருஷ்டித்தவைகள், "புருஷகாரம்" [அதாவது ப்ரயத்னம் செய்து] பண்ணி நடத்திக் கொள்ள வேண்டியிருக்கும். அப்படிச் செய்வதும் அந்த மாதிரி புருஷகாரம் பண்ணி நடந்து கொள்ள வேண்டுமென்றிருக்கும். ஆகையால் சிருஷ்டிக்கப் பட்டவைகளுக்கு புருஷாகார சக்தி கிடையாது. விஷயம் இந்த மாதிரி இருக்கும்பொழுது "புருஷ காரம்" எப்படி செய்ய முடியும்?

மேலே சொன்ன வ்யாஸத்தில் சொல்லிய "ஜோஸியம் சென்ற காலத்தையும் வருங்காலத் தையும் தெரிவிக்கும்" என்றது கூட சரியல்ல. வேதத்தின் அங்கமான ஜோஸ்ய சாஸ்த்ரம் முன் யுகங்களில் உதவி புரிந்து கொண்டிருந்தது. ஆனால் இப்பொழுது நடக்கிற கலியுகத்தில் ஒரு சாபக் கேட்டினால் ஜோஸ்யம் உபயோகப்படுமோ படாதோ என்று ஸந்தேகிக்க வேண்டியதாக இருக்கிறது.

---

# த்ரிமூர்த்திகள்

[இந்த வ்யாஸம் "வேத உபநிஷத் பாகம்" என்ற வ்யாஸத்திற்கு (முன்னால் அச்சிடப்பட்டிருக்கிறது). அடுத்தபடியாக அச்சிடப்படவேண்டியிருக்க, இங்கே அச்சிடப்பட்டிருக்கிறதற்குக் காரணம் அதன் கர்மாவென்றுதான் சொல்ல வேண்டும்.]

அடியேனுடைய ஆசார்யர் அடியேனுக்கு வேதம் புரியுமென்று அனுக்கிரஹித்திருக்கிருரென்று வேதத்தைப்பற்றி எழுதும்பொழுது அடியேனால் சொல்லப்பட்டிருக்கிறது. அவர் மேலும் அடியேனை அனுக்கிரஹித்தபடி என்னவென்றால் "பெருமாள் அடியேனுக்கு "மஹாபக்தன்" என்கிற பிருதை ஸாதித்திருக்கிருர்." அந்த பிருதை அடியேனுடைய பெயராக முன்னால் சொல்லப்பட்டிருக்கிறது.

மஹா பக்தன் இதற்கு முன்னால் எழுதியிருக்கிற வ்யாஸங்கள் ஒன்றில், "பெருமாள் தான் லோகத்திற்கு எஜமானன், அதனால் அவர் லோகத்தை (பூமியும், அதனுள்ளே இருக்கிறவைகளும்) ஆண்டு வருகிருர். லோகத்தில் நடக்கிற மாதிரி உத்யோகஸ்தர்களையும், சிப்பந்திகளையும் வைத்துக்கொண்டு" என்று சொல்லி இருக்கிருன். அதாவது பெருமாள் தான் ஒன்றும் நடத்தாமல் உத்தியோகஸ்தர்களையும், சிப்பந்திகளையும் ஏற்

படுத்திக்கொண்டு, அவர்கள் மூலமாக லோகத்தை அரசு புரிந்து வருகிருர்.

மேலே சொல்லியிருக்கிற உத்தியோகஸ்தர்கள் யார் என்ருல் முதலில் த்ரிமூர்த்திகளென்று (பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் அல்லது சிவன்) பெயருள்ளவர்களைச் சொல்லவேண்டும். ஏனென்ருல் அவர்கள் மிகவும் பிரதானமானவர்கள். பிரம்மாவுக்குச் சிருஷ்டிக்கிற (உற்பத்தி பண்ணுகிறது) கார்யம் பெருமாளால் அவருக்குக் கொடுக்கப்பட்டு, விஷ்ணுவுக்கு ரக்ஷிக்கிற (காப்பாற்றுகிறது) கார்யமும், சிவனுக்கு (அவன் பிரம்மாவின் புத்ரன்) அழிக்கிற (ஒன்றுமில்லாமல் செய்கிறது) கார்யமும் கொடுக்கப்பட்டிருக்கிறது. மேலும் இவர்கள் பகவானுடைய அம்சம் பெற்றவர்கள்.

மேலே சொன்ன த்ரிமூர்த்திகளில் பிரம்மாதான் ச்ரேஷ்டமானவர் (முக்கியமானவர்). ஏனென்ருல் அவருக்கு முக்கியமான சிருஷ்டிக்கிற கார்யம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதனுல் அவர் பெருமாளுக்கு அடுத்தபடி. இந்தக் காரணத்தை வைத்துக் கொண்டுதான் பெருமாளிடம் பிரார்த்தனைக்குப் போகும்பொழுது பிரம்மா மூலமாகத்தான் போக வேண்டும். அதாவது பிரம்மாதான் எல்லாவற்றிற்கும் பெருமாளைப் ப்ரார்த்திக்க வேண்டும்.

பிரம்மா மேலே சொல்லியிருக்கிற வெகு பெரிய பதவியை அடைந்திருந்த போதிலும், அவரை துரதிர்ஷ்டசாலி என்றுதான் சொல்ல வேண்டும்.

ஏனென்றால் அவரைக் கோயிலில் வைத்து மற்ற உத்தியோகஸ்தர்களுக்கு பூஜை நடத்துகிறாப் போல் ஒருவரும் பூஜை பண்ணக்கூடாது என்று ஒரு சாபம் போட்டிருக்கிறபடியால். ஆனால் அவர் செய்யக்கூடாத காரியத்தை செய்ததினால் பாபம் ஏற்பட்டு அதற்கு இந்த தண்டனை விதிக்கப் பட்டிருக்கிறது. அதற்கு பிரம்மா ஒப்புக்கொண்டு ஒன்றையும் லக்ஷியம் செய்யாமல் தன் காரியத்தை சந்தோஷமாக செய்துக்கொண்டு வருகிறார். இப்படி செய்வது ஒன்றும் அதிசயமான கார்யமல்ல, ஏனென்றால் பெருமாள்கூட அந்த மாதிரி தண்டனையை ஏற்றுக் கொள்ளுகிறார். ஆனால் பிரம்மா விற்கு மற்றவர்களுக்கு வரம் (வேண்டுகோள்) அளிக்கும் சக்தி கொடுக்கப்பட்டிருக்கிறது, பெருமாளால்.

(அதேபோல் சிவன்போலுள்ள சில உத்தி யோகஸ்தர்களுக்கும் கொடுக்கப்பட்டிருக்கிறது)

எல்லா வேதங்களிலும் (ரிக், யஜுர், சாம, அதர்வணம்), ஸ்ரீமத் பகவத் கீதையிலும் கீழ் எழுதி யிருக்கிற மாதிரி சொல்லப்பட்டு இருக்கிறது. அது என்னவென்றால் :-பிராம்மணன் பிரும்மாவின் முகத் திலிருந்தும், ராஜன்யன் பிரம்மாவின் கையிலிருந் தும், வைசியன் பிரம்மாவின் துடையிலிருந்தும், சூத்ரன் பிரம்மாவின் காலிலிருந்தும் உண்டானார் கள். அதாவது, மனிதர்கள் நாலுவிதமாக (பிராம் மணன், ராஜன்யன் (க்ஷத்ரியன்), வைசியன், சூத்ரன்) பிரம்மாவால் பிரிக்கப்பட்டு, அவர்கள் மேலே சொல்லியிருக்கிறபடி உற்பத்தியானார்கள். அதா வது பிரம்மா மேலே சொன்னமாதிரி மனிதர்களை சிருஷ்டித்தார். பிறகு பிரம்மா தன் மனதிலிருந்து

மானஸ புத்ரர்களென்று பெயர் கொண்ட நான்கு (ஸனகர், ஸனத்குமாரர், ஸனந்தனர், ஸநாதனர்) பேர்களை சிருஷ்டித்து, பிரஜா விருத்தி (சிருஷ்டி) செய்யச் சொன்னார். ஆனால் அவர்கள் அதை ஏற்றுக்கொள்ளாமல், ஏனென்றால் அந்தக்காரியத்தைச் செய்தால் சம்சாரக் கட்டில் அகப்பட்டுக் கொள்ளும்படியிருக்கும் என்று சொல்லிவிட்டு ஞான மார்க்கத்தைத் (பெருமாளை தியானம் பண்ணுவது) தழுவினார்கள். பிரம்மா அப்புறம் ஏழு பேர்களை சிருஷ்டித்து அவர்களை லோகத்தில் (பூலோகத்தில்) சிருஷ்டி வியாபாரம் செய்யச் சொன்னார். அவர்களும் ரிஷிகளாயினும், பார்யைகளை (பெண் சாதி) வைத்துக்கொண்டு பிரம்மா சொன்னபடிச் செய்தார்கள். ஆகையால் பிரம்மாதான் பெருமாள் ஆண்டு வருவதற்கு பூலோகத்திலிருப்பவைகளை உண்டு பண்ணினார். பிரம்மா இது மாத்திரம் செய்யாமல் சிருஷ்டித்தவைகள் லோகத்தில் எப்படி எப்படி நடந்து கொள்ளவேண்டும் என்பதைத் தீர்மானித்து அந்த ப்ரகாரம் அவைகளுக்கு நடக்கும்படிச்செய்கிறார். அதாவது அவைகள் லோகத்தில் அந்த மாதிரி நடக்கவேண்டும் ஸ்வதந்திரமில்லாமல். இதுதான் அவரவர்கள் கர்மா (பிரம்மா எழுதி வைத்திருக்கிறது) ப்ரகாரம் நடக்கிறது என்று சொல்லப்படுவது.

மேலே சொன்ன கர்மாவில் சிருஷ்டிக்கப்பட்டவைகளுக்கு சில விஷயங்கள் நல்லதாயும் (நல்ல பலன்கள்), சிலது கெட்டதாயும் (கெடுதல்கள்) இருக்கும். ஆனால் கர்மா எப்பொழுதும் கெடுதலாகவும் இராமல் இரண்டும் கலந்து இருக்கும்.

ஸ்ரீராமருடைய பார்யையான ஸ்ரீஸீதாதேவி ராவணனுடைய அசோகவனத்தில் கட்டுப் பண்ணப்பட்டிருந்தபோது ஹநுமானுக்கு உபதேசித்தாள் :—
" என்ன அல்ப பாக்கியனாயினும் மனுஷன் வாழ் நாளான நூறு வருஷத்தில் எப்பொழுதாவது ஒரு தரம் ஸந்தோஷம் காண்பான் என்று லோகவசன மிருக்கிறதே அது என் விஷயத்தில் இப்பொழுது காணப்படுகிறது. எப்படியென்றால் :—நான் சகல பாக்யங்களையும் இழந்து படாதனவெல்லாம் பட்டு இப்பொழுது உன்னால் சொல்லப்பட்ட காதுக்கு மிகவும் இனிமையான " என் பிராணபந்து "க்களான ராம, லக்ஷ்மணர்களுடைய க்ஷேம சமாசாரத்தைக் கேட்டு ஸந்தோஷம் அடைந்தேன்."

லோகத்தில் எல்லோரும் ஸந்தோஷம் (சுகம்) அதுவும் அதை எப்பொழுதும் அடைய வேண்டுமென்று பெருமாளை ப்ரார்த்திக்கிறார்கள். ஆனால் அது கூடிவராத கார்யம். ஏனென்றால் அந்தக் கார்யம் மேலே சொல்லியிருக்கிறபடி லோகத்தில் நடக்கிறபடியால். இதை ஜனங்கள் சரியாக அறிந்து கொள்ளாமல் துக்கம் அடைகிறார்கள். பெருமாளையும் மிகவும் பக்ஷபாதி என்று கோபித்துக் கொள்ளுகிறார்கள். பெருமாள் எல்லோரையும் தன்னுடைய குழந்தைகளென்று பாவிக்கிறார். அப்படி இருக்கும் பொழுது பக்ஷபாதியாக இருப்பாரா, இருக்க மாட்டார். அவரும் ஜனங்களில் யாராவது தனனை உதவிக்குக் கூப்பிடுவாரா என்று காத்துக்கொண்டிருக்கிறார். ஆனால் அவரை ஒருவரும் அழைக்கிறதில்லை.

---

## புராணங்கள்

புராணம் என்றால் பழங்கதைகள், அதாவது வெகு நாட்கள் முன்னால் பூலோகத்தில் நடந்து போன கதைகள், அதுவும் அவைகள் பெருமாளைப் பற்றினதாக விருக்கும்.

பெருமாள் அவதாரமான வேதத்தில் மேலே சொன்னவைகள் பேசப்பட்டிருக்கும். இப்பொழுது நடக்கிற கலியுகத்திலிருப்பவர்கள் வேதத்தை அறிந்து கொள்வதற்கு சக்தியை உடைத்தாயிருக்க மாட்டார்கள். மேலும் வேதம் லோகத்திலிருப்பவை கள் போல் இந்த கலியுக காலத்தில் க்ஷீணதசையை அடைந்து மறைந்து போகுமென்று கருதி பெருமாள் அவர்கள் மேல் கருணை கூர்ந்து தன் அம்சபூதரான வேதவ்யாஸரை வேதத்தில் பேசியிருக்கிற கதையான விஷயங்களைத் தன்னுடைய குழந்தைகளான ஜனங்களுக்குப் புராணமாக பிரகசிக்கச் சொல்ல, அவரும் பெருமாள் ஆக்ஞையை சிரஸில் வைத்துக்கொண்டு புராணங்களை எழுதி பூர்த்தி பண்ணியிருக்கிறார். பெருமாள் ஜனங்களுக்கு எவ்வளவு உதவி பண்ணியிருக்கிறார் பார். ஆனால் இன்னொரு விதமாக இந்த விஷயத்தை கவனித்தால் வேறு மாதிரியாகத் தானிருக்கும். அது எப்படி என்றால்: பெருமாள் தான் நடத்துகிற பூலோக நாடகத்தில் நடிகர்களுக்கு மேலே சொன்ன உதவியைக் கொடுத்து நன்றாக தனக்கு அந்த நாடகம் ஆனந்தம் கொடுப்பதற்காக செய்த காரியமது என்று சொல்லலாம். ஆனபோதிலும் இதையும் பெருமாள் செய்த லீலை என்று கருத வேண்டும்.

வேதவ்யாஸர் 18 புராணங்களேயும் 18 உபபுரா ணங்களேயும் செய்திருக்கிருரென்று சில புராணங் களே கூறுகின்றன. அவைகளில் சொல்லிய விஷயங்கள் அநேகமாக ஒரே மாதிரியாக விருந்தா லும் அவைகள் வெவ்வேறு காலங்களில் நடந்தபடி யால் சில வேறுபாடுகளுடன் நடந்திருக்க வேண் டும். ஆதலால் அவைகள் நடந்த மாதிரி பேசப் படுகிறது.

வேறுபாடுகளுடன் புராணங்களில் பேசப்பட்டி ருக்கிற விஷயங்களிலொன்று லோகாதிபத்தியத் தைப் பற்றினது. அது என்னவென்ருல், சில புராணங்களில் விஷ்ணுவையும், சிலவற்றி சிவனேயும், சிலதில் ப்ரம்மாவையும், இன்னம் சில வற்றில் தேவியையும், இன்னம் சில பேர்களேயும் லோகாதிபத்யம் வஹித்தார்களென்று பேசப்படு கிறது. அது நிஜமாக விருக்குமா? ஏனென்ருல் ஸ்ரீ மஹாவிஷ்ணுவைத் தான் லோகாதிபர், அதா வது லோகத்தை ஆளுகிறவர், என்று கருதுகிருர் கள். ஆம், நிஜந்தான். ஆனல் மற்றவர்களெல்லாம் நிஜமானவர்களல்ல. ஸ்ரீ மஹாவிஷ்ணு தன் லீலேக் காக அவர்களுடைய ரூபத்தை வஹிக்கிருர். அதாவது எந்த எந்த புராணம் எவரை லோகாதி பர் என்று சொல்லுகிறதோ, அந்த ஸமயத்தில் ஸ்ரீ மஹாவிஷ்ணு அவருடைய ரூபத்தை எடுத்துக் கொண்டு லோகாதிபத்யத்தை வஹிக்கிருர். அத ஞல் தான் விஷ்ணுவும் மற்றவர்களே லோகாதிப ரென்று சொல்லி நடந்து கொள்ளுகிருர் போலும்.

மேலே சொல்லியிருக்கிற விஷயம் என்ன தெரி
விக்கிறதென்ருல் ஒருவரே தன்னை வெகு ரூபங்க
ளாக ஆக்கிக்கொண்டு தானும் அவைகளுடன்
கலந்துகொண்டு எப்படி எப்படி நடந்துகொண்டு
பூலோக நாடக மேடையில் நடித்தால் தனக்கு
ஆனந்தம் கொடுக்குமோ அந்த மாதிரி செய்த
பெருமாள் கதைகளைப்பற்றி வேதவ்யாஸர் புராணங்
களில் பரக்க பேசியிருக்கிருர், அதுவும் பெருமாள்
ஆக்ஞைப்படிக்கு.

# நிகழ்காலம்

லோகத்தில் இப்பொழுது நடக்கிற காலம் எல்லாரும் விரும்பத்தகாதது. ஏனென்றால் இப்பொழுது நடக்கிறவைகளெல்லாம் அனேகமாக கெடுதலாக வேதானிருக்கும், அதாவது சரியாகயிராது (எப்படி எப்படியிருக்க வேண்டுமோ அப்படிக்கில்லாமல்). ஆகையால் இந்தக்காலத்தில் ஜனித்தவர்களுடைய கர்மம் ஒவ்வொருவருடைய முன் ஜன்மங்களில் செய்த புண்யபாபகாரியங்களை அநுஸரித்து (ஒட்டி)யிருக்கும். அதாவது புண்யமான காரியங்கள் நல்ல பலனைக் கொடுக்கும், பாபகாரியங்கள் கெடுதலான பலனைக்கொடுக்கும், எப்படி எப்படியிருக்குமோ அப்படி நடக்கும். அனேகமாக (கர்மம்) எல்லாருக்கும் பாபகாரியம் அதிகமாகவும், புண்யகாரியம் மிகவும் குறைவாகவுமிருக்கும், அதாவது ஜனங்கள் தர்மங்கள் குறைவாகவும் அதர்மங்கள் அதிகமாகவும் பண்ணுவார்கள். இதரம் "மற்ற யுகங்களில் (க்ருதம், த்ரேதா, த்வாபரம்) பெருமாளை அடைவதற்கு வெகு ப்ரயாசைப்பட வேண்டும். கலியுகத்தில் பெருமாளை சுலபமாக அடையலாம். நாமஸங்கீர்த்தனம் பண்ணு" என்று வேதவ்யாஸர் ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் சொல்லியிருக்கிறார். இந்த கலியுகத்தில் (அதாவது இப்பொழுது) பெருமாளுடைய நாமஸங்கீர்த்தனம் பண்ணுவது அதாவது பெருமாளுடைய பெயரைச் சொல்வது. அப்படிச் செய்தால் ஜனங்களுக்கு உதவி பண்ண பெருமாள் முன்வருவார். "யாராவது தன் உதவிக்கு என்னைக் கூப்பிடுவாரோ என்று காத்துக்

கொண்டிருக்கிறேன். ஆனால் ஒருவரும் என்
அழைக்கிறதில்லை" என்று பெருமாள் சொன்
னதாக பெரியோர்கள் சொல்ல கேட்டிருக்கிறோ
அது வாஸ்தவம்தான். இந்த கலிகாலத்தி
பெருமாளை கூப்பிடாதவர்கள் தான் ஜாஸ்தியா
இருப்பார்கள். ஆனால் அவர்களும் அவர்களுடை
நல்ல (ஸரியான) காலம் வரும்பொழுது ஸரியா
வழிக்கு (பெருமாளைக் கூப்பிடுவது) வந்து விடுவா
ஆகையினால் ஒருவரையும் ஒன்றும் சொல்ல
கூடாது.

இப்பொழுது லோகத்தில் எல்லாரும் ஏத
காக ஜன்மம் எடுக்க வேண்டுமென்றால் எல்லா
ரும் முதலில் ப்ரம்மா ஸ்ருஷ்டி செய்யும்பொழு
எங்கேயிருந்தோமோ அந்த இடத்திற்கு திரும்பி
போகவேண்டும். அந்த இடம் எதுவென்றா
பெருமாளிடமே. அதாவது பெருமாளையே அடை
வேண்டும். ஆகையால் அந்தக் காரியத்தை
செய்வதற்கு மேலே சொல்லியிருக்கிற மாதிரி பெரு
மாளுடைய நாமத்தை கீர்த்தனம் பண்ணவேண்டும்.
அது எப்படி பண்ணுவது என்பதை அவரவர்களு
டைய ஆசார்யனை அடைந்து கேட்டுத் தெரிந்து
கொள்ள வேண்டும். ஆசாரியன் எப்படியிருக்க
வேண்டுமென்றால் அவர் அவரவர்களுடைய
ஜாதியை (எந்த ஜாதியில் ஜனித்தார்களோ அந்த
ஜாதி)ச் சேர்ந்தவராக இருக்கவேண்டும். அதாவது
அதே ஜாதியில் அவரும் பிறந்திருக்க வேண்டும்.
ஜாதி மாற்றம் பண்ணி இருக்கக் கூடாது. இந்த
மாதிரி ஆசாரியார் யார் என்றால் பெருமாளே

தான் நேரில் வராமல் இன்னொருவரை தனக்குப் பதிலாக ஏற்படுத்திக் கொள்ளும்படி செய்து கொள்ளுகிறார். ஆகையால் பெருமாளே எல்லாவற்றையும் செய்கிறார். பெருமாள் எவ்வளவு கருணையுடன் செய்கிறார் பார். ஆகையால் எல்லோரும் பெருமாளை ப்ரீதி பண்ணி வைக்கவேண்டும். அதாவது எந்தக் காரியத்தைச் செய்தால் அவர் ப்ரீதி அடைவாரோ அந்தக் காரியத்தைச் செய்யவேண்டும்.

எல்லாம் பெருமாள் செய்கிறார் என்று சொல்லி விட்டு பெருமாளை ஸங்கீர்தனம் பண்ண வேண்டுமென்றால் அது எப்படி முடியும் என்ற கேள்விக்கு பதில்: பெருமாள் அவரவர்களுடைய ஆசார்யர் மூலமாக ஒவ்வொருவரையும் தன்னை ஸங்கீர்தனம் பண்ணும்படிச் செய்வார்.

இப்பொழுது 27 சதுர்யுகங்கள் முடிந்து 28வது சதுர்யுகத்தில் கலியுகம் முதல் பாகம் நடைபெறுகிறது. மேலே சொல்லியிருக்கிற விஷயங்களெல்லாம் நடக்கிற காலத்திலிருப்பவர்களுக்கு உபயோகமாகும், ஒவ்வொரு சதுர் யுகத்தில் வெவ்வேறு மாதிரியாக இதுவரையில் நடந்திருக்கிறபடிய

இத்துடன் "பக்தி தாரை" பெருமாளால் ப்ரீதிக்காக மனோ பக்தன் மூலமாகப் பேசப்பட்டு முடிவு அடைந்தது.

ஓம். தத். ஸத்.

---